

श्रीगुरुभ्यो नमः

# नारद भक्ति सूत्राणि

महर्षिनारद प्रणीतानि

# நாரத பக்தி ஸூத்திரம்

மஹர்ஷி நாரதர் இயற்றியது

தமிழ் விரிவுரை :

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி

श्रीगुरुभ्यो नमः

# नारद भक्ति सूत्राणि

## महर्षि नारद प्रणीतानि

# நாரத பக்தி ஸூத்திரம்

## மஹர்ஷி நாரதர் இயற்றியது

*தமிழ் விரிவுரை :*

**வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ**

*ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி*
*ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய பூஜ்ய*
**ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ**
*பீடாரோஹணஸ்வர்ண ஜயந்தீ*
*பாத ஸமர்பணம்.*

*வெளியிடுபவர் :*

**சிமிழி வெங்கடராம சாஸ்திரி டிரஸ்ட்,**
22, வீரேச்வரம் அப்ரோச் ரோடு, ஸ்ரீ ரங்கம்,
திருச்சிராப்பள்ளி - 620 006.

சுபானு - 2003

முதல் வெளியீடு



விலை 60.00

கிடைக்குமிடம்:

(1) வைத்யS.V.ராதாகிருஷ்ண சாஸ்திரி,

22, வீரேச்வரம் அப்ரோச் ரோடு, ஸ்ரீரங்கம் - 620 006.
போன் - 2432564.

(2) அகஸ்தியர் புத்தக சாலை,

நந்திகோவில் தெரு, திருச்சிராப்பள்ளி - 620 002,
போன் - 2700061.

(3) ஜயலக்ஷ்மி இண்டோலாஜிகல் புக் ஹவுஸ்,

6, அப்பர்ஸ்வாமி கோயில் தெரு, மைலாப்பூர்,
சென்னை - 600 004. போன் - 24990539.

Lasertypeset & Printed at :
**V.K.N. ENTERPRISES**
8/1, Dr. Rangachari Road, Chennai-4 Ph: 2495 0775

# நாரத பக்தி ஸூத்திரம்

## பொருளடக்கம்

**முன்னுரை**



**நாரத பக்தி ஸூத்திரம் - அத்தியாயம் 1**



**இரண்டாம் அத்தியாயம்**



**மூன்ரும் அத்தியாயம்**



**நான்காம் அத்தியாயம்**



**ஐந்தாம் அத்தியாயம்**

# ஸமர்பணம்

வாழ்க்கையில் பல இனிய வாய்ப்புகள் கிடைத்துள்ளன. பெரும்பாலும் இவை வாழ்க்கைக்கு மெருகு ஏற்றியுள்ளன. நல்ல குருவரர்களின் அருகாமை பெற்றது இவற்றுள் சிறந்தது. பகவதனுபவம் பல வழிகளில் பெற முடிந்தது. அதனை அனுபவம் பெற்றவருடன் கலந்துரையாட பொன்மலை **ஸ்ரீ ராமகிருஷ்ண சாரதா ஸமிதி** அதிக வாய்ப்புகள் தந்தது. அப்போது நிகழ்த்திய **நாரத பக்தி ஸூத்திரம்** சொற்பொழிவைக் கேட்டவர் நூல் வடிவில் அதனைப் பெற விரும்பினர். கோவை அசோகா. பாக்குத் தூள் கம்பெனி அதிபர் ஸ்ரீ M.K.குப்புராஜ் அவர்கள் மனமுவந்து முழு நிதி உதவியளித்து உருப்பெறச் செய்துள்ளார். தேவி உள்ளத்தில் அமர்ந்து எழுத்து வடிவம் தந்துள்ளாள். நூல் வடிவம் பெற்றுள்ளது.

பெரும்போற்றதலுக்குரியவர்களான **ஸ்ரீ காஞ்சீ ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பீடத்ததிபர்கள்** பரமபூஜ்ய **ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள்** அவர்களின் பீடாரோஹணஸ்வர்ண ஜயந்தீ ஆண்டில் பூஜ்ய **ஸ்ரீ சரணர்களின் ஸ்ரீ சரணங்களில்** எமது காணிக்கையாக ஸமர்ப்பிக்கப்படுகிறது.

ஸ்ரீ ஸ்ரீ சரணர்களின் பேரருள் இன்று வரை மங்கள நல்வாழ்வு தந்து வாழ்விற்குப் பொருள் காண வாய்ப்பளித்தது.

இனியும் பின்வரும் ஸந்ததிகளுக்கும் என்றும் எல்லா வகைகளிலும் அருள்புரிய வேண்டுவோம்.

**मदाराध्य श्रीमद्गुरुचरणनिर्णेजन जलैः**
**पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया।**

22, வீரேச்வரம் அப்ரோச் ரோடு,
ஸ்ரீரங்கம் - 620 006.
15-6-2003.

**S.V.ராதாகிருஷ்ணசாஸ்திரீ**

# முன்னுரை

## பக்தியும் அன்பும்

இறைவனைப் பற்றிக் கொள்வதற்கான உள்ளத்தின் நாட்டம் பக்தி எனப்படுகிறது. நாட்டம் எனும் உள்ளத்தின் செயலை அன்பு எனும் உணர்வு நிறைவு செய்கிறது. அன்பு என்பது ஒருவழிப்பயணம். அன்பால் பற்றப்பெறுபவரிடம் தனது அன்பு எத்தகைய எதிர் உணர்வை உண்டாக்குகிறது என்ற சிந்தனையின்றி, எந்த எதிர்பார்ப்புமின்றி, அவரைப் பற்றுகிறது. அதுவே தான் முழுதும் பெரிதும் விரும்புகிற பிரியம், அதுவே தனக்கு ஹிதமும் மங்களமும் கூட. இந்த உள்ளம் நிறைந்த கனிவு அன்பாக வெளிப்படுகிறது. அதில் 'நான்' 'எனது' என்ற இரு எண்ணங்களின் சுற்றும் கட்டும் இல்லை. உலகியல் அனைத்திலும் 'நான்' 'எனது' என்ற எண்ணங்களே சூழ்ந்து நின்று நம்மைக் கட்டி அவற்றின் வசப்படுத்துகின்றன. இந்த அன்பு உள்ளத்தின் உணர்வை அவை கட்டுப்படுத்தாது. அவை கட்டுப்படுத்துவதை உணர்ந்தால் தூய அன்பும் வேதனை தரும். 'நான்'ம் 'எனது'ம் இழந்த தூய உணர்வில் இந்த பக்தி எனும் அன்பு மலரும். அன்பால் பற்றப்பெறும் பொருள் உள்ளத்தை நிரப்பி அதனைத்தவிர வேறொன்றின் இருப்பை உணர்த்தாது. அதனால் 'நான்'க்கும் 'எனதுக்கும்' இடமில்லை. பக்தியால் அகந்தை (நான்)யும் மமதை (எனது)யும் அகன்றதா? அகந்தையும் மமதையும் அகன்றதால் பக்தி உள்ளத்தில் தோன்றியதா? வெளிச்சம் வந்த பின் இருட்டு அகன்றதா? இருட்டு அகன்றதும் வெளிச்சம் நுழைந்ததா? இது சிந்தனைக்கு அப்பாற்பட்டதொன்று.

**பக்தி என்ற சொல்:-** அன்பால் இறைவனைப் பற்றிக் கொள்ளத் தொடங்கி இறைவனின் அம்சமாகி இறைவனாவதும் உண்டு. பக்தி என்ற சொல் भज என்ற வினைச்சொல்லின் உருவங்களில் ஒன்று. ஒன்றைச் சென்றடைவதும் அதற்காகப் பணிபுரிவதும் அதன்

உட்பொருளைச் சென்றடைவதும் பொருளின் பகுதியாக பங்காக (பாகமாக) மாறுவதும் இதன் பின் விளைவு. சென்றடைந்த பாங்கால் அதனைத் தன் பகுதியாக உணரவும் கூடும். தான் அதன் பகுதியாக, அது தன் பகுதியாக என்று வேறு வேறு நிலை உணர்வுகளின் போதும் இந்த இருநிலை உணர்வுகளும் தோன்றாமல் அத்வைத நிலை உணர்வும் ஏற்படலாம்.

**அன்பால் இணைதல் :-** தாயும் மகனும், கணவனும் மனைவியும், இறைவனும் பக்தனும் என அன்பால் இணைந்த இருஉள்ளங்கள் பல உண்டு. அன்பால் இணைந்ததும் இருஉள்ளங்கள் என்ற நிலை அகன்று ஒரே உள்ளமாக உணர்வதும் செயல்படுவதும் பேரன்பின் வெளிப்பாடு. உலகின் பார்வைக்கு இது அகப்படாது. இது எப்படி நேர்ந்தது ? அவ்வாறு இணைய எவ்வாறு இயலும் ? என்று காரியகாரணவிசாரம் இங்கு பயனற்றது. எந்த உணர்வும் தானே எழுகிறது. தான் தனது என்ற உணர்வுகளும் அத்தகையவே. அவை மறைவதும் தானே நிகழ்கிறது. உள்ளத்தையும் ஏவுகிற பேருணர்வின் லீலை இது. அந்தப் பேருணர்வின் ஒளி, தடையுறாமல் மறையாமல் இருக்கவேண்டும். அவரவருக்குக் கிடைத்துள்ள சிற்றுணர்வுமையத்தில் மறைவோ மாறுபட்ட நிலையுணர்வோ நேராதபடி அமைந்தால் தூய உணர்வைப் பெறலாம். உணர்வின் தூய நிலையில் சிற்றுணர்விற்கும் பேருணர்விற்கும் இடையே வேற்றுமையில்லை. அன்பால் இணைந்த உள்ளங்களிடையே உடல் சூழ்நிலை முதலிய தடுப்புகள் விலக ஒரே உணர்வெனும் ஒளி இயங்குகிறது. தனித்து சுகதுக்கங்களோ விருப்புவெறுப்புகளோ அத்தகைய எதிரிடை உணர்வோ தோன்றாத அத்வைத நிலை அது.

ராமனுக்கும் ஸீதைக்கும் இடையே உள்ள உள்ளத்திணைப்பு பற்றி பவபூதி என்ற கவி உத்தரராமசரிதம் எனும் நாடகத்தில் கவிப்பார்வையில் தான் உணர்ந்ததை ஒரு சுலோகத்தில் வெளிப்படுத்துகிறார்.

अद्वैतं सुखदुःखयोः, अनुगतं सर्वास्ववस्थासु यद्
विश्रामो हृदयस्य यत्र, जरसा यस्मिन्नहार्यो रसः।
कालेनावरणात्ययात् परिणते यत्स्नेहसारे स्थितं
भद्रं तस्य सुमानुषस्य कथमप्येकं हि तत्प्राप्यते॥

"நான் தனி, நீதனி" என்ற வேற்றுமையின்றி உள்ளங்கள் இணைகின்றன. தனித்து உள்ளங்கள் உணரும் போது அவனது சுகம்வேறு, இவளது ஸுகம் வேறு. அந்த நிலைமாறி இவளது சுகமே அவனது சுகமானது. இருவரது உள்ளங்களும் பரஸ்பரம் இடம் மாற்றிக்கொண்டு விட்டனவோ ? अस्या देव्या मनस्तस्मिन् तस्य चास्यां प्रतिष्ठितम् என்று வால்மீகியின் ஹனுமார் இந்த உள்ளத்து பரிவர்த்தனையை வியப்புடன் காண்கிறார். ஸீதையின் பார்வையில் எதிரிலுள்ள அரக்கிகள் படவில்லை. திறந்துள்ள இருவிழிகளாலும் எங்கோ உள்ள ராமனையே காண்கிறாள். மனமும் பொறிகளும் கூட அன்புணர்வால் காலதேசவரை மீறிச்செயல்படுகின்றன. नैषा पश्यति राक्षस्यो नेमान् पुष्पफलद्रुमान् । रामस्थहृदया नूनं राममेवानुपश्यति । ராமனது உள்ளம் மட்டும் உணர்கிற சுகதுக்கங்களை எங்கோ பிரிந்துள்ளவள் அப்படியே உணர்கிறாள். அன்பால் இணைந்த இருஉள்ளங்கள், பிரிவால் தனித்து இருக்கிற நிலையுணர்வின்றி, இருவேறு உடல்களும் பொறிகளும் மனமும் தருகிற காட்சிகளின் உணர்வின்றி, இதயத்தில் அமைதி நிறைந்து செயலற்று நிற்க அன்பின் நிறைவு உதவுகிறது. தம்பதிகளின் இளமையோ முதுமையோ எட்டி நிற்பதோ அருகாமையோ நேரமோ எதுவும் தடைசெய்ய இயலாது. பிறரால் பறிக்க இயலாத ஒரு பேரானந்த நிலைக்கு அன்பு அழைத்துச் செல்கிறது.

**அன்பில் இயல்பும் செயற்கையும் :-** அன்பெனும் உணர்வு செயற்கையல்ல. எனினும் தனித்த இருஉள்ளங்கள் வேற்றுமையற்ற நிலையைச் செயற்கையாக ஏற்று உதட்டளவில் அன்பொழுகப் போலியாகப்பேசிப் பழகிப் பழகித் தான் உண்மையான அன்பை உணரமுடிகிறது. பல

ஆண்டுகளின் இடையறாத பயிற்சியும் வேறு நிலைகள் எழுவதைத் தடுக்கின்றமுயற்சியும் தான் இந்த நிலைக்குக் கொண்டு சேர்க்கும். இது அன்பின் யோகத்திற்கான பயிற்சி. அப்பியாஸமும் வைராக்கியமும் எல்லா யோகப் பயிற்சிகளுக்கும் முன்னோடிகள். **अभ्यासवैराग्याभ्यां तत्सिद्धिः** என்பதே பதஞ்ஜலியின் யோக ஸூத்ர உபதேசம்.

அன்பென்பது இயல்பே. செயற்கையாகப் பெறத்தக்கதல்ல. அன்பெனும் நீர் ஊற்று நம் உள்ளத்திலும் நிலைபெற்றுள்ளது. ஆனால் அது வெளிப்படாதவாறு ஆவரணங்களும் (தடைகளும்) விக்ஷேபங்களும் (மாற்றுணர்ச்சித் தாக்கமும்) முன்வினைவிளைவாக அமைந்துள்ளன. அவற்றை முயன்று அகற்றி, தெளிந்த அன்பூற்றை உள்ளத்தில் பாயச்செய்யலாம். முறையும் வழியுமறிந்து முனைந்து ஈடுபாட்டுடன், வேறு நோக்கின்றி, உள்ளம் பொருந்தி, தொடர்ந்து பழக, அன்புணர்வும் இயல்பாகிவிடும். ஆற்றுப்படை, வழிபாடு, யோகம் என்று அன்பால் இருஉள்ளத்து இணைப்பை விளக்குவர்.

**அன்பின் நிலைகள்** :- தன்னைக் காட்டிலும் மேம்பட்டதும் அன்புக்குரியதுமானதொன்றை அன்பால் பற்றுவது **பக்தி**. மேம்பட்டதொன்று தன் அன்பிற்காக ஏங்கி நிற்கவில்லை; நான் தான் அதனிடம் அன்பால் இணைகிறேன்; அந்த இணைப்பு பெற ஏங்கிநிற்கிறேன் என்ற நாட்டத்திற்கான தூண்டுதலை பக்தியில் காணலாம். தன்னைக்காட்டிலும் பெரியதல்லாததொன்றை அன்பால் பற்றுவது **வாத்ஸல்யம்**. தன் அன்பிற்காகத் தன் சிசு ஏங்கிநிற்பதாகவும் அதனை நிறைவுபெறச் செய்வதே தனக்கு இன்பம் தருகிறது என்ற எதிர்பார்ப்பும் தாயுள்ளத்தை சிசுவின் உள்ளத்துடன் இணையச்செய்கிறது. கன்றைத் தொடர்ந்தோடுகிற பசுபோல் சிசுவைச்சுற்றியே தாயின் உள்ளம் வட்டமிடுகிறது. கணவன்-மனைவிக்கு இடையே வரும் அன்பு காதலாகிறது. நண்பரிருவருக்கு இடையே நட்பாக மலர்கிறது. குரு-சிஷ்யர்கள், இறைவனும் பக்தனும் என்றிணையும் போது குரு

சிஷ்ய வத்ஸலனுக, இறைவன் பக்தவத்லனுக மாறுவது உண்டு. இருவரிடமும் தாய்மை எனும் இணைப்புச் சிறப்பு கூடுகிறது. குருபக்தனுன சிஷ்யனிடமும் தெய்வபக்தனுன பக்தனிடமும் பக்தி ஒரு யோகஸாதனமான நிலைபெறுகிறது. இங்கு அன்பே ஸாதனமாகி ஸாத்யமான அன்பிணைப்பைப் பெற்றுத்தருகிறது.

அன்பை உயிரினமனைத்திடமும் காட்டமுடியும். அன்புடன் அணுகிப் பரிவும் கரிசனமும் காட்டி உயிரினத்திற்கு உதவமுடியும். பின் அன்புடன் அணுகுவதே பெரும் சாதனையாகும். நாம் காட்டுகிற அன்பின் பிரதிபலிப்பு அவற்றிடம் காணப்பெறும்போது பேரானந்தம் தோன்றும். ஒவ்வோர் உயிரினத்தின் உள்ளத்திலும் நின்று இயக்குகிற பரம் பொருளிடம் இணைக்கிற அன்பாக அது மாறலாம். எல்லாவற்றிலும் உறைந்துள்ளவராக இறைவனைக் காணலாம். இறைவனே எல்லாமானவராகவும் அது உணர்த்தக் கூடும். அன்பே ஸாதனமாக படியாக மேல் நிலையாக, அடையத்தக்க பெரும் பேருக மாறி மாறி ஜாலம் புரிவதைக் காணலாம். மனிதநேயத்தின் மேனிலைக்கு வழிகாட்டி, உயிர்நேயத்திற்கு அழைத்துச் சென்று அதுவேயாயும் எல்லாமாயும் இறைவனை நம் உணர்விற்கு உட்படுத்த அன்பால் தான் முடியும்.

புலனுகர்ச்சிக்கும் மனத்தின் எண்ணத்திற்கும் புத்தியின் அறிவிற்கும் சித்தத்தின் பதிவிற்கும் அப்பால் அன்புணர்வு நம்மை அழைத்துச் செல்லும். ஒரு சில பாக்கியவான்களே இதனைக்கருவில் பெறுவர். பிரஹ்லாதன் நாரதரின் அருளால் இந்தப் பேறு பெற்றவன். பிறந்து தானே வாழ்ந்து மாற்ருந்தாயும் தாயும் உணர்த்தியபின் சுயநல உந்துதல் காரணமாக அஹந்தையும் மமதையும் அன்புணர்வை மறைக்க நாரதரின் வழிகாட்டலால் அன்புள்ளமாக மாறி இறைவனைக் கண்டுகளித்த துருவனும் இந்தப்பேறு பெற்றவனே. இவர்கள் இருவருக்கும் வழிகாட்டிய நாரதரும் பெரியோர்களின் எதிர்பார்ப்பற்ற வழிகாட்டலால் இறையுணர்வு பெற்றவர்.

**அன்பு யோகம் :-** பிறந்ததிலிருந்து இதுகாறும் தொடர்கிற உணர்வுகள் இயல்பான அன்புணர்வை மறைப்பவை. அன்பிற்குமாறுன கொடும் சொல்லும் எண்ணமும் செயலும் பழகிப்பழகி அன்புணர்வை மறைத்து விட்டன. அன்பற்ற வரண்ட நிலேயே இயல்பெனக்காட்டி நல்லுணர்வுகளுக்கு இடம் தரத்தடை ஏற்பட்டது. இயல்பாக உள்ளதைத் திரும்பப்பெறுகிற உபாயமே யோகம். அதற்கெதிரானவற்றை நம்மிடமிருந்து பிரிப்பது வியோகம். அது யோகத்தின் முதல்படி. அனுகூலமானவற்றுடன் இணைப்பது ஸம்யோகம் இந்த வியோகமும் ஸம்யோகமுமின்றி யோகம் அமையாது. அஞ்ஜலிசெய்வது இறையருள் பெறுவதற்கான யோகம். இது செயற்கை என முதலில் தோன்றுகிறது. அதற்காக இருவேறு நிலேகளிலிருந்த கைகளை அந்நிலேயிலிருந்து பிரித்து இரு உள்ளங்கைகளுடன் ஒன்ருெடொன்று பொருந்துபடி இணைக்கிருேம். அவ்விணைப்பில் ஏற்பட்ட பழக்கம் வழக்கமாக எங்கும் ராமபிரானைக் காண்கிற ஆஞ்ஜநேயர் போல் எவரையும் மதித்துக் கைகூப்பி வரவேற்கிருேம். அஞ்ஜலியில் இரு உள்ளங்கைகள் பொருந்தும் அழகை உணரும் போது கைகளின் உட்புறம் இதற்காகவே அமைந்துள்ளதென்பதும் அஞ்சலியே அவற்றின் ஆதாரமான இயல்பு என்பதும் புரிகிறது. அன்புள்ளம் படைத்தவனுக்கு ''தனது'' என்றுள்ளதனைத்தும் அன்புக்குரியவருடையதே என்ருகும்.

**நாரதர் எனும் குரு :-** ஸ்ரீமத்ராமாயணம் இயற்ற வால்மீகி மஹரிஷிக்கும் ஸ்ரீமத்பாகவதம் இயற்ற வியாஸமஹரிஷிக்கும் வழிகாட்டியவர் நாரதரே. நாரதருக்கு இந்தத் தகுதி தவத்தாலும், உயர்ந்த நூலறிவாலும், உணர்ந்ததை உள்ளபடி மொழிகின்ற ஆற்றலாலும் வந்தது. ராமாயணம் தன் முதல் சுலோகத்தில் இதை வெளியிடுகிறது.

**तपः स्वाध्यायनिरतं तपस्वी वाग्विदां वरम्।**
**नारदं परिपप्रच्छ वाल्मीकिर्मुनिपुङ्गवम्।**

நாடவிரும்பியதை உடலாலும் உள்ளத்தாலும் அணுகித்தொடர்ந்து முனைந்து முயன்று நாடியதுகிட்டும் வரை உழைப்பது **தவம்**. கற்பதைக் கசடறக்கற்று, பின் அதன்படி நின்று வாழ்ந்து கற்றதும் வாழ்ந்ததும் ஒத்ததே என்று பெறுகிற அறிவைத் தன் சுய அறிவுடன் இணைத்து அவ்வறிவைக் கொண்டு கற்றதை ஆராய்வது **ஸ்வாத்தியாயம்**. தவத்தாலும் ஸ்வாத்யாயத்தாலும் பெற்ற பயன் மாமுனிவனுடையது. தன்விருப்பப்படி மனமும் அறிவும் பொறிகளும் இயங்கவும் கட்டுப்படவும் அவற்றைத் தன் வசத்தில் கொண்டவனே **முனி**. அவனது இயல்பே மௌனம். சொல்லவேண்டியதை மட்டும் தக்க சொல்லால் கேட்கத் தகுதியுள்ளவனுக்கு, சொல்லவேண்டிய அளவு நேரம் மற்றும் குறிக்கோள் உணர்ந்து இதமும் மென்மையும் மங்களமும் தவழப்பேசுபவனே **வாக்மீ**. சொல்லுடையான். நாரதரிடம் இவ்வனைத்தும் பொருந்தும்.

நாரதர் பல கோணங்களில் அன்பை உணர்ந்தவர். பகவானிடம் மேலான பக்தி கொண்டவர். வால்மீகி வியாஸர் முதலான மஹாஜ்ஞானிகளுக்குப் பக்திப்பாதை காட்டி, அவர்களது நூல்களால் உலகிற்குப்பக்தியைப்புகட்டச்செய்த ஆசாரியர். துருவன். பிரஹ்லாதன் முதலானோரின் உள்ளத்தில் கள்ளம்கவடற்ற அன்புணர்வைத்தூண்டி மேனிலைக்குக் கொணர்ந்த தாயானவர். தீவிர எண்ணப் பதிவால் முரடர்களான கம்ஸன் முதலானவர்களிடம் கலகம் விளைவித்து தடுமாறச்செய்து ஏதோ ஒருவகையில் காமத்தாலோ கோபத்தாலோ பகவானைத் தவிர வேறிடத்தில் சிந்தை செல்லாமல் பகவானிடம் மட்டுமே சிந்தை பதியச்செய்து எதிர்மறையாகப் பக்தி உணர்வை ஊட்டியவர்.

**பக்தி எனும் உணர்வு - பக்தி இலக்கியம் எழுதியவர்** :- மென்மை மிக்க உணர்வுகளுக்கு இலக்கணம் வகுப்பது எளிதல்ல. உணர்வு வெளிப்படுகிற சூழ்நிலைகள் எண்ணற்றவை. அன்பு காட்டுபவனின் தன்மையும் அன்பு காட்டப்படுவதன் தன்மையும் இடையே பாலமாக அமைகிற அன்பின் தன்மையும் என்றதொரு திரிபுடீ. இது இவ்வாறு,

இத்தகையது என்ற வரையறைக்கு உட்படாதது. பல கோணங்களில் தான் பெற்ற அனுபவத்தை முறைப்படுத்தி பக்தியின் இலக்கணத்தை இந்த பக்தி ஸூத்திரங்களில் நாரதர் விளக்கியுள்ளார். பக்திஸூத்திரங்களைத் தந்தவர்களில் நாரதரைப் போல் சாண்டில்ய மஹரிஷியும் புகழ்பெற்றவர். நாரதரின் பக்திஸூத்திர நூலில் 84 ஸூத்திரங்கள். சாண்டில்யரின் பக்தி ஸூத்திரத்தில் 100 ஸூத்திரங்கள். சாண்டில்யர் சாஸ்திர ஆராய்ச்சி முறையைக் காட்டுகிறார். ஸ்ரீமதுஸூதந ஸரஸ்வதீ, ஸ்ரீநாராயண தீர்த்தர், (காசீ) ஸ்ரீஹரிஹராரண்யர், ஸ்ரீபோதேந்த்ர ஸரஸ்வதீ ரூபகோஸ்வாமி, சைதன்யமகாப்ரபு முதலிய பல மகான்கள் பக்தி பற்றிய விளக்க நூல்கள் தந்துள்ளனர். மக்களிடையே பல நிலைகளில் பக்தியைப் புகட்டுவதில் ஸ்ரீமத்பாகவதம் முதலிய புராணங்களுக்கே முதலிடம். பக்தியாகிய மென்மை மிக்க உணர்வு, மற்ற சிற்றுணர்வுகளையும் மடைமாற்றித் தன் வசப்படுத்துகிற பாங்கை ஸ்ரீமத்பாகவதம் பல உதாரண புருஷர்களில் வாழ்க்கை வரலாற்றின் மூலம் எளிதில் மனத்தில் பதியச் செய்கிறது. ஸ்ரீமத்பாகவதத்தில் தொகுக்கப்பெற்ற பல்வேறு நிகழ்ச்சிகளில் நாரதர் தான் வழிகாட்டி. அவரவருக்கேற்றவாறு வழிகாட்ட வேண்டியிருப்பதால் பக்தியின் அணுகுமுறையில் பல சிறந்த அனுபவத்திற்கு ஒத்துவரும் வழிகளை போதித்துள்ளார். ஸ்ரீமத் பாகவதத்தைத் தொகுக்கும்படி தூண்டியவர்நாரதரே.

**நாரதர்-புராணவரலாறு:-** பரம்பொருளிடம் கல்ப முடிவில் உலகம் லயமடைகிறது. மற்றொருகல்பம் தொடர்கிறது. சரமும் அசரமும் என பரம்பொருளிடம் முன் லயித்தவை, காலம் குணம் ஜீவனின் அதிருஷ்டம் (கர்ம) என்ற வேறுபாட்டைத் தருகிற சக்திகளின்துணை கொண்டு பல கோடி வடிவங்களைப் பெறுகின்றன. உயிரினங்களிலும் பலவகை. அதில் ஜராயுஜம் என்ற வகையில் அடங்கியவற்றுள் மனித இனமும் தேவரினமும் தனிப்பெருமை பெறுகின்றன. இவர்களுக்கு வழிகாட்டியாக மக்கள் தலைவராக பிரஜாபதிகள் பிரும்மாவால் மானஸ

புத்திரர்களாக படைக்கப்படுகின்றனர். பிரும்மாவின் மனத்தின் ஆழ்ந்த பாவனையால் மட்டும் தாய் தந்தையரின் இணைதலின்றியே தோன்றியவர்கள். மற்ற ஜீவர்கள் தம் தம் வினைக்கேற்ப அமைந்த தாய்தந்தையரின் உறவினிடையே அவர்களினுட் புகுந்து வெளி வந்தவர்கள் - யோனிஜர்கள். பிரஜாபதிகளோ படைக்கப் பெற்ற உலகின் வழிகாட்டும் பொறுப்பை ஏற்கும் தகுதியுடன் வெளிவந்தவர்கள். பிரும்மாவின் படைப்பு முறையில் அவருக்கு உதவவே வந்தவர்கள். இவர்களில் நாரதர் ஒருவர்.

பிரும்மா முதல் புழுவரை அனைவரையும் அவரவரது முன்வினை தான் அந்தந்த நிலையில் அவரவரை அமைக்கிறது. ஆஞ்சநேயர் வரவிருக்கிற பிரும்மகல்பத்தின் பிரும்மாவாகிறார். பவிஷ்யச் சதுராநந: என்றொரு நாமம் அவருக்கு உண்டு. நாரதராகும் தகுதியை அவரது முன் பிறவியின் வினைப்பயனாக அவர்பெற்றார். வியாஸரிடம் அவர் இதனை விளக்குகிறார். (பாகவதம் 1.5,6)

வேதம் ஓதுபவர்களின் ஆசிரமம். அதில் குற்றேவல் பணிபுரிகிறவளின் பிள்ளை, தந்தையை இழந்தவன். அந்த ஆசிரமத்தில் சாதுர்மாஸியகாலத்தில் தங்க வந்துள்ள துறவிகளுக்குப் பணி விடை புரிவதற்கெனப் பணிக்கப்படுகிறான். துறவிகளின் அருகாமையைப் பெற்றமையால் சிறுவரின் விளையாட்டோ நிலைகொள்ளாது எதையேனும் செய்கிற சிறுபிள்ளைத்தனமோ இவனிடம் காணோம். அடக்க முள்ளவனாக எப்போதும் அவர்களை அணுகி நின்று உபசரிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக உள்ளான். துறவிகளுக்கும் இச்சிறுவனிடத்தில் பரிவும் கரிசனமும் அதிகமாகியது. அவர்கள் தம் பக்கத்திலேயே அவனை இருக்கச் செய்தனர். தம்பிக்ஷை உணவில் மீந்ததை அவனுக்கு உணவாக இட்டனர். ஓரிடத்திலும் நிலைக்காமல் ஊர் ஊராகச் சுற்றி, பூக்களிலிருந்து தேன் போல் தாம் சேமித்த அனுபவ அறிவமுதை மற்றவர்களுடன் கலந்து சுவைக்கும் போது இவனையும் பக்கத்தில் அமர்த்திக்கொள்வர். பரமஹம்ஸருக்குச் செவியுணவாக அமைந்ததும் இவனுக்குக்

கிட்டியது. இறைவனின் பெருமைகளை அவர்கள் பாடும்போது அவை இவனது மனத்தினுள் ஆழப்பதிந்தன. பகவான் இவன் மனத்தை நிரப்பினுர். காதுகளும் கண்களும் மனமும் சிறிதும் சலியாமல் பருகப்பருகப் பகவானின் லீலைகள் அனைத்தும் தெளிவாக உள்ளத்தில் பதிந்தன. வர்ஷா-சரத் என்ற மழைநாட்கள் கழிந்ததும் துறவிகள் ஆசிரமத்திலிருந்து வெளிக்கிளம்பும் போது, உள்ளத்து அழுக்குகள் நீங்கி, பகவானிடம் செயற்கையல்லாத இயல்பான அன்பாகிய பக்தி இவனிடம் முழுதும் நிரம்பியியுள்ளதை உணர்ந்தனர் இவன் சிறுவனெனப்பாராமல், தக்க சிஷ்யனிடம் மாத்திரம் தரக் கூடிய ரஹஸ்யத்தையும் பகவத்தத்துவ உணர்வு பூர்ணமாக நிலவும்படி உபதேசித்தனர்.

பணியாளான பெண்ணின் மகனுக வளர்ந்தவன் பெரியோர்களுக்குப் பணிவிடை செய்தல், அவர்களின் பரிவிற்கு ஆட்படுதல், அவர்களின் நடைமுறையில் நாட்டம், பகவானின் பெருமை கேட்டு அவரிடம் உள்ளத்தைத் தருதல், வேறொன்றில் நாட்டமின்மை, உடலும் உள்ளமும் தன் தனித்த நிலையை இழந்து ஆத்மாவின் நாட்டத்தில் உதவும் பண்பு, பகவானிடம் திடபக்தி, பகவத்தத்துவத்தின் உணர்வு, என்று படிப்படியாக முன்னேறி, வினைப்பயனை அனுபவிக்கப்பெற்றிருந்த பிறவியை வினைப்பயனின் தொடர்பற்ற நிலையைப்பெறப் பயன்படுத்துவதாக மாற்றுகிறுன்.

துறவிகள் ஆசிரமத்தைவிட்டகன்றனர். சிறுவன் அந்த குருவரர்களையே வழிகாட்டிகளாகக் கொண்டு உடலாலும் உள்ளத்தாலும் பகவானிடம் சரண்புகுந்தான். அவனது தாயும் பசுவைக் கறக்கச் சென்றவள் பாம்பு தீண்டி இறந்தாள். காப்பாரின்றி தனித்து விடப்பட்டோம் என்று கருதாமல் இதுவும் இறைவனின் கரிசனத்தால் விளைந்தனெக் கொண்ட சிறுவன் வடக்கு நோக்கி குறிக்கோளின்றி அலைந்தான். பசியும் தாகமும் வாட்ட, புனிதமான நதியில் நீராடி, நீர்பருகியதும் பசியும் தாகமும் நீங்க அதன்கரையில் அரச மரத்தடியில்

அமர்ந்ததும் சித்தம் தெளிந்தது. துறவிகள் காட்டிய பகவானின் அருளுருவம் தெளிந்த சித்தத்தில் தோன்றியது. பகவானின் திருவடிகளில் மனம் நிலைத்தது. சித்தப்போக்குகள் அகன்றன. சித்தம் வசப்பட்டது. கண்களில் நீர்மல்க, உள்ளம் ஆனந்தத்தில் திளைக்க, அன்பால் பூரித்து உடலெங்கும் மயிர் கூச்செரிய அமைதியின் எல்லையை அடைந்து விட்ட எக்களிப்பு தோன்றியதும் திடீரென பகவானின் அருளுருவம் மறைந்தது. பரபரப்பும் தத்தளிப்பும் மேலிட இருக்கையிலிருந்து எழுந்து உடல் வெலவெலத்துத் தளர, மறுபடியும் அக்காட்சி பெற, பலவாறு முயன்றும் தியானம் நிலைக்காததால் நிலைகொள்ளாமல் அங்குமங்கும் அதனைத் தேடினான்.

அசரீரியான ஒலி ஒன்று காதில் விழுந்தது. ''நான் எவருக்கும் புலப்படாதவன். உன் சித்தத்தில் என்னிடம் அன்பு நிலவவே நான் உனக்குப் புலப்பட்டேன். இனி இப்பிறவியில் என்னைக் காண இயலாது. என்னிடம் நாட்டம் கொண்டவன் மற்றதை நாட மாட்டான். என்னைப்பற்றியவன் உள்ளத்தில் இயல்பாகப் பதிந்துள்ள பொருளாசை முதலியவற்றில் பற்றற்று இருப்பான். என்னிடம் பதித்த எண்ணம் வேறு எதனாலும் மாறாது. பிரளயம் நேர்ந்தாலும். அதன் பின் படைப்பின் தொடக்கத்தில் தோன்றுபவர் எவரும் முன்வினைத்தொடர்புடனே தோன்றுவர். என் அருளால் அப்போது உன் உள்ளத்தில் இந்த பக்தியுணர்வு முழுவதும் நிலைத்ததாக இருக்கும்.'' இந்த அருள்வாக்கு சிறுவனது துயரைத் முழுவதும் துடைத்தது. ஆகாசசரீரம் கொண்டபகவானை வணங்கி எழுந்து, அவரது நாமங்களைத் தயக்கமின்றி வாயாரப்பாடி, தனக்கு இத்தகைய மங்களமான வாய்ப்பளித்த அருட்செயலை நினைத்து நினைத்து உருகி, பூமிமுழுதும் வலம் வந்து பிரளய காலத்தை எதிர்நோக்கி நின்றான்.

உலகம் ஒடுங்கி மறையும்போது தானும் இறைவனின் மூச்சுக்காற்றில் கலந்து இறைவனுள் நுழைவதை உணர்ந்தான். பிரும்மா புதிதாக உலகை வெளிப்படுத்தும்போது. அவரது

மனப்படைப்பாக நாரதராக உலகிற்கு இறைவனைப்பற்றிய பேரறிவை (நார)வழங்குபவராக (த) வெளியானார். பகவானின் அருள் பரிபாலித்தது. பகவான் அவருக்குத் தன் பெருமைபாட வீணை தந்தார். வீணையின் நாதத்தினுள் பகவானின் பெருமையைக்குழைத்து நாதமாக பகவானின் வடிவை வெளிப்படுத்திய நாரதருக்கு, கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று கேட்டு வருபவராக, உடன் உள்ளத்தில் நின்று தன்னை இறைவன் உணர்த்திவருகிறார். **''प्रगायतः स्ववीर्याणि तीर्थपादः प्रियश्रवाः। आहूत इव मे शीघ्रं दर्शनं याति चेतसि।''**

துறவிகள் நான்கு மாதங்களில் வாழ்ந்து காட்டிச் சிறுவனுக்கும் இறையனுபவம் சித்திக்கும்படி உபதேசமும் அருளும் புரிந்தனர். எவ்வகைத் தவமும் இன்றி அவனை பக்தர்கள் அனைவரின் மகுடமாக்கிச் சென்றனர். அன்பின் வழி உடலை வருத்தாது. உள்ளத்தை நோகச் செய்யாது. ஒவ்வொருபடியிலும் ஆனந்தம் தளும்பி இதம்தரும். முதல்படிவரை தன் தொடர்ந்த முயற்சியால் சென்றவன், இறைவனைச்சார்ந்து விடுவதால் மேலே ஒவ்வொருபடியிலும் பகவானின் வழிகாட்டலையும் கைத்தாங்கலையும் உணர்ந்து எளிதில் காலூன்றி மேனிலை பெறுகிறான்.

**விதியும் மதியும் :-** நிலையற்றதிலுள்ள நாட்டம் அடங்கி நிலையானதை அடையச் செய்வதில் பக்தி பெரிதும் உதவுகிறது. இருளிலுள்ள நாட்டம் அகன்றால் தான் ஒளியால் உதவமுடியும். அழிவை நோக்கி முரண்டு செல்வதைத் தடுத்து இனியவாழ்க்கை பற்றிச் சிந்திக்க அன்பு தான் உதவும். அந்த அன்பு சிற்றின்பத்தைப் பெரிதும் நாடும்போது, சுய நலம் தன் வலிவைக்காட்டி மடை மாற்றிவிடக் கூடும். சுயநலத்தைத்தாண்டிய அன்பு பேரின்பத்திடம் அழைத்துச் செல்லும். **असतो मा सद्गमय। तमसो मा ज्योतिर्गमय। मृत्योर्मा अमृतं गमय** என்று இறைவனிடம் ஒரு பிரார்த்தனை உண்டு.

வாழ்க்கையில் சில அனுகூலமாக அமையும். அவை தொடர்ந்து அனுகூலமாயிருக்க அன்பு தான் உதவும்.

அன்பின்றிப் பழக, ஒட்டுதல் பெறாத அனுகூலமும் பிரதிகூலமாக மாறலாம். சில இயல்பிலேயே பிரதிகூலமாகவே அமையக்கூடும். வாழ வகை தெரிந்தவன் பிரதிகூலமானதையும் வளைத்துத் தனக்கு அனுகூலமாக்க அன்பின் உதவியை நாடுவான். பிரதிகூலமானதொன்று அன்பின் வசப்பட்டு அனுகூலமாகலாம். அனுகூலமாகாவிடினும் பிரதிகூலநிலையின் முழுத்தாக்கத்தையும் காட்டாதிருக்கும். எதை வளைக்க இயலாதோ அதனைப் பொருட்படுத்தாதிருக்கிற துணிவையும் அதற்கான வலிவையும் அன்பு தரும்

எவ்வாறும் போக்கை மாற்றிக் கொள்ளாதது விதி ஒன்று தான் என்று பலர் கூறுவர். இறையன்பு பிரதி கூலமான விதியின் கூர்மையை மழுங்கச் செய்யும். அனுகூலமான விதியை மேலும் அனுகூலமாக்கும். நாரதரின் வரலாற்றில் வேலைக்காரியின் மகன் என்ற சூழ்நிலை இறைவனுடன் இணைவதற்கு பிரதிகூலமாகாமல் குருவருள் தடுத்தது. மஹான்களுடன் பழகுகிற வாய்ப்பைச் சிறுவன் நன்கு பயன்படுத்திக்கொண்டான்.

**பக்தியால் பெறுகிற தெய்வத்துணை:-** அவனருளால் அவன் தாள் வணங்கலாம். அவனது தாள் வணங்கினால் அவனருள் பெறலாம். இவ்விரு நிலைகளையும் பொருத்துவது பக்தியாகும். **பரமேச்வரப்ரீத்யர்த்தம் தர்மார்த்த காமமோக்ஷபல புருஷார்த்த ஸித்த்யர்த்தம்** என்று இறைவழிபாட்டின் போது ஸங்கல்பம் செய்து கொள்வார்கள். பரமேசுவரரின் அன்பைப்பெறவும் அதன்மூலம் தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்ற பலனுக்குரித்தாக மனிதன் நாடுவதனைத்தையும் பெறவும் வழிபடுகிறேன் என்பதே ஸங்கல்பத்தின் நோக்கம். இம்மையிலும் மறுமையிலும் சுகம் தருவது **காமம்** எனும் புருஷார்த்தம். அதனையடை உதவுகிறதனைத்தும் **அர்த்தம்** எனும் புருஷார்த்தம். அந்த காமத்தையும் அதற்கு உதவுகிற அர்த்தத்தையும் பெறும் வழிமுறை **தர்மம்** எனும் புருஷார்த்தம். அதனால் தர்மத்திற்கு விரோதமில்லாத வழியில் உரியபொருளின் மூலம் பெறுகிற

காமமே இறைவனது வடிவம் தான். धर्माविरुद्धः कामोऽस्मि என கீதையில் பகவான் கூறுகிருர். இத்தகைய காமத்தில் 'தான்' 'தனது' என்ற சுயநலமுனைப்பு தலை எடுக்காது. பரந்த அன்பொன்றே இந்நிலைக்கு இட்டுச் செல்லும். தானும் தனதுமற்ற அன்பின் செறிவு பக்தியாகி இறைவனைக் காட்டி உணரச்செய்து மோக்ஷத்திற்கு இட்டுச் செல்லும். பரமேச்வரப்ரீதியாக, காமத்தை அறவழிக்கும் பொருளாதாரத்திற்கும் ஏற்றவாறு பெற்று, நிறைவுற்ற உள்ளத்துடன் காமத்தையே உணராதமோக்ஷநிலைக்கும் வரலாம் என்பதே இந்த ஸங்கல்பத்தின் பொருள்.

**அந்தப் பரமேச்வரன் யார் ?** இறைவன் தெய்வம் ஆண்டவன் பகவான் பரமேச்வரன் என்ற பல அடைமொழிகளால் குறிப்பிடப் பெறுபவரைப்பற்றிப் பல விளக்கங்கள் உண்டு. வேதமும் புராணமும் மகான்களின் அனுபவ நூல்களும் பல விளக்கங்களைத் தருகின்றன. எளிதில் பாமரனுல் மனத்திற்கொள்ள இயலாததும், காணக்காண ஆகாயம் போல் விரிந்து கொண்டே போவதுமான பாங்குள்ளவர் இந்த பரமேச்வரன். எண்ணற்ற விளக்கங்களுக்கிடையே அவரைப்பற்றிய ஏழு நிலைகள் ஓரளவு மனத்திற் கொள்ளத்தக்கவை.

1. **பிரம்ஹம்-பரம்பொருள்:-** வேதங்கள் இறைவனைச்சுட்டிக்காட்டமுடியாததால் ஒரு வரைபடம் போல் இந்நிலையை விளக்குகின்றன. எங்கும் நீக்கமற நிறைந்துள்ளது. எல்லாமாயிருப்பது. எல்லாவற்றையும் வேறுவேருகக் காட்டக்கூடிய வடிவமைப்பும் குணச்சிறப்பும் செயல் சிறப்பும் பெயரும் ஏனைய மற்றவையுமான எந்த குறிப்பீட்டிற்கும் உட்படாதது. எல்லாமாயிருக்கிற 'ஸர்வ'நிலை உணரப்பெறும் போதே ஏகமாயுமுள்ளது. இதன் இருப்புதான் பலவாருன விச்வத்தின் இருப்பாகத் தோன்றுகிறது. இதன் இயல்பான சித் சக்தியே சிற்றறிவும் பேரறிவுமாகக் காணப்படுகிறது. பேரிருக்கையும் பேரறிவுமானதால் குறையற்ற பேரானந்தமாக விளங்குகிறது.

கண்கள் முதலியபொறிகளும் மனமும் புத்தியும் இதன் ஒளி வீச்சின் துணை கொண்டே வெளிப் பொருளை உணர்கின்றன. மற்றதை இது விளக்குகிறது. இதனை விளக்க மற்றவை திறனற்றவை, தன்னைத்தானே கருணையால் விளக்கிக் காட்டுவது முண்டு.

2. **ஜகத்காரணமான ப்ரம்ஹம்:-** தன்னைப் பலவாக விச்வமாகக் காட்ட பரம்பொருள் விரும்பும். தன்னிடம் உள்ளடங்கித் தன்தனித் தன்மையை வெளிப்படுத்தாதிருந்த மாயை எனும் சக்தியை அப்போது தனித்தியங்கச் செய்யும். மாயை எனும் போர்வையில் மறைந்து பிரும்மாவாக விஷ்ணுவாக ருத்திரராக ஸ்ருஷ்டி ஸ்த்திதி லயம் என்ற முப்பணிகளை ஏற்கும். உலகைத் தன்னிடமிருந்து வெளிப்படுத்தும். உலகின் மூலகாரணமாகி சரம் அசரம் ஜடம் சேதனம் ஸ்தூல உலகம் ஸூக்ஷ்ம உலகம், காரண உலகம் என்று பல நிலைகளை ஏற்கும். உலகமாகவும் அதன் மூலப்பொருளாயும் நின்று இயக்கும்.

3. **ஜகந்நியந்தா, பேராளுனர்:-** ஈசுவரனுகி பேராளுமை எனும் ஈசுவரத்தன்மை கொண்டு, தான் தோற்றுவித்த உலகம் தம் ஆணைக்கு உட்பட்டு தாம் வகுத்த நியதியில் தானே இயங்க, இந்திரன், யமன், அக்னி, வருணன் என்றவாறு ஒவ்வொரு துறையிலும் மேலாளராகப் பல அதிகாரி தேவதைகளைத் தன்னிடமிருந்து வெளியிட்டவர், அண்டத்திலும் பிண்டத்திலும் அதனதன் இயக்கத்தை நெறிப்படுத்துபவர்.

இம்மூன்று நிலைகளிலும் உணரப்பெறுகிற பரம்பொருளை சிவன் விஷ்ணு கணபதி அம்பிகை என்று பலபெயர்கள் கொடுத்தும், ஈசன் பரமேசுவரன் ஆண்டவன் இறைவன் தெய்வம் அம்பிகை என்றவாறு பொதுப் பெயர்கள் கொடுத்தும், தம் தமது வழிபாட்டுத் தெய்வமாகக் கொள்கிறோம். வேற்றுமைக்கிடமில்லாத பரம்பொருள் என உணர்ந்தும், வேற்றுமையும் ஏற்றத்தாழ்வும் கண்டு, பொருட்படுத்திவழிபடுவது உண்டு. செல்கிற பாதையில் வேற்றுமை, சென்றடைந்த நிலையில் வேற்றுமையின்மை

என்பதும் உண்டு. உலகம் எனும் ஸமஷ்டியுடன் ஒப்பிட்டு நோக்கும் போது இம்மூன்று நிலைகளும் தனித்துத் தெரியும். ஒருநோக்கில் உலகம் என்பது ஒன்றே. மற்றொரு நோக்கில் அது பல. ஒன்றல்ல. பலசேர்ந்த முழுத்தோற்றமே உலகம். அதுஸமஷ்டிநோக்கு. அந்த பலவற்றை தனித்தனியாக உணர்வது வியஷ்டி. (காடு-ஸமஷ்டி,மரம்வியஷ்டி)

வியஷ்டியான உலகை உருப்பெறச்செய்பவர் நால்வர்-பிரம்ஹத்தின் நான்கு தோற்றங்கள். அவை பின் வருமாறு.

4. **ஆத்மா:-** தோற்றுவித்த பொருளனைத்திலும் தானே ஜீவனாக உயிராக, ஆத்மாவாக உட்புகுந்து பரவி நின்று அது அது தனித்தனியே துலங்கும்படி 'நான்' என்ற உணர்விற்கு ஆதாரமாக நிற்பவர்.

5. **அந்தர்யாமீ:-** வினைப்பயனும் சூழ்நிலையும் ஜீவனை நிலை கொள்ளாதபடி அலைவித்தழிக்கும் போது, அவனவனுள் உள் நிலை ஸாக்ஷியாக இருந்து தன்நிலை உணர்த்தி அவனவனுக்கேற்ற நல்வழி உணர்த்துபவர். கெட்டதை நினைக்கவும் கூசச்செய்வார். நல்லதை முன்னிருந்து செயல்படுத்துவார். (ஆத்மா ஸ்தூல ஸூக்ஷ்ம காரண தேகங்களை இயங்கச்செய்பவர். அந்தர்யாமி நல்லது கெட்டது உணர்த்துபவர் என்று சிறிது வேறுபாட்டைக் காண்பர்.) விதியை அனுகூலமாக்கிக் கொள்ள, மனமடங்க, சித்தம் போக்கிழக்க, வழிகாட்டுவார்.

6. **கர்மபலதாதா:-** இவரையே விதி தெய்வம் என்பதுண்டு. மனிதப்பிறவியை இலக்காகக் கொண்டு இவரை விளக்க இயலும். மனிதன் பிறக்கிற ஊரோ தேசமோ சூழ்நிலையோ தாய்தந்தையரோ மனைவிமக்களோ கூடப்பிறந்தவரோ உற்றாரோ உறவினரோ பிறந்த வேளையோ மறைகிறவேளையோ மனிதனின் விருப்பத்தை ஒட்டிப் பெற்றவை அல்ல. வாழ்கிற கால வரையில் மனிதனின் விருப்பத்திற்கேற்ப வேண்டிப் பெற்றவை மிகச்சில. அவையும் விரும்பியபடி பயன்படுவதும் எப்போதோ தான்.

அவரவரது முன்வினை இந்த விசித்திர நிலைக்குக் காரணம் என்பர். வினை என்பது அன்று மனிதன் செய்த செயலே, அது உடன் பலன் தராமல் பலனைத்தர நேரத்தையும் இடத்தையும் எதிர்பார்த்ததால் அது வினையாகிறது. அத்ருஷ்டம்—இவ்வாறு அமையும் என முன் எதிர்பாராதது. எந்தப் பிறவியிலோ செய்த செயலின் பின்விளைவாகவும் இருக்கலாம். அல்லது பலன் அடைகிற கணத்திற்கு முன் கணத்தில் செய்ததாயும் இருக்கலாம். வினையேதான் பலனைத் தருவதாயிருந்தாலும், அதை இப்போது இப்பிறவியில் இவ்வாறு அனுபவிக்கச் செய்வது தெய்வம். மனிதன் செய்த வினை ஒரு மலை போல் குவிந்துள்ளது. அது ஸஞ்சிதம். அவற்றில் ஒரு குவியலை இப்பிறவியில் பலன் தரும்படி தெய்வம் மனிதன் பிறக்குமுன் அவனது மூலப்பொருளுடன் இணைத்து விடுகிறது. அது பிராரப்தம். பிராரப்தவினைக்கேற்ப உடலையும் உள்ளத்தையும் அவற்றைத் தூண்டுகிற வாஸனையையும் போகப் பொருளையும் சூழ்நிலையையும் கூட்டிவைப்பவர் இந்த கர்மபலதாதா.

**7. பக்தவத்ஸலன்:-** ஆத்மாவாக அந்தர்யாமியாக நின்று உதவியதில் நிறைவை உணராத ஈசன், துன்பத்தில் ஆழ்ந்து ஏங்கிச் சீர்குலைந்தவனைத் துணையாக நின்று துயர் நீக்கித் தூக்கிவிடுகிறார். தாய் தந்தை ஆசான் நண்பன் செல்வம் செயலாற்றல் என்று பலவகையில் அருகில் நின்று அணைத்துக் காப்பவர். மனிதன் இழைக்கிற தவறுகளைப் பொருட்படுத்தாமல் மன்னித்துப் பொறுத்து உய்விப்பவர். அருளே வடிவானவர், கருணாமூர்த்தி, தயாளு, என்று பாடப்பெறுபவர். நம் எளிய வழிபாட்டை ஏற்பவர். வழிபாட்டிற்குரியவர்.

பிரம்ஹமாக எல்லாமாக இருக்கிற பகவானிடமிருந்து ஒதுங்கி வாழ முடியாது. ஜகத் காரணனாக காற்றும் நீரும் நெருப்பும் நிலமுமாகி வாழ இடமளிக்கிற ஆகாயமுமாகி உயிரும் இயக்கமுமாக இருப்பவரைவிட்டும் விலகி இருக்க முடியாது. மழையும் வெயிலும் திக்கும் காலமுமாகி சூழ்நிலை அமைத்துத் தருகிற ஜகந்நியந்தா தான் நம்மை வாழவிடுபவர். ஆத்மாவாகி உடலையும் உள்ளத்தையும் இயக்குபவர்.

அந்தர்யாமியாக நின்று, அவரது குரலை உற்றுக்கேட்பவருக்கு இதமான வழிகாட்டுபவர். இவ்விருவரும் நாமே தான். இவரின்றி நாமில்லை. இவ்வைவரும் நம்மை உருவாக்கியவர்கள். கர்மபலதாதா வசப்படாதவர். வசப்படுத்துபவர். கட்டிற்கடங்காதவர். கொடுத்ததை நல்லதற்குப் பயன்படுத்தினுல் பின்நின்று உதவுவார். கெட்டதற்குப்பயன்படுத்தினுல் கேட்டினுள் விழுவதிலிருந்து தடுக்காதவர். நம்வினை எத்தகையதென்பதைச் செயல்முடிந்ததும் உணர்த்துபவர். ஆயினும் கெட்டதாக முடியக்கூடாதே என்ற எதிர்பார்ப்பைத் தந்து தன் முயற்சியால் கேட்டின் வலிமை நம்மைத் தாக்காதபடி தடுத்துக் காப்பவர்.

பிரம்ஹம், ஜகத்தாரணர், ஜகந்நியந்தா, ஆத்மா, அந்தர்யாமி என்ற ஐவரை ஜ்ஞானயோகத்தால் உணர்ந்து வழிபடலாம். கர்மபலதாதாவை கர்மயோகத்தால் வழிபட்டு அனுகூலராக்கிக் கொள்ளலாம். இவர்களனைவரையும் உணரவும் வழிபடவும் அனுகூலமாக்கவும் பக்தவத்ஸலரான பெருமானை பக்தியோகத்தால் வணங்கி வழிபடலாம்.

**பக்தியும் வழிபாடும்:-** ஜ்ஞானயோகம் பக்தியோகம் கர்மயோகம் என்பவை தனித்தனி மார்க்கங்களில் அமைந்தவையல்ல. ஒன்றேடொன்று முரண் படுபவையல்ல. இவற்றுல் அடையப்படுகிற பகவானும் வெவ்வேறு நிலைகளில் உள்ளவரல்ல. இறைவனுடன் இணைவதே சிறந்தயோகம். பக்தவத்ஸலர்தான் நாராயணனுக, சிவபெருமானுக, விநாயகராக, முருகனுக தேவியாகப் பல வடிவங்களை ஏற்று ஸாதகனது வழிபாட்டை ஏற்கிறுர். அவனது கோரிக்கைகளை ஏற்று நிறைவேற்றுகிறுர். துஷ்டனும் கூட இறைவனை வழிபட்டுப் பேராற்றல் பெற்றுள்ளான் எனப்புராணங்கள் கூறும். தான் பெற்ற பேராற்றல் இறைவன் தந்ததே என்ற எண்ணம் வலுத்ததால் அவ்வழியே பழகி எதனையும் இறைவனருளால் பெற்று எதற்கும் இறைவனையே துணையாகப்பற்றுகிற தன்மை வளர்ந்து அரக்கனும்நல்லவனுன வரலாறு முண்டு. பாணன்,

விருத்திரன், விபீஷணன் போன்ருேர் இந்நிலையில் முன்னேறியவர்கள்.

தன்னலத்தையே பெரிதாகக்கருதி இறைவனை வழிபட்டுப் பேராற்றல் பெற்றுப்பின் சுயநலத்திற்காகப் பேராற்றலைப்பயன்படுத்தி உயர்ந்து திமிர்கொண்டு அந்த இறைவனுடனே மோதி அழிந்த ஹிரண்யகசிபு, பண்டன், ராவணன் போன்ருேரின் வரலாறும் அதனை விளக்கும்

சுய நலமும் தற்பெருமையும் அகந்தையும் மமதையும் பக்தி என்ற அன்பின் முதிர்ச்சியால் மறைந்து விடும். இறைவனை பக்தியும் சிரத்தையும் கொண்டு வழிபட சித்தம் தெளியும். தெளிந்த உள்ளத்தில் இறைவன் குடிகொண்டுள்ளதைத் உணர்ந்து தூய்மை பெற்ற கண்ணுடியில் தன் அன்புருவம் துலங்குவதைப் போல் கண்டு களிப்பான். பக்த வத்ஸலனே அந்தர்யாமியாகி நல்லதை உணர்த்தித் தனக்கு வழிகாட்டுவதை உணர்ந்து அவன் காட்டுகிற வழியில் செல்வான். தாழ்ந்த எண்ணங்கள் குறுக்கிடாவிட்டால், மெலிந்து விட்டால் அந்தர்யாமியின் குரல் நன்கு கேட்கும். மெல்ல, பக்தவத்ஸலரே கர்மபலதாதாவாகக்காட்சி தருவார். புண்யத்தின் பலனுக இன்பம் நேர்கிறது. இதில் மதர்ப்பு ஏற்பட வழியில்லை. பாபத்தின் பலனுகத் துன்பம் நேர்கிறது. இதில் வருந்துவதற்கு ஏதுமில்லை. இந்த இன்பதுன்பங்கள் நேராமல் தடுக்க இயலாது. இந்த இன்பமும் துயரமும் இறைவன் தந்ததல்ல. நம்வினையின் பின்விளைவே. வருவதை வரும் நிலையில் ஏற்பதே நம் கடன். வினை கழிவதன் அடையாளமே இன்பமும் துன்பமும். அந்த அளவில் வினைதீர்ந்ததென்று கடன் தீர்த்தவன் போல் நிம்மதிகொள்ளலாம். கர்மபலதாதா நமக்கு நல்லதைத் தான் செய்கிருர் என்ற விவேகம் எழும். எதிர்பாராததுயரம் என்ற நிலை மாறி, வரவேண்டியதே வந்து நீங்கியது என்ற எண்ணம் — விவேகம் நிலைக்கிறது.

பக்தவத்ஸலர் தான் கர்மபலதாதாவும். பக்தவத்ஸலர் தான் ஸாதகனின் ஆத்மாவும். அந்த ஆத்மா என்னுள் புகுந்து

என் பொறிகளையும் உள்ளத்தையும் இயக்குகிறான். அவனது துணையால் மட்டுமே இயங்குகிற பொறிகளும் மற்றதும் அகந்தையையும் மமதையையும் கொள்கின்றன. நான் என்ற ஆத்மநிலை பொறிகளுக்கும் மற்றதற்கும் அப்பாற்பட்டது. சூரியனின் ஒளி கொண்டு கண்கள் பார்க்கின்றன. ஸூரிய ஒளி எதனையும் தான் பார்த்ததாகக் கொள்ளாது. ஆத்மாவின் ஒளிபிரதிபலிப்பால் கண்பார்க்கிறது. ஆத்மா எதனையும் தான் பார்த்ததாகக் கொள்ளாது, அதனால் ஆத்மாவில் அகந்தை - மமதைகளுக்கு இடமில்லை. ஈசனின் பேராளுமையின் சிறுதுளி எனது ஆளுமையாக என்னிடம் வெளிப்படுகிறது. அந்த ஆளுமையின் பிரதிபலிப்பாக நான் எனது என்ற எண்ணங்கள் தோன்றுகின்றன. உலகமென விரிந்து நிற்கிற ஈசனின் பேராளுமையின் வீச்சு அற்பனான என்னிடமும் பிரதிபலிக்கிறது. இந்த அற்பனை உலகின் பகுதியாகப்படைத்த பெருமானுக்கே அந்த அகந்தை - மமதை உரியது. தன்னை எந்தச் சூழ் நிலையில் படைத்துள்ளாரோ அந்த சூழ்நிலைக்கேற்ப, அவரது நியதிக்கு உட்பட்டு நடப்பதே தன்கடமையும் உரிமையும். இந்த நான், எனது இந்த சரீரம் முதலியவை அந்தபராஹந்தைக்கும் பரமமதைக்கும் உட்பட்டதே. அவற்றின் ஆட்படுத்தலுக்கிணங்கி நடப்பதே தன் கடமை என்ற உணர்வு கர்மயோகமாகி, அவரிடம் வைத்த பக்தியைமேலும் வலிவடையச் செய்கிறது. இந்தப்பயிற்சி, தன்வழிபாட்டை ஏற்கிற பக்தவத்ஸலரேதான் ஜகந்நியந்தாவும் ஜகத்கர்தாவும் பரம்பொருளும் என்ற ஜ்ஞானயோகத்தின் முடிவிற்கு அழைத்துச் செல்கிறது. பக்தவத்ஸலரிடம் தாயன்பை உணர்ந்து தாய்க்குத் தனயனாக அன்பு காட்டுவதே பக்தியோகத்தின் படி. தாயன்பாக மலருமுன் அது பல காட்சிகளை உணர்த்துகிறது.

இறைவனது மாட்சியையும் தனது சிறுமையையும் உணர்ந்தவனே இறைவனை வழிபடத்தொடங்குகிறான். தனக்கு இணையானவனோ தாழ்ந்தவனோ தனக்கு உதவமுடியாதென்று எண்ணித்தான், இறைவன் தன்னை விடப் பல மடங்கு பெரியவர் என்று துணிந்து அவரை வழிபடுவது

தனக்கு நல்லதென்று வழிபாட்டில் இறங்குகிறான். வழிபாட்டால் இறைவன், தன்னைச் சார்ந்தவன் இவன் (பாகவதன்) என்று, பரிவுடன் ஏற்பார் என்று நம்புகிறான்.

முதலில் இறைவனது பெருநிலை மனத்தில் பதிகிறது. மதம் பிடித்த யானையிடம் நெருங்குவது போல் அச்சத்துடனும் எச்சரிக்கையுடனும் பயம் கலந்த பக்தி அப்போது உண்டாகிறது. பின்னர் இறையனுபவம் தெளிவுபட பயம் நீங்கி அரசனைக்கண்டது போல் பெருமிதமும், நெருங்கி அணுகத் துணிவின்மையும் கொண்டு அலங்கரித்து உலா வருகிற தெய்வத்திடம் பெருமதிப்பும் தன் வரை உணர்ந்த மரியாதையும் கலந்த பக்தியுடன் வழிபடுகிறான். நெருக்கம் வளர்கிறது. வீட்டிற்கு வருகிற அன்புக்கும் மதிப்பிற்கும் உரிய விருந்தினர் போல் பாவித்துத் தன்னிடமுள்ள மதிப்பிற்குரியபொருளைக் காணிக்கையாக்கி வரவேற்கிறான். மேலும் நெருக்கம் வளர, குழந்தையுடன் குழைவுடன் கொஞ்சுவது போல் சீராட்டிப் பாராட்டுகிறான். தன்னையே அவரிடம் ஒப்படைத்து அவர் ஆட்டுவித்தபடி ஆடுகிறான். இந்த நெருக்கத்தில் ஒரே சீரான பகவானின் நிலை பக்தனின் நிலைக்கேற்ப ஆட்டம் போடுகிறது. காரியார்த்தமாக முன்னர் நிலவிய அன்பு வேறு எதிர்பார்ப்பின்றி அருகிலும் தூரத்திலும் சுகத்திலும் துக்கத்திலும் மாறுபாடடையாத தூய அன்பாக மாறுவதையும் காணலாம். பகவானிடம் பதிந்த பக்தியுள்ளம், பாகவதபக்தியாக குருபக்தியாக பித்ரு-மாத்ரு பக்தியாக, கணவன் - மனைவிகளுக்கிடையே தூய அன்பாக, எந்நிலையிலும் மாறாத நட்பாக, உயிரினமனைத்திலும் தெய்வத்தைக் காண்கிற ஸமதர்சனப்பண்பாகப் பல வடிவங்கள் பெற்று, பெருமனமாக மஹாத்மாவாக வெளிப்படுகிறது.

அன்பும் முதலில் செயற்கையாகப் பழகி ஸங்கல்பமாகிறது. செயல் வடிவில் பலவற்றைச் செய்து அதை இயல்பு நிலைக்குக் கொணர்கிறது. பின்னரே உள்ளுணர்வாகப்பலரால் அனுபவிக்க முடிகிறது. பக்தி எனும் அன்பு உள்ளுணர்வாகப்படரப் பல வழிமுறைகளைப்

பின்பற்ற நேர்கிறது. நாரதர் தன் முன் பிறவியில் பயின்ற பக்தி பிரும்மாவின் புத்திரனுகத் தோன்றியதும் உள்ளுணர்வில் வாஸனையாக அமைந்து பராபக்தி என்ற உயர்ந்த நிலையைப் பெறச்செய்தது.

**பெயரும் வடிவும்** :- பகவானின் பெயரே நாமறியாமல் பகவானிடம் இழுத்துச் செல்கிறது. பெயரைக் கூறியவுடனேயே பெயருடைவனின் நினைவும் வருகிறது. வடிவைவிடப் பெயர் தொடர்பு ஏற்படுத்துவதில் திறமை மிக்கது. பக்தியுடன் நாமம் கூறுவது சிறந்ததே. எனினும் பக்தியில்லாமலும் கூட நாமம் கூறிப்பழகப்பழக, பக்தியுடன் அதனைக் கூறத் தகுதி ஏற்படுகிறது. நாமம் கூறும் போதே நாமமுடையவனின் (நாமியின்) நினைவும் வர அதுவே பகவத் தியான யோகமாகவும் மாறுகிறது. நாமஜபமே பெரும்யஜ்ஞம். ''யஜ்ஞானாம் ஜபயஜ்ஞோஸ்மி'' என்பார் கிருஷ்ணன். பக்தியால் நெகிழ்ந்த உள்ளத்தில் குடிபுகுந்த பகவானின் அர்ச்சனமுமாக நாமஜபம் மாறுகிறது.

கண்ணுல் பார்க்கப்பெறும் பொருளிலும் வாயால் கூறும் பொருளிலும் மனம்லயிக்கும்போது அது அப்பொருளால் கட்டுப்பட்டு விடுகிறது. அப்படிக்கட்டுவதால் பொருளை (விஷய: - விஷிணோதி - பத்நாதி - கட்டுகிறது) விஷயம் என்பர். அடிக்கடி பார்க்கவும் கூறவும் நேர உள்வாஸனையாக அது அமர்ந்துவிடும். விக்ரகம் வார்ப்பவர் இளகிய உலோகத்தை விக்ரகவடிவில் உட்புறம் அமைந்த மூசை எனும் குடுவையில் வார்ப்பர். குளிர்ந்ததும் உலோகம் விக்ரகமாக அமைந்திருக்கும். பக்தியால் இளகிய உள்ளமான மூசையில் நாமமாக கதையாக உணர்ந்த பகவத்விஷயம் வெற்றிடம் சிறிதுமில்லாமல் நிரம்பி பகவதாகாரமாகிறது என்பார் மது ஸூதனஸரஸ்வதீ ஸ்வாமிகள்.

மனம் தான் உணர்கிற அனைத்து விஷயங்களாலும் அடிக்கடி நிரம்புகிறது. பேசுவதும் கேட்பதுமான பலவிஷயங்களும் அழியக்கூடியவையே. அதனுல் மனம்

தன்னை நிரப்பிக் கொள்ள அடிக்கடிப்புதுப்புதுவிஷயங்களை நாட நேர்கிறது. ஆனால் அதே மனம் இறைவனைப் பெயரும் கதையும் மற்றதுமான விஷயமாக்கித்தன்னை நிரப்பிக்கொள்ள பகவானே உட்புகுந்து நிலையாகநிரம்பிவிடுவதால், வேறுபொருளை நாடத் தேவையில்லை. இறைவனும் தான் பிடித்த இடத்தை வசப்படுத்தி நிலையாக அமர்ந்து விடுவதால் ஸச்சிதானந்தவடிவம் படிந்த மனம் ஸச்சிதானந்த நிலை பெற்றதாகிறது என்று பக்திநூல்கள் சொல்கின்றன.

**பக்தியின் பல நிலைகள் :-** நம்மைப் பலவாறு அலைக்கழிக்கிற மனம் இறைவனை நாடத் தொடங்கியதும் மற்றவற்றில் சிறிது சிறிதாக நாட்டத்தை இழந்து இறைவனிடம் பதிந்து இறைவனின் வடிவைத்தன்னுள் நிரப்பிக்கரைந்து இறைவனின் வடிவாகவே மாறுகிறது. கொழுக்கட்டைமீதுள்ள மாவாலான சொப்பும் கொழுக்கட்டையாக மாறுவதை இது ஒக்கும். அந்த ஆனந்த நிலையே பக்தி. இறைவனின் கதை கேட்டு அதனை நம்பி இறைவனிருப்பதை ஊகித்து அத்தத்துவத்தை விளக்கமாகக் கேட்டு மனத்தினுள் உருவகப்படுத்தி கை-கால்-மனம்-அறிவு- அன்பு என்ற சேதனவடிவில் விளையாடவிட்டுத் தானும் விளையாடி இன்புறுவதாகிய மனோரத நிலைக் காட்சியே அதன் முதற்படி. சிரவணம் கீர்தனம் ஸ்மரணம் என்றோ சிரவணம் மனனம் நிதித்த்யாஸனம் என்றோ இந்நிலையை பக்திஸாதனமாக்கலாம். ஸாதனமான சிரவணம் முதலானதும் பக்திதான். கட்டிய புருஷனுடன் பதி என்ற உறவை வலிவடையச் செய்து இரு உள்ளங்களும் கலந்து உறவாடுவதாக முதலில் பாசாங்கு செய்வது போன்றாகும் இது. இதுவே வழக்கமாகி இயல்பாகி சீலம் ஆகிறது. இதனை ஸாதன பக்தி - கௌணபக்தி என்பர். பக்தி ஸாதனம் செய்ய சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்க்யம், ஆத்மநிவேதனம் என ஒன்பது முறைகள். சிரவணம் முதல் வந்தனம் வரை ஆறும் செயல் முறை. தாஸ்யமும் ஸக்க்யமும் பகவானுடன் நாம் கொள்ளும் உறவு முறை. ஆத்மநிவேதனம் பகவானிடம் தன்னை

ஒப்படைப்பதான மேனிலே. தான்வேறு, தன்னுல் வழிபடப்பெறுபவர் வேறு என்ற உள்ளுணர்வு அன்பின் மிகுதியால் மறைய, அவரது சுகம், தன்சுகம் என்ற ஸக்கிய நிலேயின் எல்லேயில் இந்த ஆத்ம ஸமர்பணம் நிகழ்கிறது. ஞானயோகத்தின் எல்லேயில் பெறுகிற பிரும்ஹாத்மைக்யம், பக்தியோகத்தின் எல்லேயாகிய பராபக்தி இரண்டும் ஒன்றே.

இது அனுபவம். விவாதித்து விளக்கி அறியமுடியாத நிலே. இந்த அனுபவம் நேர வாய்ப்புள்ளதா ? எவருக்கு எந்நிலேயில் எப்போது எப்படி வரும் என்று நிரூபிக்க இயலாது. அந்தக்கணம் முன்வரை கொடிய வேடஞகை இருந்த கண்ணப்பன், லிங்கத்தைச் சிவபெருமாஞகக் கண்டு, அதன்கண்ஞேயைத் தன் கண் தானத்தால் சீராக்க முனேந்து, தான் கடித்து மீந்ததை இறைவனுக்கு உணவாக்கிய பாங்கை எந்தப் பேரறிவாளனும் நிரூபணம் செய்ய முடியாது.

**பக்தியும் ஜ்ஞானமும் விளக்கத்திற்குரிய விஷயமல்ல.** அனுபவம் அது. ஸ்ரீசங்கரபகவத் பாதர்களின் அத்வைதவழியும் நாரத மஹர்ஷியின் பக்தி வழியும் ஒரே கொடுமுடியை அடைகிற ஒரே பாதையாக இணேவதை இங்கு உணர முடியும்.

நாரதர் தம் வாழ்க்கையில் இருபிறவிகளில் பெற்ற பக்தி அனுபவங்களேயும் அந்த அனுபவம் பெற உதவிய சூழ்நிலேகளேயும் ஒருபுறம் தொகுக்கிருர். தன்னேப் போன்ற மற்றும் பலர் வேறுபட்ட சூழ்நிலேகளில் பெற்றிருந்த பக்தி அனுபவங்களேயும் தொகுக்கிருர். தாய் போன்றுகனிந்து தானே முன்வந்து வழிகாட்ட அவ்வழியில் பக்திப் பாதையில் சென்ற பிரஹ்லாதர் துருவர் முதலாஞேரின் அனுபவங்களேயும் ஆராய்கிருர். பெருஞ் ஞானிகளான வால்மீகியும் வியாஸரும் பகவத்குணானுபவத்தை முன்னரே பெற்றவர். பகவானின் லீலேகளே ராம-கிருஷ்ண அவதாரங்களில் கூடவே இருந்து அனுபவித்தவர் பின்னரும் உள்ளம் நிறையாமல், குறையுணர்வு கொண்டு அமைதியின்றி தவத்தால் பல தத்துவங்களே முன்னர் தானே கண்டிருந்தும் இன்று அந்த தவம்

கூடப் பயன் தரா தென உணர்ந்து ஏங்கி நின்றனர். அவர்கள் எதிர்பாராதபடி தானே அவர்கள் முன் தோன்றி ஐயங்களைக் களைந்து பரமனின் குணங்களைப் பக்தியுடன் பாட வழிகாட்டிய நாரதர் ஸ்ரீமத் ராமாயணமும் ஸ்ரீமத்பாகவதமும் உலகத்தினருக்குக் கிடைக்க வழிகாட்டினார். ஸ்ரீமத் ராமாயணத்தையும் ஸ்ரீமத்பாகவதத்தையும் குசலவர்களும் சுகமுனிவரும் பாடும்போது கூடநின்று முழுமனத்துடன் கேட்டிருப்பார். ஸ்ரீமத்பாகவதத்தில் நாரதரும் ஒரு முக்கிய கதாபாத்திரம். நாரதர் பகவானின் (மூன்றாவது) ஜ்ஞான சக்தி அவதாரமாக வியாஸருக்கு முன் நிற்பவர்.

தனக்கு முன்னோடிகளும் தன் காலத்தியவர்களும் பக்தி பற்றித் தந்த விளக்கங்களைத் தாம் பெற்ற அனுபவங்களுடன் பொருத்திப்பார்ப்பதையும் ஸூத்திரங்களில் ஆங்காங்கு காணலாம். அனுபவம் இப்படித்தான் வரும் என்று கொள்கையாக நெறிப்படுத்த இயலாதல்லவா ? ஸூத்திர வழியில் பக்தியைப் பயில்பவன் முன்னோடியாயிருந்த பலரின் அனுபவங்களையும் அறிந்து தன் பாதையைச் செப்பனிட்டுக் கொள்ள இயலுமே ! நாரதர் பிறரின் அனுபவத்தை மறுத்தோ கண்டித்தோ தன்கொள்கை தான் தக்கதென வாதிடுபவரல்ல. சாண்டில்யர் தன் பக்தி ஸூத்ரத்தில் வாதிட்டுத் தன் வாதத்தை நிலைநிறுத்துவதைக் காண முடிகிறது. நாரதர் வாதிடாமல் அனுபவத்தின் பல கோணங்களையும் காட்டுகிறார். ஸாதகன் தன் உள்ளப்பாங்கையொட்டிய வழியைப்பின்பற்றலாமே ! மலையின் கொடுமுடியை அடையப்பல பாதைகளிருக்கலாம். பாதை தெரியாதவன் பசுமாடு மலைமீதேறத் தேர்ந்தெடுக்கும் பாதையில் பசுவைப்பின் தொடர்ந்து சென்று கொடுமுடியை அடைவான் என்பர். நாரதரின் இந்நூலில் அவர்சென்ற எளிய பக்திப்பாதையும் நாரதரின் உள்ளத்து மென்மையும் பிரதிபலிப்பதை உணரலாம்.

ருக்வேதத்தின் பலஸூக்தங்களைக் கண்டறிந்த ருஷிகளில் நாரதரும் உண்டு. சில ஸூக்தங்களில் பர்வதரும் உண்டு. வழிகாட்டுவதில் நாரதர் தனித்தே வருகிறார். பகவத்

குண கானம் செய்யும் போது பர்வதரும் தும்புருவும் கந்தர்வரும் இவருடன் இணைவர். இவரது வீணை மஹதீ எனச் சிறப்புப்பெயர் பெற்றது.

**ப்ரஜ்ஞா - ஸஹஜா, வைநயிகீ** :- நாரதர் கல்வித்துறைகள் எல்லாவற்றையும் கரைகண்டவர். கல்வியறிவு செயற்கையாகப் பெறுவது. இதை வைநயிகீ ப்ரஜ்ஞா என்பர். அவனவன் பிறவியிலேயே அறிவையும் உடமையாகப் பெறுகிறான். பலபிறவிகளில் அறிவை வளர்த்த பாங்கை ஒட்டி இப்பிறவியில் மூலதனம் போன்று அது அமைகிறது. அதனை ஸஹஜப்ரஜ்ஞா என்பர். ஸஹஜாவின் தன்மையை வைநயிகியால் சிறப்புறச்செய்யலாம். தகாத வைநயிகியால் ஸஹஜாவைக் குழப்பவும் கூடும். வைநயிகியாகத் தான் பெற்ற பிரஜ்ஞானத்தை ஸஹஜாவுடன் பொருத்தி அதனையும் ஸஹஜாவின் அம்சமாக மாற்றுதவரை பெற்ற கல்வி ஏட்டுச் சுரைக்காய். நாரதர் தான்பெற்ற வைநயிகீப்ரஜ்ஞானத்தை ஸஹஜப்ரஜ்ஞானமாக்க முடியாத நிலையில் அதற்கான வழியை ஸனத்குமாரரிடம் கற்றார் என்று சாந்தோக்ய உபநிஷதம் குறிப்பிடுகிறது. பூமவித்யை என்று அவ்வழியைக் குறிப்பிடுவர். மஹாபாரதத்தில் நாரதர் நூறாண்டுகள் தவமிருந்து பரம்பொருள், கிருஷ்ணன் என்ற தோற்றத்தில் ஆயர்ப்பாடியில் விளையாடுவதை உணர்ந்தார் என்றுள்ளது. நாரதர் வழியில் லீலாசுகர் "उपनिषदर्थं उलूखले निबद्धं" பரம் பொருள் உரலில் கட்டுப்பட்டதாகக் காண்பதை வியந்து துதிக்கிறார்.

**நாரதர் கலஹப்ரியர்.** அசுரர் தவத்தால் இறைவனிடமிருந்து பெற்ற சக்தியைத் தவறான வழியில் உலகைத் துன்புறுத்தப் பயன்படுத்தும் போது அந்த அசுரனை இறைவனுடன் நேராக மோதிப் பலத்தைப் பரீக்ஷை செய்ய வழிகாட்டி, தவச்சக்தியனைத்தையும் தானே இழக்கும்படி செய்கிறார். அந்தகன், ராவணன் ,சூரன் போன்ற பலரும் நாரத கலகத்தால் மறைந்தவர்களே. இறைவன் வகுத்த உலக நியதியை மாற்ற முற்படுபவர்கள் எவராயினும் வலிவிழப்பர். நாரதர் இந்த நியதிக்குத் துணை நிற்கிறார்.

ஹிரண்ய கசிபு தவம் செய்ய மந்தரம் செல்கிறான். இந்திரன் இந்தச்சூழ்நிலையில் ஹிரண்ய கசிபுவின் மனைவியான கயாதுவைச் சிறை பிடிக்கிறான். நாரதர் இந்திரனின் தவறான அணுகுமுறையை மாற்றிக் கயாதுவைத் தன் பொறுப்பில் கொள்கிறார். அவள் கருவிலிருப்பவன் அசுரகுணம் சிறிதும் பெறாத உத்தமன் எனக் காண்கிறார். இறைவனின் பெருமையைக் கயாதுவிடம் கதையாகக் கூறுகிறார். அசுரகுணம் படைத்த கயாதுவிடம் இந்தக் கதை மாற்றத்தைத் தரவில்லை. கதை கேட்டது அவளுக்குத் தூக்கத்தைத் தந்தது. கருவில் உள்ள சிசு இதனை உற்றுக் கேட்டது. புதிய ஜீவனாக அதுவெளிவந்தபோது உலகுடன் தொடர்பால் பெறும் வாஸனைகளில் பகவத் வாஸனை முதலிடம் பெற்றது. மற்ற வாஸனைகளில் அடித்தளமாகவும் அது அமைந்தது. பிரஹ்லாதனின் சிறப்பிற்கு நாரதரின் உபதேசம் இவ்வாறு பயன்பட்டது. அசுரகுடும்பத்தில் வளர்கிற சிசுவிற்கு பகவத்குணம் போதிக்க இயலாது. தூங்குகிற கயாதுவின் காதுகள் வழியே, அக்காதுகளை தன் காதுகளாகப்பயன்படுத்துகிற கருநிலையில் நின்ற சிசு வேறு சித்தப்போக்கிற்கு இடமின்றி முழுக்கவனத்துடன் கேட்கச் சூழ்நிலையமைத்த நாரதரின் கரிசனத்திற்கு இணையேது ?

जयति जगति मायां यस्य कायाधवस्ते
वचनरचनमेकं केवलं चाकलय्य।
ध्रुवपदमपि यातो यत्कृपातो ध्रुवोऽयं
सकल कुशलपात्रं ब्रह्मपुत्रं नतोऽस्मि।

பத்மபுராணம் இவ்வாறு நாரதரைப் பாராட்டி வணங்குகிறது. ''கயாதுவின் பிள்ளை உமது ஒரு உபதேசத்தை மனத்தில் இறுத்தி உலகில் மாயையைவென்றான். துருவனும் உமது கிருபையால் நிலைத்தஇடம் பெற்றான். உலகமனைத்தின் நலனைப் புரிவதில் முன்நிற்கிற பிரம்மாவின் பிள்ளையான உம்மை வணங்குகிறேன்''

தக்ஷன் தன் இரண்டாவது பிறவியிலும் மக்கள் தலைவனாகிறான். பாஞ்சஜன்யனின் புதல்வியான அஸிக்னியிடம் ஹர்யச்வர்கள் என்ற பத்தாயிரம் புதல்வர்களைப் பெற்று பூமியைத் தம் மக்களால் நிரப்புகிறான். நாராயணஸரஸ் என்ற இடத்திற்குப் புனிதயாத்திரையில் வந்த அவர்களை நாரதர் முக்திமார்கத்திற்குத் திருப்பிவிடுகிறார். மனைவி மக்கள் என்று தன்புதல்வர்கள் திரும்பாமல் முக்தி வழியில் சென்றதைக் கண்டு, மீண்டும் அஸிக்னியிடம் சபளாச்வர்கள் என்ற பத்தாயிரம் புதல்வர்களைப் பெற்றான். அவர்களும் முக்திவழிசென்றனர். மற்றொருஜீவனைப்பெற்றுத் தருவதற்கெனவே பிறப்பதில்லை. பிறப்பற்ற நிலை பெறுகிற முயற்சி ஜீவனின் முதற்கடமையாகிறது.'' என்று பூமிக்குச் சுமையாக மக்களை தக்ஷன் பெருக்குவதை நாரதர் தடுத்தார். நிலையற்று ஊர்சுற்றி வரும்படி தக்ஷன் நாரதரைச் சபித்தான். அந்த சாபத்தையும் ஏற்று உலகின் நன்மைக்காக நாடோடியானார்.

நாரதரின் இயல்பான குணங்களைக் கிருஷ்ணரே தன் மாதாமஹரான உத்ரஸேனரிடம் விளக்குகிறார். (மஹாபாரதம்.12.215)

**நாரதரின் சிறப்புகள்.** தன் நடைமுறைச்சிறப்பைப் பற்றிய பெருமிதம் அவரிடமில்லை. அது வாழ்வை வீழ்த்தும். அவரது கேள்வியறிவும் நடைமுறையும்

---

न चारित्रनिमित्तोऽस्याहङ्कारो देहपातनः । अहीनश्रुत चारित्रः तस्मात्सर्वत्र पूजितः ।। तेजसा यशसा बुद्ध्या नयेन विनयेनच । जन्मना तपसा वृद्धः तस्मात्सर्वत्र पूजितः ।। अरतिः क्रोधचापल्ये भयं नैतानि नारदे । अदीर्घसूत्रः शूरश्च तस्मात्सर्वत्र पूजितः । उपास्यो नारदो बाढं वाचि नास्य व्यतिक्रमः । कामाद्वा यदि वा लोभात् तस्मात्सर्वत्र पूजितः । अध्यात्मविधितत्त्वज्ञः क्षान्तः शान्तो जितेन्द्रियः । ऋजुश्च सत्यवादी च तस्मात्सर्वत्र पूजितः ।। दृढभक्तिरदीनात्मा श्रुतवानानृशंस्यवान् । वीतसंमोहदोषश्च तस्मात्सर्वत्र पूजितः ।। सुशीलः सुखसंवेशः सुतेजाः स्वादरः शुचिः । सुवाक्यश्चाप्यनीर्ष्यश्च तस्मात्सर्वत्र पूजितः ।। कल्याणं कुरुते बाढं पापमस्मिन्न विद्यते । न प्रीयते परानर्थैः तस्मात्सर्वत्र पूजितः ।। वेदश्रुतिभिराख्यानैः अर्थानभिजिगीषते । तितिक्षुरनवज्ञश्च तस्मात्सर्वत्र पूजितः ।। समत्वाद्धि प्रियो नास्ति नाप्रियश्च

குறைவற்றிருப்பதால் எங்கும் பாராட்டப் பெறுகிறார். மனவலிவும் புகழும் அறிவும் நடைமுறை மென்மையும் நெறியும் நற்குலப்பிறப்பும் தவமும் அவரை முதிர்ச்சி பெற்றவராக்கியுள்ளன. நிம்மதியற்ற பரபரப்பு'' கோபவெறி, சிற்றின்ப நாட்டம், மற்றும் பயம் இவரிடம் இல்லை. செயலைநேரம் கடத்திச் செய்யாதவர். செயல் திறம் மிக்கவர். சுயவிருப்பாலோ பேராசையாலோ பேச்சில் தடம்புரளாதவர். தன் உடல் - மனம் - ஆத்மநிலை உணர்ந்தவர், பொறுமை மிக்கவர், அடக்கமுள்ளவர், பொறிகளைக் கட்டுக்குள் கொண்டவர், நேர்மை மிக்கவர், உண்மை பேசுவர், ஈசனிடம் திடமான பக்திகொண்டவர், எதற்கும் ஏங்காதவர், அவதூறுகளுக்காளாகாதவர், நல்ல கேள்வியறிவால் குறையும் குழப்பமும் களைந்தவர், நற்பழக்கமுள்ளவர், சமுதாயத்துடன் பொருந்திப் பழகுபவர், இனிதுபேசுபவர், பொறாமையற்றவர். நல்லதையே செய்பவர், கெட்ட எண்ணமற்றவர், பிறரது துன்பத்தைக் கண்டு மகிழாதவர். வேதத்தையும் புராணக்கதைகளையும் கூறிப் பொருள் விளக்குபவர், சகிப்புத் தன்மையும் தியாக உணர்வும் பிறரைக் குறை கூறாமையும் கொண்டவர். ஸமநோக்குள்ளவரானதால் வேண்டியவன் வேண்டாதவன் என்ற பாகுபாடு அற்றவர். மனம் குளிரப்பேசுபவர். வியக்கும்படி பேசுபவர்,

---

कथञ्चन। मनोऽनुकूलवादी च तस्मात्सर्वत्र पूजितः ।। बहुश्रुतश्चित्रकथः पण्डितोऽनलसोऽशठः। अदीनोऽ क्रोधनोऽलुब्धः तस्मा त्सर्वत्र पूजितः ।। समाधिर्नास्य मानार्थं नात्मानं स्तौति कर्हिचित्। अनीर्ष्युर्मृदुसंभाषः तस्मा त्सर्वत्र पूजितः ।। लोकस्य विविधं वृत्तं प्रेक्षते चाप्यकुत्सयन्। संसर्गविद्याकुशलस्तस्मात्सर्वत्र पूजितः ।। असक्तः सर्वभूतेषु सक्तात्मेव च लक्ष्यते। अदीर्घसंशयो वाग्मी तस्मात्सर्वत्र पूजितः ।। नासूयत्यागमं कश्चित् स्वनयेनोपजीवति। अवन्ध्यकालो वश्यात्मा तस्मात्सर्वत्र पूजितः ।। कृतश्रमः कृतप्रज्ञो ज्ञानतृप्तः समाहितः। नित्ययुक्तोऽप्रमत्तश्च तस्मात्सर्वत्र पूजितः ।। सापत्रपश्च युक्तश्च विनेयः श्रेयसे परैः। अभेत्ता परगुह्यानां तस्मात्सर्वत्र पूजितः। न हृष्यत्यर्थलाभेषु नालाभेषु व्यथत्यपि। स्थिरबुद्धिरसक्तात्मा तस्मात्सर्वत्र पूजितः ।। तं सर्वगुण संपन्नं दक्षं शुचिमनाकुलम्। कालज्ञं च नयज्ञं च कः प्रियं न करिष्यति ।।

பேரறிவாளர், சோம்பலில்லாதவர், பிடிவாதமற்றவர், ஏங்காதவர், கோபிக்காதவர், பேராசைப்படாதவர், தற்பெருமைக்காக யோகநிலை காட்டாதவர், தற்புகழ்ச்சியற்றவர், உலகின் போக்கைக் குறை கூருமல் கண்காணிப்பவர், நட்பால் இணங்குவதில் தேர்ந்தவர். எதனிடமும் பற்றுவைக்காதவர். ஆனல் எல்லாவற்றிலும் அன்பு கொண்டவர், சந்தேகத்தை உடன் தீர்த்துக் கொண்டு அதனை நீடிக்கவிடாதவர். வருவதை வெறுக்காதவர், தன்வழியில் வாழ்பவர், நேரத்தை வீணுக்காதவர். தன்னடக்கமுள்ளவர். உழைப்பவர், தீர்வு கொண்ட அறிவாளி. தன்னறிவில் நிறைவு காண்பவர், எப்போதும் முனைவுடன் செயலாற்றுபவர், மெத்தனமில்லாதவர், தவறுசெய்யக் கூசுபவர், நல்வழியில் பிறரால் பண்படுத்தலை ஏற்பவர். பிறரது ரகசியத்தை வெளியிடாதவர், விரும்பியது கிட்டியதால் மதர்த்து நில்லாதவர், விரும்பியது கிட்டாததால் சோர்வடையாதவர். சலனமற்ற உறுதிமிக்க அறிவுள்ளவர். எதிலும் ஒட்டாதவர், இத்தனைப் பண்புச்சிறப்புகளால் எங்கும் எவராலும் பாராட்டப் பெறுபவர். குணங்களின் சிறப்பு நிறைந்தவரும் ஆற்றல் மிக்கவரும் தூயவரும் குழப்பமற்றவரும், நேரமறிந்து முறையறிந்து செயல்படுபவருமான இவருக்கு யார் தான் நலம் புரிய மாட்டார் ?'' கிருஷ்ணரின் இந்தப் பாராட்டை பீஷ்மர் பாண்டவர்களிடம் வெளியிடுகிருர்.

பக்தரான நாரதர் வால்மீகியிடம் **नियतात्मा महावीर्यः** எனத்தொடங்கி பகவானின் 25 குணங்களைக் கூறி **स हि सर्वगुणोपेतः** என்று நிறைவு செய்கிருர். பகவான் கிருஷ்ணரோ பக்தரான நாரதரின் குண்ங்களைக் கூறிய பின்னரும் நாரதரை அதனுல் தான் போற்றுகின்றனர் (ஒவ்வொரு சுலோக முடிவிலும் **तस्मात्सर्वत्र पूजितः**) என்று கூறி நிறைவு காணுதவர்போல், ''இவர் விரும்பியதைச் செய்யாதவர் எவரிருப்பார்'' ? என்று வியக்கிருர். பகவான் தன் பக்த மாஹாத்மியத்தில் இவ்வாறு திளைக்கிருர். பக்திக்கு

வழிகாட்டுவதற்கெனவே பகவானே நாரதராகத் தோன்றினார். திருவையாற்றில் வாழ்ந்த தியாகய்யரின் பக்திமார்க்கதரிசியாகத் அண்மையில் தோன்றினார். வருங்காலத்திலும் நாரதர் வழிகாட்டுவார்.

உள்ளத்தில் தூய்மை. உள்ளே எப்போதும் நிறைந்துள்ள பகவானைப்புலப்படுத்தும். அறியாமை, அன்பின்மை, மன உறுதியின்மை என்ற மூன்றால் உள்ளத்தில் மாசு படிந்து இறைவனது இருக்கையை உணர இயலாமல் செய்கிறது. அறியாமை அகல குருவின் அருளால் ஈசதத்துவத்தை உணர்வோம். இது ஞானயோகம். அன்பால் அவன் தாள் பற்றுவோம். இது பக்தியோகம். ஈசனை வழிபடுகிற முறையையும் ஈசன் வகுத்துள்ள உலகின் நியதியையும் நியதிக்கும் மனித இயல்புக்கும் உள்ள முரண்பாட்டைப் போக்கும் வகையையும் நன்கு உணர்ந்து, பிறவியுடன் தொடர்கிற கடமைகளைத் துணிவும் உறுதியும் கொண்டு ஆற்றி, நல்வழி நடந்து, நல்லது பேசி, நல்லெண்ணம் பெற வாழ்வின் முறையைத் தெய்வ வழியில் பண்படுத்தி வாழ்வோம். இது கிரியா யோகம். நாரதரின் குண சித்திரம் இந்த மூன்றுயோக முறையில் பண்பட்டவரின் விளக்கமே. துணிந்து தொடர்ந்து பயின்றால் இவற்றில் பலவற்றைப் பண்பாக சீலமாகப் பெறமுடியும். நாரதர் அவ்வாறு வாழ்ந்து நலம் பெற்றவர். அதனைக் கருவிலிருக்கும் சிசுவும் உணரும்படி புகட்டுபவர். பரிவும் கரிசனமும் மிக்கவராகத் தான் இந்தச் சிறிய நூலைத் தந்துள்ளார். இதில் விளக்கப் பெறாத பக்தி வழி எங்கும் காண இயலாது. பெரிதும் சிறிதுமான வழிகாட்டி நூல்களில் பொதிந்துள்ளதனைத்தையும் இதில் காணலாம். உள்ளங்கை நெல்லிக்கனி இது.

பக்தி மார்க்கத்தில் பலபடிகள். இவற்றில் எது சிறந்தது ? எது எளிது ? எல்லாமே சிறந்ததும் எளிதானதும் தான். இவை அனைத்தும் படிகளாக அடையவேண்டியதற்கு ஸாதனங்களே. அதேநேரத்தில் இவை பக்தியின் அங்கங்களும் கூட. அங்கங்களிலும் எது முதலிடம் பெறும் ? எல்லாமே முதலிடம் பெறுபவை தான். உடலின் ஓர்

அங்கத்திற்குத் தருகிற பயிற்சி உடல் முழுவதிலும் ஆரோக்கிய நிலையைப் பரப்பும். பக்தி ஸாதனமாக ஒன்றைப்பழகும் போது ஸாதனபக்தியே ஸாத்ய பக்தியாக ஒரு நொடியில் மாறலாம். பல பிறவிகளில் செய்த பயிற்சி இப்பிறவியில் பலன் தரலாம். அவன் அருளானது கூடாததைக் கூட்டுவிக்கும்.

வால்மீகி மஹரிஷி ஸ்ரீராமனுக்கு யோகவாஸிஷ்டம் மூலம் ஆத்மஸாதன யோக முறையைப் போதித்தார். ஸ்ரீ கிருஷ்ணர் பகவத் கீதை மூலம் அர்ஜுனனுக்கு ஆத்மயோகத்தைப் போதித்தார். வியாஸர் ஸ்ரீமத் பாகவதத்தின் மூலம் பரம்பொருளாக கிருஷ்ணனை உணர்த்தி அதேயோகத்தைப் பரப்பினார். இத்தகைய நூல்கள் பல உண்டு. அவற்றில் கூறியதனைத்தும் இந்த 84 ஸூத்ரங்களில் அடங்கியுள்ளதைப் படிக்கப்படிக்க உணர்வோம். கடவுளையும் மனிதனையும் உலகையும் இணைத்து ஒன்றாக உணர உதவி, கடவுள் வழிபாட்டில் மனித நேயமும் ஜீவ காருண்யமும் எல்லாமான அவரது அனுபவமும் சித்தத்தில் வற்றாத ஊற்றுக் கண்ணாக மலர்வதை பக்தி காட்டும்.

**அழகும் ரஸமும் :-** அழகு நாம் காண்கிற பொருளில் உள்ளது. பூவும் அழகானது. கருநாகமும் அழகானது தான். பூவின் அழகு நம் மனத்தில் இனம் தெரியாத இனிய உணர்வான அழகை உணர்த்துகிறது. பாம்பின் அழகு பயம் கலந்த அழகுணர்ச்சியை மனத்தில் பதிக்கிறது. பூவின் அழகிற்கோ பாம்பின் அழகிற்கோ தனித்த இருக்கை இல்லை. பார்ப்பவனின்றி அந்த அழகால் ஆவதொன்றுமில்லை. அதனை அழகாகச் சுவைக்கத் தெரிந்தவனிடமே அந்த அழகு பல ஜாலங்களை விளைவிக்கிறது. அழகு என்பது தக்கவாறு அதனை உணர்பவனின் உள்ளத்து உணர்வாகும். அழகான பொருள் காட்சியை விட்டகன்ற பின்னரும் பார்த்தவனின் உள்ளத்தில் ஆயுள்முழுவதும் கூட கணக்கற்ற தடவை அசை போட்டு உணர ஏற்ற தாகிறது. அந்த அசைபோடத் தக்க ஆழ்மனத்து உணர்வே 'ரஸம்' ஆகிறது. அப்போது ரஸிப்பவனின்

உள்ளத்திலும் உடலிலும் பல்வேறு உணர்வுகள் மலர்கின்றன. அவற்றை பாவம் விபாவம் ஸ்த்தாயீ பாவம் (**भावः विभावः स्थायीभावः**) என்பர்.

நாம் உண்ட கொழுக்கட்டை முதலில் கொழுக்கட்டை ருசியாக மனத்தில் பதிந்தது. இது வெளிப்படையான (பாஹ்ய) பாவமாகும். நாக்கின் எல்லையில் கொழுக்கட்டை விழுங்கப்பட்ட பின் சிறிது நேரம் தனித்துப் பொருளின்றி சுவைமட்டும் உணரப்பட்டது. அந்த உணர்ச்சியின் தனித்தன்மை சிறிது சிறிதாகக் கழன்று, வெறும் இனிப்பாக இருந்தது. இனிப்பென்ற உணர்வும் கழன்று சுவை என்ற உணர்வானது. பின் அதுவும் கழன்று இனியது (ரஸம்) சுகமானது. நாக்கில் கொழுக்கட்டை, மனத்தில் கொழுக்கட்டை இனிப்பு, உள்ளத்தில் இனிப்பு, ஆத்மாவிடம் ரஸம் என்று ஒன்றே பல நிலைகளில் பலவாறு உணரப்பெறுகிறது

பக்தி ரஸம் என்பது ஆத்மா மட்டும் உணரக்கூடியது. அங்கு ரஸம், ரஸிகன், ரஸிக்கப்படும் பொருள் எனத் திரிபுடிப்பிரிவைக்காணோம். பக்தியுணர்வாக உள்ளத்திலும் உடலிலும் காணப்படுகிற சில பாவங்கள் உண்டு. கண்கள் மூடி உலகை வெளியில் உணராத. வேறொன்றிருப்பதையே உணராத நிலை, மயிர் கூச்செரிதல், குரல் தழதழத்தல், கண்ணீர் பெருகுதல், புலம்பல், கூத்தாடுதல், உணர்வற்ற நிலை என்றவாறு பல பாவங்கள் தொடர்பற்று அன்பின் விளக்கங்களாக அமையும். இவை உணர்ந்து செய்யப்படுகிற- உணர்ச்சிக்கு உட்படுகிற செயல்கள் அல்ல.

இவையே தீவிரமாகிப் பாவாவேசநிலை பெறுவதுண்டு. கோராகும்பார் பானைசெய்ய மண்ணை மிதிக்கத் தொடங்கியவர் பாவாவேசத்தால் தன் சிசுவும் மிதிபடுவதை உணராதபடி கோரதாண்டவமாடினார்.

காமமும் கோபமும் ரஸமாக, பாவமாக, பாவா வேசமாக அமைவதுண்டு. பாவாவேசமாக ஆழ்மனத்தினுள்

நிலேத்து மந்யு என்ற உள்ளழுத்தமாக நிற்பதுண்டு. இந்த மன்யு காமத்தாலோ கோபத்தாலோ விளேந்திருந்தால் தனக்கும் சூழ்ந்திருப்பவருக்கும் கேடு விளேவிக்கக்கூடும்.

ஆத்மா மட்டும் உணர்கிற ரஸ நிலே. பிரும்மானந்த நிலே. அதுவே பிறரும் புரிந்து கொள்ளக்கூடியதானுல் பாவ நிலே. பாவாவேசநிலேயில் அதனேப் பலரும் இனியதாக ஏற்கத்தகாததாகிவிடலாம். உடலால் மட்டும் வெளிப்படாமல் உள்ளத்தால் உவந்து ஏற்கத்தக்க அழகும் ரஸமும் கொண்டமையால் பகவானுக்கு ராமன் கிருஷ்ணன் சிவன் கல்யாண ஸுந்தரன் ஸுந்தரீ லலிதா ஸுமுகன், முருகன் காமேச்வரன், காமாக்ஷீ என்று பெயரிட்டு உவகையுடன் வாயாரப் பாடுகிருேம். அப்பெயர்கள் உள்ளம் உவக்கும் அழகை விளக்குபவை.

பக்தியை ரஸமாகவே மதுஸூதனஸரஸ்வதீ ரூபகோஸ்வாமி முதலாஞேர் தம் நூல்களில் விளக்குகின்றனர். ரஸமுள்ள பொருள் மறைந்த பின்னரும் காட்சிக்குவராத நிலேயிலும் அமுதம் போன்று இனிக்க இனிக்க ரஸம் உணர்வில் மிதக்கிறது. அந்த பக்தி ரஸமே இந்நூலில் தெளிவுபடுத்தப் பெற்றுள்ளது.

ஐந்து அத்தியாயங்களாக, 84 ஸூத்திரங்களாக அமைந்த இந்நூலில் பரபக்திநிலேயும், அதன் பெருமையும், அந்நிலே அடைய உதவுகிற ஸாதனங்களும், அந்த பக்தி எனும் அன்பு நிலேவிளக்கமும் பரபக்தி நிலேயில் உள்ளவரின் பெருமையும் விளக்கப்பெறுகின்றன.

நாரதர் - நாரம் எனும் உண்மைப் பொருளுணர்வைத் தருபவர். அவர் இயற்றிய நூலானதால் நாரத பக்தி ஸூத்ரம் எனப்படுகிறது. நூலே உண்மைப் பொருள் உணர்வாகிய நாரத்தை இன்றுவழங்குவதால் நாரதமான பக்தி ஸூத்திரமும் ஆகிறது.

श्रीगुरुभ्यो नमः

# नारदभक्तिसूत्राणि

## नारदमहर्षिप्रोक्तानि

# நாரத பக்தி ஸூத்ரங்கள்

## நாரதமஹர்ஷி இயற்றியவை

## प्रथमोऽध्यायः - முதல் அத்தியாயம்

## परभक्तिस्वरूपम् - பரபக்திநிலை

वन्दे गुरुपद द्वन्द्वमवाङ् मनसगोचरम्।
रक्तशुक्लप्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः ॥

दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम्।
वामकुच निहितवीणां वरदां सङ्गीतमातरं वन्दे ॥

दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काप्यन्यतमिका।
मदाराध्य श्रीमद्गुरुचरण निर्णेजन जलैः
पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया ॥

श्रुति स्मृतिपुराणानामालयं करुणालयम्।
नमामि भगवत्पाद शङ्करं लोकशङ्करम् ॥

परित्यज्य मौनं वटाधः स्थितिं च
व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम्।
मधुस्यन्दिवाचा जनान्धर्ममार्गे
नयन् श्रीजयः श्रीगुरुर्भाति चित्ते ॥

अपारकरुणासिन्धुं ज्ञानदं शान्तरूपिणम्।
श्रीचन्द्रशेखरगुरुं प्रणतोऽस्मि मुदाऽन्वहम्॥
तव तत्त्वं न जानामि तदमेयं धिया मम।
अनीदृशस्त्वं प्रथितस्तादृशे ते गुरो नमः॥

जयति जगति मायां यस्य कायाधवस्ते
वचनरचनमेकं केवलं चाकलय्य।
ध्रुवपदमपि यातो यत्कृपातो ध्रुवोऽयं
सकल कुशलपात्रं ब्रह्मपुत्रं नतोऽस्मि॥

**१. हरिःओं अथातो भक्तिं व्याख्यास्यामः**

**ஹரி: ஓம். அதாதோ பக்திம் வ்யாக்யாஸ்யாம:**

**अथ** *இப்போது* **अतः** *அறிய ஆர்வத்தை முன்னிட்டு* **भक्तिं** *பக்தியை* **व्याख्यास्यामः** *விரிவுடன் விளக்குவோம்.*

*ஹரி: ஓம் என்பது நூல் தொடங்குமுன் கூறப்படுகிற மங்களச் சொல். மங்களத்துடன் தொடங்கப்படுகிற பணி இனிது நிறைவுறும். ஹரி மங்களமானவர். அறியத் தடையாயிருப்பதை நீக்குபவர் -* **हरति**. *அறிய உதவுவதை அருகில் கொணர்பவர் -* **आहरति**. *உள்ளத்தில் எப்போதும் விளையாடுபவர் -* **विहरति।**

**ओं अथ** *என்ற இரு சொற்களும் உலகைப் படைக்க முனைந்த பிரும்மாவின் தொண்டையிலிருந்து படைப்பின் முதல் பொருளாக வெளிவந்தவை.* **ओंकारश्चाथशब्दश्च द्वावेतौ ब्रह्मणः पुरा। कण्ठं भित्वा विनिर्यातौ तस्मान्माङ्गलिकावुभौ॥** *படைப்பில் முதலில் வெளிவந்தது ஆகாசம். அதன் மூலதத்துவம் சப்தம் எனும் தன்மாத்திரம். அது ஒலிபரவ ஆகாசம் என்ற ஆதாரமானது. அதனுள் சப்தம் குணமாக ஆகாசப் பொருளின் நிலையை உணர்த்தியது. ஒலி ஓம் என உருப்பெற்றது.*

படைப்பிற்கு ''ஓம்- எல்லாம் ஆயத்தமாகிவிட்டது'' ''அது சரி'' அத - இனி - மேலும் - இதன்பிறகு ? அத:- தொடங்குவோம்.'' என்ற பிரும்மாவின் எண்ண அலை ओं अथ अत: என்ற சொல் வடிவம் பெற்றது. அதுவே உலகின் மங்களத்தொடக்கமானது. அந்த மங்களத்தன்மைமிக்க சொற்களை நூலின் தொடக்கத்தில் அமைப்பது சான்றோரின் மரபு. நாரதரும் அதனை முதலில் வைக்கிறார். ஸூத்திரம் என்பது, தான் எடுத்துக் கொண்ட துறையின் மூலதத்துவ விளக்கத்தை சுருக்கமாக, நினைவில் எப்போதும் கொள்வதற்கு ஏற்றபடி சிதறுதபடி நூலில் கோர்த்துத் தருகிற நூல். வியாஸரின் பிரும்ஹஸூத்ரம், பதஞ்ஜலியின் யோகஸூத்ரம், கபிலரின் ஸாங்க்ய ஸூத்ரம் முதலியவை ஸூத்ர அமைப்பில் அந்தந்தத் துறையின் ஆதி நூலாக வெளிவந்தவை. ओं अथ अत: என்ற மூன்று சொற்களை முன் அமைத்து எழுதப்பட்டவை.

பக்தி என்பது பகவானிடம் மனிதன் உள்ளத்தில் உணர்கிற அன்பாகும். அந்த அன்பு அன்புக்குரியவரிடம் பாயும் போது உணர்ச்சிகளாக, செயல்களாக, சொற்களாக வெளிப்படும். அவ்வாறு வெளிப்படுவதனைத்திற்கும் மூல ஊற்றுக்கண் பக்தனின் உள்ளத்தில் வற்றாதிருக்கும். அந்த அன்பு உணர்வு பரா பக்தியாகும். சொல்லாக உணர்ச்சியாகச்செயலாக அது வெளிப்படும் போது அபரா பக்தி எனப்படும்.

பக்தி பற்றி அறிய ஆர்வமும் தகுதியும் திறமையும் வாய்ப்பும் உள்ளவரே பக்திபற்றிய விளக்கம் பெற்றுச் செயலால் பின்பற்றுவர். அதே நிலையிலிருந்து பிறருக்கு விளக்கி, அதனைப்பின் பற்றச்செய்கிற ஆர்வமும் தகுதியும் திறமையும் வாய்ப்பும் பெற்றவரே உபதேசிப்பார். இருவரும் அருகில் அமர்ந்துள்ளனர். (अथ). இனி, விவேகமும் வைராக்யமும் தமமும் சமமும் அடங்காத மீமாம்ஸையும்

இயல்பாக இருவரிடமும் அமைந்திருப்பதன் காரணமாக[1](अतः) இனி பக்திபற்றி விளக்குவோம்.

பக்தி என்பது ஆழ்ந்த உள்ளுணர்வு. உடலாலும் கண் முதலிய பொறிகளாலும் மட்டும் பெறத்தக்கதல்ல. மனமும் புத்தியும் சித்தமும் அஹங்காரமுமான உள்ளமும் இதற்கேற்ற பக்குவநிலை பெற்ற பிறகே இந்த ஆழ்ந்த உள்ளுணர்வைப் புரிந்துகொள்ளும். உள்ளத்தைப் பக்தி உணர்விற்கேற்றவாறு பயிற்சிகளால் பண்படுத்தவேண்டும். இந்தப் பண்படுத்தலுக்கு உட்படுகிற உள்ளப்பாங்கே பக்தி பற்றி அறியத் தகுதியாகும்.

வர்ணம் ஆசிரமம். கல்வியறிவு, ஆண், பெண் என்ற எந்தப்பாகுபாடும் இதன் தகுதிபெற நேரிடையாக உதவுவதில்லை.

समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति, न प्रियः ।
ये भजन्ति तु मां भक्त्या मयि ते, तेषु चाप्यहम् ॥
अपिचेत्सुदुराचारो भजते मां अनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥

(கீதை9)

''நான் அனைவரிடமும் சமம். எனக்குவேண்டியவரோ வேண்டாதவரோ இல்லை. என்னை அன்பால் அணுகுபவரை நானும் அன்புடன் அணுகுகிறேன். கெட்டவனாயினும் என்னை அண்டியவன் நல்லவனே. அவன் நல்வழியில் முனைந்துள்ளான்''. உள்ளம் பண்பட்டு திடமான அன்புடன் இறைவனை அடைவதும் பக்தி. அதற்கான பயிற்சியும் பக்தி தான்.

1. **விவேகம்**:- நிலையற்றதையும் நிலைத்ததையும் பகுத்தறிந்து பிரித்து நிலைத்ததை உணர்தல். **வைராக்யம்** - கவனத்தைச் சிதறவிடாமல், ஒரே சமயத்தில் பலவாறுனவற்றைச் சபலத்தால் பற்றுமல் நல்லது என்றுணர்ந்ததைப் பற்றுவதில் மட்டும் நாட்டம். **தமம்** - பொறிகள் கெட்டலையாமல் நோக்கத்திற்கேற்பக் கட்டுப்படுவது. **சமம்** - பொறிகளைக் கட்டுப்படுத்துவதற்கேற்ற மனவடக்கம். **மீமாம்ஸா** - தத்துவ அறிவு பெற முனைவு.

சாண்டில்யர் தன் பக்தி ஸூத்ரத்தில் கீழ்ச்சாதியில் பிறந்தவனும் பக்தியை உணரத் தகுதி உள்ளவனே. பக்தி உணர்வு பெறவிரும்புவது அனைவருக்கும் பொதுவானது. அவ்வாறு உபதேசமும் அனுபவமும் பரம்பரையாக இன்று வரை வந்துள்ளதென்று கூறுகிறார். **आनिन्द्य योनि अधिक्रियते पारंपर्यात् सामान्यवत् ।** *(ஸூ78)*

பக்தி உணர்வால் தூய்மை பெற்று இறைவனடி சார்ந்தவரை எல்லா இனத்தாரிடம் காணலாம். கல்வியும் கேள்வியும் பண்பாடும் மிக்க பக்தர்களும் உண்டு. பரத்வாஜர், வால்மீகி, நாரதர், வியாஸர், சுகர், சங்கரர் முதலிய பேரறிவாளிகளிடையே குகனும், சபரியும், கோபியும், கண்ணப்பரும், நந்தனாரும் உண்டு.

சுகாசாரியர் பாகவதத்தைப் பரீக்ஷித்திற்கு உபதேசிக்கத் தொடங்குமுன் பகவானை வணங்குகிறார்.

**किरातहूणान्ध्र पुलिन्द - पुल्कसाः**
**आभीरकङ्का यवनाः खसादयः ।**
**येऽन्ये च पापाः यदुपाश्रयाश्रयाः**
**शुध्यन्ति तस्मै प्रभविष्णवे नमः ॥** *(பாகவதம்.2.4.18)*

பகவான் தூய்மையே வடிவானவர். தூய்மைப்படுத்துபவர். தூய்மைப்படுத்துபவரிடமுள்ள தூய்மைப்படுத்துகிற சக்தி அவர். **पवित्राणां पवित्रं यो मङ्गलानां च मङ्गलम् ।** தூய்மைபெறச் சிறிதும் தகுதியற்றவரையும் தூய்மைமிக்கவராக்கி, தூய்மைமிக்க மற்றவரால் வணங்கத்தக்கவராகவும் மாற்றி விடுவார். பகவானின் பெயருக்கே அந்த ஆற்றல் உண்டு. பகவானை அன்பால் தன்னுள்ளத்தில் குடிகொள்ளச் செய்ய முடியும். இந்த பக்தி உணர்வொன்றே போதும். வேறு இனம், ஆண் - பெண், ஜாதி, கல்வி, கேள்வி, செல்வம் என்ற எந்தப்பாகுபாடும் பக்திக்கு இடையூறு அல்ல.

ஆனால் பகவானிடம் அவர்கள் கொண்டுள்ள பக்தியை அளவிட, பகுத்தறிய, தான் உணர, பிறருக்கு விளக்க, நல்லாசிரியரிடம் நல்ல முறையில் உபதேசம் பெறத் தகுதி அவசியமானது. பக்தி உணர்வு சொல்லால் விளக்கத் தக்கதல்ல. திராக்ஷையின் இனிப்பை நாக்கால் உணரலாம். மற்றவற்றிலுள்ள இனிப்புகளைவிட திராக்ஷயின் இனிப்பு வேறுபட்டுள்ளதையும் உணரலாம். திராக்ஷ என்ற பொருளை மறந்து நாக்கின் அடியில் மட்டும் வெளிப்படுகிற பொருள் சாராத்தித்திப்பையும் உணரலாம். தித்திப்பு என்ற சுவையாக உணர்ந்ததே சுவை என்ற நிலையையும் இழந்து ஆனந்தமாக நிற்பதையும் உணரலாம். திராக்ஷயின் இனிப்பு முதல் கடைநிலையாகிய ஆனந்தம் வரை உள்ள உணர்வலையைச் சொல்லால் விளக்க இயலாது. ஆனால் தத்துவ விளக்கம் பெறச் சொல் ஒன்றே ஸாதனம். சொல்லைக் கொண்டு அனுபவமாக உணர்ந்ததொன்றை விளக்கும் போது விளக்கம் செய்பவனும் விளக்கம் பெறுபவனும் சொல்லின் மீதேறி உணர்வென்ற அனுபவத்தை அவரவரே உணரவேண்டும் பாமரனும் திராக்ஷயின் இனிப்பை உணர்ந்து ஆனந்தமடையலாம். அது இனிப்பின் தனித்திறமை. ஆனால் அதன் நிலைகளை விளக்கத் தகுதி மிக்கவரால் தான் முடியும்.

கண்ணப்பருக்கு நொடியில் பக்தியுணர்வு தோன்றி அதன் எல்லைக்கே சென்று விடுகிறார். அதனை விளக்கவந்த சங்கரபகவத் பாதர்கள் சிவானந்த லஹரியில் ''भक्तिः किं न करोत्यहो वनचरो भक्तावतंसायते। பக்தியுணர்வு எவ்வாறெல்லாம் விளையாடுகிறது? காட்டுமிராண்டி பக்தர்களின் தலைவனும்! என்று வியக்கிறார். கண்ணப்பனிடம் காணப்பெறுகிற உணர்வுச் சித்திரங்களைச் சொல்லால் வடிக்க இயலாது. பக்தர்களின் சரித்திரங்களில் பகவானிடம் வைத்த பக்தி வேறு உபசரணங்களின்றி, காரிய காரணத் தொடர்பின்றி, பல அற்புதங்களை நிகழ்த்தியதைக் காணலாம். அந்த அற்புதங்கள் பகவானிடம் பக்தன் கொண்டபக்தி விளைவித்தவை. பாமரனும் பக்தியால் பகவானிடம் ஆட்படுகிறான். பகவானும் பக்தனின் வசப்படுகிறான். இந்த அன்பின் பிணைப்பு சொல்லில் அடங்காதது.

பக்தி எனும் தத்துவத்தை விளக்கவந்த சாஸ்திரமாக நாரதரின் இந்நூல் அமைந்ததல்ல. தாயன்பைப் பல கோணங்களில் நின்று பிறருக்குத் தெளிவாக்குவதற்கென்றே படம் பிடித்துக் காட்டுவதற்கொப்பானது. படம் பிடித்தவனின் நோக்கமறிந்து அவனது மனக்கோணத்தின் வழியே சித்திரம் உணர்த்துவதை அறிவதே இங்கு முக்கியம்.

சமுதாய நீரோட்டத்தில் பண்படுத்தப் பெருத ஹூணரும் கிராதரும் கசரும் யவனரும் மற்றவரும் பகவானை அன்புடன் நெருங்கி, அவரைத் தன்னவராக்கி, தனது வாழ்க்கையை அவரது பொறுப்பில் அர்ப்பணம் செய்து, தான் அவரைச்சார்ந்துள்ளதை ஒவ்வொருநொடியிலும் செயலிலும் உணர்ந்து சரணடைந்து தூய்மை பெற்றதை சுகாசாரியர் தன் வணக்கத்தில் தெரிவித்துக் கொள்கிருர்.

உள்ளத்தில் உள்ளவருடன் அன்புடன் பழகுவது பக்தி. அவருடன் ஒன்றி வாழ்வது பக்தி. அவனின்றி ஓரணுவும் அசையாது என உணர்ந்து அவருக்கு ஆட்படுவது பக்தி. அவர் உள்ளும் வெளியுமிருந்து தன்னை ஆட்படுத்துகிற பாங்கை உணர்ந்து ரசிப்பது பக்தி. பகவானும் தானும் என்ற நிலைமறந்து பரமப்பிரேமை மட்டும் உணர்வதும் பக்தி. அந்நிலை ஜ்ஞானத்தின் உச்சநிலை. அதனை விளக்குகிருர் நாரதர்.

2. सा त्वस्मिन् परमप्रेमरूपा।

ஸா து அஸ்மின் பரம - ப்ரேம - ரூபா

**सा तु** அந்த பக்தியே **अस्मिन्** இந்த பகவானிடத்தில் **परमप्रेमरूपा** பேரன்பு உருவானது.

வாழ்க்கையில் அன்பு மும்முனைகொண்டது, அன்பை வெளிப்படுத்துபவன், அன்புக்குரியபொருள். இருவரையும் இணைக்கிற அன்பெனும் உணர்வு என இந்த மூன்றும் ஒன்றையொன்று சார்ந்திருக்கும். சார்பு அகன்ருல் தன் நிலை இழந்து விடும். இது அபரப்ரேமை. தாய் தன் சிசுவிடம் வைத்த அன்பு இத்தகையது. சிசு தன்னுடையது என்ற

மமதையாகிய பாசமில்லாவிடில் தாயிடம் இந்த அன்பு தோன்ருது. தான் தாய் என்கிற அஹந்தையும் இந்த அன்பை பரிமளிக்கச்செய்யும். தான் தாய், தனது சிசு அது என்ற நிலையில்லாவிடில் அந்த அன்பு தோன்ருது. தன் சிசுவாக இல்லாத மற்ெருரு சிசுவிடம் அந்தப்பிணைப்பு ஏற்படுவதில்லை. ஆனுல் அந்த அன்பே முதிர்ந்து தான் தனது என்ற சார்பின்றித் தூய அன்பாக மாறுவது நிகழக் கூடியதே. அன்பில் பிணைத்துக் கொள்ள விரும்பாத, தன்னை வெறுக்கின்ற மகனிடம் எவ்வகை எதிர் பார்ப்புமின்றி எங்கிருந்தாலும் வாழ்க ! என்று வாழ்த்துகிற தாயும் உண்டு. அபரப்பிரேமையின் உச்சகட்டமிது.

தாயும் மகனும் அன்பால் இணைவது இருவரும் பரஸ்பரம் அன்பை வெளிக்காட்டத் தக்க சூழ்நிலையால் வலிவு பெறுகிறது. பகவானிடம் முதலில் காட்டுகிற பக்திப்பாசாங்கு ஒருதலைப்பட்டது. பகவானிடம் அந்த பக்தியின் பிரதிபலிப்பு உணரத்தக்கதாயில்லை. முதலில் சில இடையூறுகள் நேரும் போது பகவான் சோதிப்பதாக உணர்வோம். பக்தி அதனுல் தளராவிடில் சோதனையில் வெல்வோம் என்ற நம்பிக்கை வருகிறது. பல பக்தர்கள் தமது வாழ்நாளில் பல சோதனைகளைக் கடந்தே பகவானைச் சென்றடைந்துள்ளனர் என்ற வரலாறு நம்பிக்கைக்கு உதவுகிறது. பகவானின் எதிர்பார்ப்பற்ற (அவ்யாஜ) கருணை, தாயினும் சிறந்த பரிவு, தன்னை மேனிலைக்குக் கொணர்வதில் அவரது கரிசனமும் கனிவும், அவரை நினைத்த உடன் கூப்பிட்டகுரலுக்குச் செவி சாய்ப்பவராக உணர்வது, என்று ஒருதலையுணர்வாக இருந்தது இருதரப்பிலும் உள்ளதாக உணர்ந்து நெகிழ்தல் என்று பல கோணங்களில் பக்தி முதிர்ந்து பக்வநிலை பெறுகிறது.

பக்வ நிலைக்கு வந்த பக்தி பேரன்பாக சுய நலம் சிறிதும் கருதாத அஹந்தை - மமதையற்ற அன்பாக மாறுகிறது. தானும் இல்லை. தனக்கென எதனையும் வேண்டுவதற்கில்லை. அன்பே மங்களம். அன்பே அமுதம். கிருஷ்ணன் கோகுலத்தை விட்டு மதுரை சென்றுவிட்ட நிலையிலும், அவனைவிட்டுக் கணநேரம்

பிரிந்திருந்தாலும் நொடியும் யுகமாவதாக (त्रुटिर्युगायते त्वामपश्यताम्) நினைத்திருந்த கோபிகள் கோவிந்த தாமோதர மாதவ என்றால் வாயால் கூறி மனத்தால் நினைத்தகணமே தம் தமது உள்ளத்தினுள் பேரானந்தவடிவனான கிருஷ்ணனைக் கண்டானந்திப்பவராகி கிருஷ்ணனின் பிரிவையே அவர்கள் உணரவில்லை. அன்புக்குரியவரும் அன்புடையவரும் என்றும் பிரிவதில்லை. இருவரின் உள்ளமும் பிரிய விருப்பவரைப் பிரிய இயலாதபடி கட்டிப்போடுகின்றன. கிஷ்கிந்தையின் அருகே ருச்யமூகத்திலிருந்த ராமனின் உள்ளத்தில் லங்கையிலுள்ள ஸீதை குடியிருக்கிறாள். ஸீதையின் உள்ளத்தில் ராமன்குடியிருக்கிறார். ஹனுமான் லங்கையில் சிம்சபாமரத்தின் மீது அமர்ந்தவராக நினைவு கூர்கிறார். अस्या देव्या मनस्तस्मिन् तस्य चास्यां प्रतिष्ठितम्। மனத்தை விட்டகலாதபடி பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளதாம் ! கோபியரும் ராஸக்ரீடையின்போது கிடைத்த பயிற்சியால் மனத்திலும் பேச்சிலும் செயலிலும் உணர்விலும் கிருஷ்ணன் இயங்குவதையும் உணர்ந்தவராக தம் தமது தனித்த இருப்பையே உணர்ந்தாரில்லை என்கிறார் சுகாசார்யர்.

तन्मनस्काः तदालापाः तद्विचेष्टाः तदात्मिकाः ।
तद्गुणानेव गायन्त्यः नात्मागाराणि सस्मरुः ॥ (பாக.10.30)

பாவாவேச நிலையில் சிலநொடிகளுக்குத் தன்னை இழக்கலாம். அது தாற்காலிக ஆவேச உணர்ச்சியல்ல. முழுவதும் பகவானால் தன்னியல்பாக ஏற்கப்பட்டுள்ள நிலை. கிருஷ்ணன் மதுரை சென்று கம்ஸனை அழித்து யதுராஜ்ஜியத்தை நிலைநிறுத்தியபின் தன்னைவிட்டுப்பிரிந்த கோபியரின் நிலையை உலகிற்கு உணர்த்த உத்தவரைக் கோகுலத்திற்குத் தூதுவராக அனுப்புகிறார். உத்தவரும் சிறந்த பக்தரே. எனினும் கோபியர் அடைந்துள்ள நிலையைத் தான் பெற விரும்பி கோபியரின் திருவடிபட்ட புழுதியை வணங்கி எழுகிறார்.

**वन्दे नन्दव्रजस्त्रीणां पादरेणुमभीक्ष्णशः ।**
**यासां हरिकथोद्गीतं पुनाति भुवनत्रयम् ॥** (10.47.63)

*மனச்சபலத்தால் பலவற்றை நாடுபவர் எனத் தாம் நினைத்த வனவாசிப்பெண்கள் எங்கே ! கிருஷ்ணனிடம் இப்படிப் பேரன்பு கொண்டு அவனிடம் உள்ளத்தைப் பதித்த இவர்கள் எங்கே ! ஈசன் தொடர்ந்து அன்பால் தன்னிடம் லயித்த அறிவிலிகளான இந்தப்பேதைகளை மேனிலைக்குக் கொண்டு சேர்த்துள்ளானே ! இவர்களின் திருவடிபட்ட தரையில் புல்லாகவோ பூண்டாகவோ முளைத்தாவது நான் கரை காண்பேனே ! தான் தன் மக்கள் என்று இறுகப் பிணைத்திருந்த பாசத்தை அகற்றி வேதமும் தேடிக்காணாத முகுந்தனின் திருவடியைச் சார்ந்துள்ளனரே ! என்று வியக்கிறார்.*

**क्व माः स्त्रियो वनचरी : व्यभिचारदुष्टाः**
**कृष्णे क्व चैष परमात्मनि रूढभावः ।**
**नन्वीश्वरः अनुभजतः अविदुषोऽपि साक्षात्**
**श्रेयः तनोति अगदराज इव उपयुक्तः ॥**

**आसामहो चरणरेणुजुषां अहं स्यां**
**बृन्दावने किमपि गुल्मलतौ षधीनाम् ।**
**या दुस्त्यजं स्वजनं आर्यपथं च हित्वा**
**भेजुः मुकुन्दपदवीं श्रुतिभिर्विमृग्याम् ॥** (10.59,61)

*இது பரமப்ரேமநிலையின் புறக்காட்சி. இதன் ஊற்றுக் கண்ணாக உள்ளே நிலைத்திருப்பது பரமப்ரேமையாகிய பரா பக்தி. பராபக்தியில் அவ்வாறு ஊறி நிற்பதால் தான் பிரிவையோ அதனால் ஏற்படுகிற ஆற்றாமையையோ கோபிகள் உணரவில்லை*

**सा परानुरक्तिः ईश्वरे** *என்று சாண்டில்யர் பக்தியின் ஸ்வரூபத்தை தனது பக்தி ஸூத்திரத்தின் தொடக்கத்தில் விளக்குகிறார். பகவானிடம் வைக்கப்பெறுகிற தொடர்ந்த பேரன்பே பக்தி என்று சாண்டில்யர் விளக்குகிறார். ரக்தி என்பது உணர்வால் வெளிப்படுகிற அன்பு. அது பழுத்து இயல்பாகிப்*

பிரிக்க இயலாததால் எப்போதும் தொடர்வது –அநுரக்தி. இதற்கு வெளிப்பாடு அவசியமில்லை. உள்ளத்திலேயே சுரந்து அங்கேயே நிறைவுற்று வெளிப்பாட்டை எதிர்பாராத அன்பு இது. ஈசன் தன்னிறைவு பெற்றவன். எதனையும் செய்யவும் மாற்றிச்செய்யவும் செயலற்றிருக்கவும் சுதந்திரத்தை இயல்பாகப் பெற்றவன். அவனிடம் தொடர்ந்து நிலைத்த அன்பும் அத்தகையதே, நாக்கால் தேனின் இனிப்பை உணர்வதும் இனிப்பதால் அதன் தேவையை உணர்வதும் ரக்தியாகும். என்றோ ருசித்த தேனின் இனிப்பு நாக்கை விட்டகன்று மனம் அதன் தேவையை உணராத நிலையிலும், உள்ளத்தில் அந்த இனிப்பு சுவையாகி, சுவையும் ஓர் உணர்வாக உருமாறி உள்ளத்தில் பதிவது அனுரக்தி. அதுவும் அமுதாக இனிக்கும்.

நாரதர் **अस्मिन् परमप्रेमरूपा** என்கிறார். தனிச்சிறப்புள்ள சிவன் ராமன் அம்பாள் என்று தன் பிரிய - இஷ்ட தெய்வத்திடம் என்று பொருள் கொள்ள இயலாதபடி பொதுவாக **இவரிடம்** **अस्मिन्** எனப் பக்தி பூணு மிடத்தைக் குறிப்பிடுகிறார். சாண்டில்யரும் **परा अनुरक्तिः ईश्वरे** என்று **ஈச்வரனிடம்** பரம அனுரக்தி என்கிறார். பக்தி வடிவத்தையும் தனிச் சிறப்பையும் தனித்துக் கொள்ளாமல், அன்புக் குரிய அன்பு வடிவம் என்றே பகவானிடம் அன்பு கொள்கிறது. நிர்விசேஷமான அன்பு நிர்விசேஷரான பகவானிடம் ஏற்பட்டது.

பொதுவாகப் பரம் பொருளை **तत्** என்று ஸர்வநாமச் சொல்லால் குறிப்பிடுவர். **तत्** அது எனும்போது உணர்விற்கப்பாற்பட்டதென்றும் பொருள்படும். அதே பரம்பொருளானது இங்கு பராபக்தியால் உணரப்பெற்று அருகில் வந்ததால் **अस्मिन्** இவரிடம் என்று நெருக்கமும் குறிப்பிடப்பெறுகிறது.

பேரன்பு என்பது என்ன ? பகவானின் குணங்களைக் கேட்டும் சொல்லியும் உள்ளத்தின் பிரியப் பொருளாகத்

தொடர்ந்து உணர்ந்தும் தொடர்பறுபடாமல் தாரையாக உள்ளத்தில் ஓடுவதால் சித்தம் நெகிழ்ந்து பகவானின் உருவம் தன்னுள் சிறிதும் அகலாமல் பதிந்து நிற்க, அவரிடம் சித்தப் போக்கு நிலேத்து நிற்பதைப் பக்தி என்கிறுர் மதுஸூதநஸரஸ்வதீ.

**द्रुतस्य भगवद्धर्मात् धारावाहिकतां गता।**
**सर्वेशे मनसो वृत्तिः भक्तिरित्यभिधीयते ॥** (பக்திரஸாயனம்)

நாரதபாஞ்சராத்திரம் என்பது நாரதருடன் தொடர்பு கொண்ட மற்ருெருநூல். அதில் பக்தி பற்றிய விளக்கம் **अनन्यममता, विष्णौ ममता प्रेमसङ्गता । भक्तिरित्युच्यते ।** வேறுபொருளில் என்னுடையது என்று பற்றின்றி, பகவானிடம் என்னுடையது என்ற பற்று அன்புடன் இணேந்து வெளிப்பட அதுபக்தி. மற்ருெரு விளக்கம். **सर्वोपाधिविनिर्मुक्तं तत्परत्वेन निर्मलम् । हृषीकेण हृषीकेशसेवनं भक्तिरुच्यते ।** தனது உணர்வுகள் வெளிப்பொருள் நாட்டமின்றி பகவானிடம் மட்டும் பதிந்து நிற்பதால் தெளிந்துள்ளன. பக்தியால் ஒன்றைப்பெறலாம் என்ற நோக்கமும் இல்லே. அவ்யாஜ பக்தி - நிருபாதிக பக்தி. உள்ளம் அவரை நாடக் காரணம் உள்ளத்தின் ஈசன் அவர் தான் என்ற நிச்சயம். அவரைக்காண அவரது வழிபாடு உதவும். பக்தி உணர்வின் செயல் வெளிப்பாடாக ஹ்ருஷீக ஈசஸேவநம். இதுவே பக்தி.

கோபால பூர்வதாபினி உபநிடதத்தில் உள்ள விளக்கம். **भक्तिरस्य भजनं, एतत् - इहामुत्रोपाधिनैराश्येन अमुष्मिन् मनः कल्पनम्।** இறைவனே வழிபடுவது பக்தி. இம்மையிலும் மறுமையிலும் பெறத்தக்கவேருென்றில் நாட்டமும் எதிர்பார்ப்பும் இதன் பலனுக. ஏற்படாது. பகவானிடத்தின் மனம் மையம் கொள்ளும்.

நாரத பாஞ்சராத்ரத்தில் மற்ருெருவிளக்கம். **मनोगतिः अविच्छिन्ना हरौ प्रेमपरिप्लुता। अभिसन्धिविनिर्मुक्ता भक्तिः विष्णुवशङ्करी ।**

ஹரியிடத்தில் அன்பு தளும்பி நிற்கின்ற உள்ளத்தின் இடையருத நாட்டம் பக்தியாகும். அதனுல் இதனைப் பெற வேண்டியது என்ற எதிர்பார்ப்பு இருக்காது. பகவானை அது பக்தனின் வசப்படுத்தும் என.

ஸ்ரீபகவத்பாத சங்கரர் விவேக சூடாமணியில் **स्वस्वरूपानुसन्धानं भक्तिरित्यभिधीयते। स्वात्मतत्वानुसन्धानं भक्तिरित्यपरे जगु:** என்று விளக்கம் தருகிருர். பிரியம் தருவதையே நாடுவது இயல்பு. பிரியமான எல்லாபொருளையும் விட ஆத்மா தான் ஒருவனுக்குப் பிரியமான பொருள். மிக மிகப் பிரியமானது. காலத்தாலோ தேசத்தாலோ பொருளாலோ வேறுபடாமல் தானே தானாயுள்ள ஆத்மாவிடம் வைக்கிற பேரன்பே முக்திக்கான ஸாதனங்களில் மிகப் பெரிது. பேரன்பால் ஒன்றைப் பற்றிக் கொண்டால் அதன் இயல்பைத் தொடர்ந்து உணர்வதையே மனம் விரும்பும். அதுவே பக்தி. தனக்கும் அதற்குமிடையே வேற்றுமை உணரப்பெறின் துன்பம் விளையும். வேற்றுமையற்ற நிலை உணர நீண்டப்பயிற்சி தேவை. வேற்றுமையுணர்வு முழுதும் நீங்காத நிலையிலும் தனக்கும் அதற்குமிடையே வேற்றுமையில்லை என்ற பாவனை வலிவுடன் தொடர்ந்து தன் ஆத்மநிலையைச் செயற்கையாக உணர்வதும் பக்திதான். பக்தி ஆழ்ந்து நிலைக்கப்பேரன்பு அன்புக்குரியவனையும் அன்பால் அணுகுபவனையும் இணைத்துவிடும். இருவரும் பேரன்பினுள் கரைந்து பேரன்பாக ஆகிவிடுவர். இதுதான் முக்தி. இதுதான் பராபக்தி.

பரா பக்தி என்ற மேனிலை பெறப்பல வழிகள் உண்டு. அவையனைத்தும் பராபக்தி நிலைக்கு இட்டுச் செல்பவையே. பிறரைத் துன்புறுத்தவும் தன்பெருமையைக் காட்டவும் பிறரைவிடத்தான் உயரவும் பற்பல நாட்டங்களுடன் பகவானை வழிபடுவதுண்டு. அது **தாமஸ** பக்தியின் விளைவு. தன் உயர்வை மட்டுமே நாடி வழிபடுவது **ராஜஸம்**. தனது வினைப்பயனுக ஏற்படுகிற துயரிலிருந்து மீளக் கழுவாயாக, ஈசுவரார்பணமாக வழிபடுவது **ஸாத்விகம்**. இவை அனைத்திலும் வெளிப்பொருள் நாட்டத்தின் காரணமாகப்

பகவானை வழிபடுவர். இதைத் தாண்டிய நிலை ஒன்று உண்டு. கங்கை நீர் கடலையடைவது என்ற ஒரே நோக்குடன் கடலை நோக்கி, கடலுடன் இணைவதில் ஆர்வத்துடன் பெருகி ஓடும். அதனால் கங்கைக்குத் தனிப்பெருமை இல்லை. கடலுடன் கலப்பதால் கங்கை என்ற தனி நிலையையும் அது இழக்கிறது. தான் இனியது, கடல் உப்புக் கரிக்கும் என்ற ஏற்றமும் தாழ்வும் மனத்திலில்லை. கடலுடன் தனியுணர்வு மறந்து மறைந்து விட்டது. அதைப்போல் பக்தனின் சித்தப்போக்கும் பகவானது சித்தப்போக்கில் இணைந்துவிட்டது. ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் என்ற மிகமிக விரும்பத்தக்க நிலையைப் பகவானே தந்தாலும் அவையும் பகவானிடமிருந்து வேறுபட்டு நிற்க வாய்ப்பளிக்குமோ என்று அவைகளை வேண்டி ஏற்கமாட்டார். இவ்வாறு பாகவதம் பக்தியில் ஊறிய பக்தனின் நிலையை விளக்குகிறது.

मद्गुणश्रुतिमात्रेण मयि सर्वगुहाशये।
मनोगतिरविच्छिन्ना यथा गङ्गांभसोऽम्बुधौ॥
अहैतुकी अव्यवहिता या भक्तिः पुरुषोत्तमे।
सालोक्यसार्ष्टिसामीप्यसारूप्यैकत्वमप्युत।
दीयमानं न गृह्णाति विना मत्सेवनं बुधाः॥

(3.29-11.13)

அந்த பராபக்தி எனும் பேரன்புணர்வு வெளிப்படுகிறபோது பகவானை உடையவராகவும் தன்னை உடைமையாகவும் கொண்டு அவரை வழிபட முற்படுவர். அந்நிலையில் பிரிந்திருப்பதில் துன்பமில்லை. ஆனந்த நிலை தொடர்கிறது. ஸமாதியில் ஆத்மாவை உணர்ந்து ஏகனாக நின்றவன் ஸமாதிகலைந்ததும் அந்த உணர்வு சிறிதும் மங்காமல் வேற்றுமைமிக்க உலகுடன் ஒட்டாமல் பழகுவான். இந்த உடையவர் - உடமை நிலையும் வேற்றுமையுணர்வற்றதே. கடலில் கங்கை நீர்போன்றதே. பகவான் கிருஷ்ணன் உத்தவரிடம் கோபியரின் பராபக்தி நிலையை இவ்வாறு விளக்குகிறார்.

**ता नाविदन् मयि अनुषङ्गबद्ध**
**धियः स्वमात्मानमदः तथेदम्।**
**यथा समाधौ मुनयोऽब्धितोये**
**नद्यः प्रविष्टा इव नामरूपे ॥** *பாக 11.12.12*

*''கோபிகள் தன் பக்திமிக்க நிலையில் தன் ஆத்மாவிற்கும் எனக்குமிடையே வேற்றுமையுணர்வின்றி என்னிடம் கலந்தனர். ஸமாதியில் ஆத்மாவிடம் முனிவர் லயமடைவதைப்போல், நதிகள் கடலில் கலப்பதுபோல் பெயரும் உருவும் மறைந்து ஒன்றாயினர்.''*

*பரம் பொருள், பராபக்தி பிரும்ஹஜ்ஞானம் முதலிய நிலைகள் விளக்கத்திற்கு உட்படாதவை. அந்த நிர்விசேஷ நிலை ஈசுவரன் பகவான் இறைவன் என ஏதோ குறிப்பீட்டிற்கு உட்படுகிறது. அந்த நிலையும் விளக்கத்திற்கு உட்படாததே. கருணையால் மேலும் கீழும் ஏறி இறங்கி, சிவபெருமான் - பார்வதி, விஷ்ணு - லக்ஷ்மி, விநாயகர், ஸ்கந்தன், ராமன், கிருஷ்ணன் எனத் தந்தையும் தாயும் ஆசானும் மகனும் மகளும் நண்பனும் உறவினனுமாகி மக்களோடு மக்களாக வாழ்ந்து உய்வித்த தெய்வநிலையிலும் பெரும்பாலும் மனித அறிவுக்கப்பாற்பாட்டவை அதிகம். மனிதன் கற்பனையில் தெய்வத்தைப் படைக்கிறான் என்பவரும் உண்டு. தெய்வநிலை மனித அறிவு அளவில் கற்பனையாகத் தான் தோன்றும். பெரும்பாலும் அறிவிற்கப்பாற்பட்டதை மனிதனின் உள்ளுணர்வு ஒன்று தான் உணரமுடியும். தாயன்பு கூட அறிவிற்கப்பாற்பட்டதே. அறிவுஜீவிகள் அன்பை உணரஇயலாது. தெய்வ அன்பு தாயன்பை விடப்பன்மடங்கு சூட்சுமமானது. அதிலும் பராபக்தி நிலையோ உணர்வைக் கடந்தது.*

*பக்தனுக முதலில் பகவானை வழிபாட்டின் மூலம் அணுகுகிறான். வழிபாட்டில் உள்ளத்தின் துணை கொண்ட உடல் பணிவிடை புரிகிறது. தன்னைத் தாஸனுக்கிப் பகவானை ஸ்வாமி (எஜமானன்) ஆக்கிக் கொள்ளநேர்கிறது. தனக்கு*

இவரே ஸ்வாமி. வேறு எவருமில்லை என்ற உறுதியுடன் வழிபாடு விரிகிறது. அப்போது உடலையும் உள்ளத்தையும் துணை கொண்டு ஜீவனே வழிபடுகிறான். வழிபடுகிற தெய்வம் இவனை ஆட் கொண்டுவிட தனது ஆத்மாவென்று இதுகாறும் நினைத்ததொன்று மறைந்து, ஆட்கொண்ட தெய்வமே இவனது ஆத்மாவாகிவிடுகிறது. देहबुद्ध्या तु दासोऽहं जीवबुद्ध्या त्वदंशकः। आत्मबुद्ध्या त्वमेवाहं इति मे निश्चिता मतिः। இந்த வழிபாடு பக்தியாக உருவெடுக்கிறது. அதேசமயம் பக்தியும் வழிபாடாக உருவெடுக்கிறது. இந்தபக்தி எனும் உள்ளன்பும் வழிபாடு என்ற செயலால் வெளிப்படுகிற அன்பின் வெளிப்பாடும் தன் தன் தனித் தன்மை இழந்து கலந்து பஜனம் என்றும் பக்தி என்றும் நிலைபெறுகிறது. உள்ளன்பில் தூய்மையும் அடர்த்தியும் வேறு பொருள் நாட்டத்திற்கு இடம் தருவதில்லை.

உள்ளத்தினுள்ளே பக்தி ஆழ்ந்திருந்தாலும் அதைச் சொல்லால் வெளிப்படுத்திக் காதால் கேட்டு மனத்தால் சுவைத்து மறுபடி உள்ளத்தின் உள்ளுணர்வாக அடிக்கடி மாற்றிப்பார்ப்பர். சுகரைப்பற்றிய விளக்கம் தருகிற ஸூதர். பரமபக்தரும் பரமஜ்ஞானியும் அவதூதருமான சுகர் எதற்காக ஹரிகதா கானம் செய்கிறார் ? என்றகேள்விக்கு இவ்வாறு விடை தருகிறார்.

आत्मारामाश्च मुनयो निर्ग्रन्था अप्युरुक्रमे।
कुर्वन्त्यहैतुकीं भक्तिं इत्थंभूतगुणो हरिः।
हरेर्गुणाक्षिप्तमतिः भगवान्बादरायणिः।
अध्यगा न्महदाख्यानं इत्थंभूतगुणो हरिः॥

(பாகவதம் 1.7.10)

ஆத்மானுபவத்தால் தளும்பாத நிறைகுடம். மௌனமே அதன் அடையாளம். வெளியில் எந்த சிடுக்கிலும் சிக்காதவர். ஹரி அவர் உள்ளத்தையும் பறித்தார். அது அவரது தனிச்சிறப்பு. பற்றற்ற துறவியாக பாலசுகர் காட்டில் சுற்றிய

போது தந்தை வியாஸர் மகனே என்று உரக்க அழைத்தது காதில் விழாது சென்றவர், ஹரியிடம் ஆட்பட்டுத் தந்தை முன் அடங்கி ஒடுங்கி அமர்ந்து ஹரிபற்றி வேண்டிப்பாகவதத்தை - பெருங்காதையை முறைப்படி ஓதினர். பக்தி உட்புகுந்ததும் பகவானின் குணங்கள் விரிவாகக் காட்சி தருகின்றன. அவற்றைக் கற்றறிந்த பின்னரும் நிறைவுறுமல் மேலும் மேலும் கேட்டறிகின்றுர். சுகர் முதலானேரும் பராபக்தி நிலையான பரமப்ரேமையை ஹரிகுணகானத்தின் மூலம் பெற விழைகின்றனர். அந்த பரமப்ரேமை எல்லையற்றுப் பரம்பொருள் போல் விரிந்து கொண்டே போகிறது. அதனுல் இது இவ்வாறு இதனுல் என நிரூபணம் செய்வதற்கில்லை. அத்தனை பரமம் அது பரம. பிரேமரூபமான பக்தி தன் நிலையில் அமிருதமாகவுமிருப்பதை அடுத்த ஸூத்ரம் விளக்குகிறது.

3. अमृतस्वरूपा च।

அம்ருதஸ்வரூபா ச.

அந்த பரமப்ரேமரூபமான பக்தி अमृतस्वरूपा च அம்ருதத் தன்மை கொண்டதும் கூட.

பிறக்கிருன், இருக்கிருன், வளர்கிருன், உருமாறுகிருன், தேய்கிருன், மறைகிருன் என ஒவ்வொரு வரும் ஆறு நிலைமாற்றங்களுக்கு உட்படுகிருர்கள். ஜனன மரணம் என இதைச் சுருக்கிக் கூறுவர். பிறப்பதற்காக இறப்பர். இறப்பதற்காகப் பிறப்பர். மரணம் ஈருன மாறுபாட்டிற்குட்படாதிருத்தலே அமரநிலை. அதைத் தருவதே அம்ருதம். அந்த அமர நிலையும் காலவரைக் குட்பட்டதே. புண்யம் குறைந்ததும் அமரநிலையிலிருந்து நழுவி விழுவர். அந்த அமரநிலையைத் தருவது அம்ருதம். பாற்கடலைக் கடைந்தெடுத்த வெண்ணெய் அது. செயலால் விளைவதனைத்தும் அழியும். அமிருதத்திலுள்ள அமிருதத்தன்மை செயலால் விளைந்தது. இயல்பால் அமிருதமானதல்ல. பராபக்தியோ செயலால் விளைந்ததல்ல. அது இயல்பால் பேரன்பானது. அதனுல் அதிலுள்ள அமிருதத் தன்மை இயல்பால் அமைந்தது. எது எதற்கு ஸ்வரூபமோ

இயல்போ, அது அதனை விட்டகலாது என்பது நியதி. பரமப்ரேமையின் இயல்பு அம்ருதம் — நிலைமாருமை. பரா ஸத்தா என்பதன் மற்ெருரு விளக்கம் அம்ருதம் என்பது.

அன்பு முதிர்ந்து பக்தியாகிறது. பக்தி முதிர்ந்து இனி முதிர்ச்சி பெற வாய்ப்பில்லாதபோது பராபக்தியாகிறது. இந்த பக்தி வாஸனையாகவும் அமையும். ஜடபரதரின் முன்பிறவி ருஷபயோகியின் புதல்வரான பரதராக. அந்தப் பிறவியின் இறுதியில் மானைக்காப்பாற்றுகிற கருணை கடைசி வாஸனையாக அமைய, மறுபிறவியில் மானுகப் பிறந்து பற்றற்ற முன்ஜன்ம வாஸனையால் தனித்து வாழ்ந்து. ஜடபரதயோகியாஞர் இந்திரத்யும்னர் என்ற அரசன் சிறந்த பக்திமாஞயினும் ருஷிசாபத்திற்கு உட்பட்டு அடுத்த பிறவியில் யானையாகி முன்ஜன்மவாஸனையாகிய பக்தி இப்பிறவியிலும் தொடர சிறந்த விஷ்ணுபக்தஞன கஜேந்திரஞகிருன்.

பிறப்போடு பற்பல வாஸனைகள் மனிதனைத் தொடர்கின்றன. அவற்றில் மனிதன் தன்முயற்சியால் கேடுவிளைவிக்கிற துர்வாஸனைகளை மாற்றவும் குன்றி ஒடுங்கச்செய்யவும் முடியும். இந்த வாஸனைக்ஷயம் தாரணைக்குப் பெரிதும் உதவும். ஈசுவரனைப் பற்றிய வாஸனை மட்டும் எந்தமாற்றுபாயத்தாலும் மழுங்காது, மறையாது; மாருது. ஒவ்வொரு பிறவியிலும் அது வலிவு பெற்று தனதுஇயல்பான அம்ருதத் தன்மையை ஸாதகனிடம் பரவச் செய்யும். வேறு பாப வாஸனைகளால் ஈனப்பிறவி பெற்ருலும் ஈசுவரவாஸனை குன்ருமல் தன் நிலை விளக்கம் தரும். கண்ணப்பனும் நந்தஞரும் இதற்கு உதாரணம். பகவான் அம்ருதஸ்வரூபி. அவரிடம் வைத்த பக்தி அம்ருத ஸ்வரூபா. அந்தப்பக்திக்கு ஸாதனமான தெய்வவாஸனையும் அம்ருதமே. சூரன் மஹிஷன் பண்டன் முதலிய அசுரர்களும் குகன் துர்க்கை லலிதை முதலிய ஈச்வரஸ்வரூபங்களுடன் போரிட்டதில் தமது அசுர வாஸனைகளை இழந்து உள்ளத்தில்கனன்று நின்ற தெய்வபக்தி வாஸனையால் உயர்நிலை பெறுகின்றனர். அமரர்கள் பெற்ற தாற்காலிக அமரநிலை அல்ல இது.

பிரும்ஹத்தோடு, ஈசுவரனோடு சிவனோடு, ஸ்கந்தனோடு, தேவியோடு பிரியா இணைப்பு நிலை இது. பகவானை ஆராவமுதன், அபர்யாப்தாம்ருதன் என்பர். அவனது அருளால் பெறுகிற நிலையும் ஆராவமுத நிலையே. तमेवं विद्वान् अमृत इह भवति। (புருஷஸூக்தம்) अथ मर्त्योऽमृतो भवति, अत्र ब्रह्म समश्नुते (கடோபநிஷதம்) மாறுபாடற்ற இந்த அம்ருத நிலையே ஆனந்தம். இதனைப் பெற மனிதனும் முயன்று பக்திப்பாதையில் வழுவாமல் செல்லவேண்டும். செயற்கையாகப் பழகிய பயிற்சியும் இயல்பாகும். மனிதனின் உழைப்பை எதிர்பாராமல் கருணையால் பகவான் இவனை அமுதநிலைக்கு ஆக்குவதும் உண்டு. यमेवैष वृणुते तेन लभ्यः । तस्य एष आत्मा विवृणुते तनूं स्वाम् (கடோபநிஷத்) பகவான் தன்னால் தேர்ந்தெடுப்பவனுக்கு மட்டுமே தன்னைக் காண்பிக்கிறார். எனினும் தேர்ந்தெடுக்கத்தக்க பலருள் தாமும் நிற்பது மனிதனின் முயற்சியால்தான். பலபிறவிகள் எடுத்தாயினும் குன்றாத முயற்சியுடன் அந்நிலை பெற மனிதன் முற்படவேண்டும்.

அந்த பக்தியால் பெறவிருக்கிற நிலை எது ? நாரதர் விளக்குகிறார்.

4. यत् लब्ध्वा पुमान् सिद्धः भवति, अमृतः भवति, तृप्तः भवति ।
யத் லப்த்த்வா புமான் ஸித்த்த: பவதி , அம்ருத: பவதி, த்ருப்த: பவதி

यत् लब्ध्वा எதனைப் பெற்றதும், உடன் पुमान् தன் இலக்கைத் தன் முயற்சியால் அடைய முனைந்துள்ள ஜீவன், सिद्धः भवति - பணிநிறைவுபெற்றவனாகிறான். अमृतः भवति சீர் மாறுபாடற்ற (அழிவற்ற) நிலை பெற்றவனாகிறான். तृप्तः भवति தன்நிறைவு பெற்றவனாகிறான்.

பக்தி செயலும் உணர்வும் இணைந்ததொன்று. செயலால் பெறவிரும்பியது கிட்டினால் அது ஸித்தி. விரும்பியது

மனிதனுக்குக் குறைகள் நிறைய உண்டு. ஏன்பிறந்தேன் என்றே குறைப்படுவர். மாற்ற இயலாததொன்றில், பெறஇயலாததொன்றில் குறை காண்பது மனிதனின் பலவீனம். ஆசார்ய சங்கர பகவத்பாதர் சிவானந்தலஹரியில் பகவானிடம் இவ்வாறு வேண்டுகிறார். "இறைவ ! உடலால் மனிதனுகவோ தேவனுகவோ காட்டு விலங்காகவோ கொசுவாகவோ வீட்டு மிருகமாகவோ புழுவாகவோ பறவையாகவோ இருப்பேன். எந்த உடலானுலும் விரும்பி ஏற்கிறேன். ஆனுல் ? என் உள்ளம் உமது திருவடித்தாமரைகளை நினைந்துருகிப் பேரானந்தப் பேரலை மீது விளையாடுவதில் ஈடுபடுவதாக அமைத்துத்தாரும்."

नरत्वं देवत्वं नगवनमृगत्वं मशकता
पशुत्वं कीटत्वं भवतु विहगत्वादि जननम्।
सदा त्वत्पादाब्जस्मरणपरमानन्द लहरी -
विहारासक्तं चेद्, हृदयमिह, किं तेन वपुषा॥

(ச்லோ10)

மனித உடலும் தெய்வப்பற்றுள்ள உள்ளமும், மிருக உணர்ச்சிகளுக்கு அடிமையாகாத மனமும் சான்ருேர் சென்ற வழியில் செல்வதில் ஆர்வமும், வேதம் ஸ்மிருதி புராணம் முதலியவற்றைக் கற்றுப் பேரறிவு துலங்கத்தகுதியும் பெற்றவனே ஈசனை உணரமுடியும் என்ற நியதியை முழுவதும் உணர்ந்து பின்பற்றுகிற பகவத்பாதர்கள், புழுவும், பூச்சியும் பறவையும் விலங்கும் கூட பகவானின் திருவடிகளைப் பற்றத் தக்க உள்ளப்பாங்கைப் பகவானின் திருவருளால் பெறலாம் என்பதையும் உரக்கக் கூறுகிருர். **वनचरो भक्तावतंसायते** (*சிவானந்த 63*) காட்டுமனிதன் பக்தர் தலைவனுனது அவருக்குக் கிடைத்த சான்று. பக்திக்குத் தகுதி எது ? **यथा पशुपतेः पादार विन्दद्वयं चेतोवृत्तिरुपेत्य तिष्ठति सदा सा भक्तिरित्युच्यते ।** (*சிவானந்த 61*) சித்தப்போக்கு பசுபதியின் இரு திருவடித்தாமரைகளைச் சென்றடைந்து அங்கேயே நிலைத்தால் அது பக்தி. அது வேதம் உபநிஷதம் முதலியவற்றை ஓதத்தகுதி பெருதவனும்

மனத்தைப் பண்படுத்துவதற்கான வழிகாட்டியைப் பெருதவனும் அவ்வழியே இதுகாறும் சென்றறியாதவனுமான கண்ணப்பன் சிவனிடம் லயமடைந்துள்ளானே என வியக்கிருர். அதனுல் பக்தி உடலையும் தகுதியையும் காரணமாக்கிவந்ததல்ல. அன்பு தானே தோன்றும். இறையருளும் துணை நிற்க நிறைவடையும். எல்லாம் வல்லதாகும். அழிவற்று நிலைக்கும். காக்கைக்குத் தன் குஞ்சுபொன்குஞ்சு. அன்பின் விளைவது. அதனைஎங்கு என்று அது பயின்றது ? அதன் உள்ளம் அன்பை உணரப் போதுமானதாயிருந்தது. அந்த அன்பால் தெய்வத்தை அனிச்சையாகக் கூட அது நாடக்கூடும். பேரன்பை இயல்பாகக் கொண்ட பக்தி மட்டுமிருந்தால் போதுமானது.

புருஷன் ஸித்தனுக அம்ருதனுக திருப்தனுக ஆவதால் அவனிடம் ஏற்படுகிற மாற்றம் பற்றி விளக்குகிருர்.

5. यत् प्राप्य न किञ्चिद् वाञ्छति, न शोचति, न द्वेष्टि, न रमते, नोत्साही भवति।

யத் ப்ராப்ய ந கஞ்சித் வாஞ்ச்சதி, ந ஶோசதி, ந த்வேஷ்டி, ந ரமதே, ந உத்ஸாஹீ பவதி ।

यत् प्राप्य - எந்த அதனை அடைந்த பிறகு. किञ्चित् न वाञ्छति எதனையும் அவன் விரும்புவதில்லை. न शोचति வருந்துவதில்லை. न द्वेष्टि வெறுப்பதில்லை न रमते அதில் ஆர்வத்துடன் சுயவிருப்புடன் ஈடுபடுவதில்லை. न उत्साही भवति ஆர்வம் மிகுந்து மீண்டும் அதனிடம் விருப்பை வளர்த்துக்கொண்டு உற்சாகம் கொள்வதில்லை.

பக்தனின் மனம் பகவானிடம் கொண்ட அன்பால் நிறைந்து விட்டது. பகவான் ஆனந்தமே வடிவானவர். இதுவரை அடையாதிருந்த அந்தப் பேரானந்தத்தை இப்போது பக்தன் பெற்ருன். (லப்³த்⁴வா). கிடைத்த பேரானந்தம் இவனுள் நிரம்பியுள்ளது. (प्राप्य). வெளியேருது. எந்தப்பொருளையும் இன்பம் பெறவே இதுவரை விரும்பியிருக்கிருன். இப்போது

எல்லையற்ற இன்பம் நிலைத்ததாக இவனிடம் நிரம்பியுள்ளது. அது இவனுடையதே. தேவையுணர்வு எழாதபடி நிலைத்து உள்ளதால் அவன் மனம் இனி எதனையும் நாடாது (न वाञ्छति). விரும்பிப் பெற்றதை இழக்க நேர்ந்தால் வருத்தம் வரும். இதுவோ தன்னை விட்டு இனி எந்நிலையிலும் நீங்காது என்றதை உணர்ந்ததால் வருத்தத்திற்கு வாய்ப்பே இல்லை. தேவையுணர்வின்மையால் விரும்பியது கிட்டவில்லையே என்று ஏங்கி வருந்தவும் வாய்ப்பில்லை. (न शोचति). அடைய விரும்பியதைப் பெறமுடியாமல் எவரேனும் தடுத்தாலும் விரும்பியது தன்னிடம் வர மறுத்தாலும் கோபமும் தடுப்பவரிடமும் மறுப்பவரிடமும் வெறுப்பும் வரும். பகவான் உள்ளத்தில் குடிகொண்டுவிட்டார். அவரது வரவைத் தடுப்பவர் எவருமில்லை. பக்தனின் உள்ளத்தைத் தனதாக்கிக் கொள்வதில் அவரே ஆர்வமுள்ளவர். வெறுப்பதற்கு வாய்ப்பே இல்லாததால் பக்தன் வெறுப்பதில்லை. (न द्वेष्टि)

''இன்பத்தை நான்பெற்றேன். அந்த இன்பம் என்னுடையதே ! என்ற மகிழ்ச்சியில் அதனுடன் கூடிக்குலாவி இன்பத்தைச்சுவைப்பவனுகத் தன்னைக் காட்டிக் கொள்பவன் சப்புக் கொட்டிக்கொண்டு சுவைப்பான். சுவைக்கப்படும் பொருளை உற்று ஆசையுடன் காண்பான். அதன் பெருமையை விளம்பரப்படுத்துவான். (हर्षः-रमणं) பக்தன் தானே தன்னுள் தன்னையே பேரின்பமாக உணர்வதால் பூரிப்படையவோ பலரறியச் சுவைக்கவோ அவனுக்கு ஆர்வமிராது. (न रमते)

எல்லைகாண இயலாத பேரின்பக் கடல் அது. அதில் கரைந்த சிறு கற்கண்டுத் துண்டுபோல் தன் தனித்தன்மை இழப்பதை விரும்பி ஏற்பவன், கடலில் எல்லை வரை தான் பரவவேண்டுமென்று உற்சாகம் கொண்டு முயலமாட்டான். எல்லாமானதன் பகுதி தான் என்ற எண்ணமிருந்தால் மற்றபகுதிகளிலும் ஊடுறுவ முயல்வான். கரைந்து தன் தனி இயல்புகள் அனைத்தையும் எல்லாமான பெரிதொன்றின்

இயல்புகளாக்கிவிட்ட நிம்மதி பெறுவதே அவன் நோக்கம். அது கிட்டி விட்டதா ? இல்லையா என்ற சிந்தனை கூட எழ வாய்ப்பில்லை (नोत्साही भवति)

பராபக்தி நிலைக்கு வந்தவன் நான் ஒரு பகவத் பக்தன் என்ற தன்னுணர்வையும் இழந்துவிட்டான். பகவானது விருப்பமே அவன் விருப்பம். சோகம் துவேஷம், அடையாததைப் பெறுவதில் உற்சாகம் என்ற உணர்ச்சிகள் எழ வாய்ப்பில்லை. அலை ஓய்ந்த பரபரப்பற்ற ஆழ்கடலின் நிலைஅது. குறைகாணாத நிலை. ஆதலால் குறைவை நிரப்பத் தேவை இல்லை. வேறு பற்றின்றித் தான் பற்றுடன் பற்றிய பகவான், தன்னைப் பற்றுடன் பற்றித் தன்னவனாகத் தானாக மாற்றியபிறகு, ஸுகம் - துக்கம், இச்சா - துவேஷம், சோகம் - மோஹம், என்ற துவந்துவங்களற்ற பரவைராக்யம் அவனிடம் நிலைத்துள்ளது.

பராபக்தி நிலையில் வெளிப்பொருளிடம் விருப்பின்மை, வெறுப்பின்மை, வருந்தாமை, ஈடுபாடின்மை ஆர்வமின்மை என்ற ஐந்தும் இயல்பாக அமைகின்றன. ஸாதனபக்தி நிலையிலோ இவற்றை முயன்று பயின்று பழகி வழக்கமாக்கி இயல்பாக அமைத்துக் கொள்ளவேண்டும். ஆத்மாவை உபாஸித்துத்தான் ஆத்மாவை உணரமுடியும். ஆத்மாவல்லாதபொருளில் ஆத்மா என்று எண்ணம் வலியப்பதிந்திருப்பதை மாற்றிக் கொண்டால் தான் இதுதான் உண்மையான ஆத்மா என்பதை உணரமுடியும். பகவானைப் பக்தியுடன் அணுகுவதிலும் வெளிப்பொருளில் வெறுப்பு, சோகம், ஈடுபாடு, ஆர்வம் எல்லாவற்றையும் பயிற்சியால் அகற்றிப் பகவானிடம் மட்டுமே பற்று கொள்வதற்கான பல பயிற்சிகளைச் செய்து பகவானுக்காகவே வாழ்வது என்ற பழக்கம் உறுதிபெற்றால் தான் பராபக்தி நிலையை அடையமுடியும். பராபக்தி நிலையிலும் ஆத்மஜ்ஞான நிலையிலும் காணப்பெறுகிற இயல்புகள் (குணங்கள்) ஸாதனபக்தி நிலையிலும் ஆத்மஸாதன நிலையிலும் பயிற்சியால் பழக்கத்திற்குக் கொணரத்தக்க குணங்களாகின்றன.

பக்தியும் ஜ்ஞானமும் வெவ்வேறல்ல. பக்தியில் பகவான் என்பது பற்றுக்கோல். ஜ்ஞானத்தில் ஆத்மா என்பது பற்றுக்கோல். பகவானே ஆத்மா. ஸாதனவழி, ஆரம்பத்தில் வெவ்வேருகத் தொடங்கும். முடிவில் இணேந்து விடும். **न वाञ्छति, न द्वेष्टि** என்றவாறு இங்கு விளக்குவதை ஒட்டியே வேதாந்த நூல்களும் யோகநூல்களும் விளக்குகின்றன. நைஷ்கர்ம்யஸித்தியில் ஸுரேச்வரர் **उत्पन्नात्मावबोधस्य ह्यद्वेष्टृत्वादयो गुणाः । अयत्नतो भवन्त्येते ।** "ஸாதனநிலேயில் அத்வேஷம் முதலிய சிறந்த நிலேகளேப் பயில வேண்டியிருந்தது. ஆத்மானுபவம் தோன்றிய பின் அந்நிலேகளில் எளிதாக இயல்பாக அவை அமைவதைக் காணலாம்" என்கிருர். பதஞ்ஜலி யோகஸூத்ரத்தில் **सुखानुशयी रागः । दुःखानुशयी द्वेषः । स्वरसवाही विदुषोऽपि तथा आरूढोऽभिनिवेशः। ते प्रतिप्रसवहेयाः सूक्ष्माः ।** இன்பம் என மனம்கண்டு கொண்டு அதனேத் தொடர்ந்து அலேவது ராகமாகும். துன்பம் எனக் கொண்டதைத் தவிர்க்க அதனேத் தொடர்ந்து அலேவது துவேஷம். முன் இவ்வாறு உணர்ந்து சுகமும் துக்கமும் பெற்ற அனுபவம் வாஸனேயாகிப் படித்தவனேயும் முட்டாளாக்கி அவற்றைத் தொடர்ந்தலேவதைக்கிளப்பிவிட்டு, இன்பம் கிட்டாவிடில் துக்கம், துக்கம் கிட்டிடில் துக்கம் என்ற தவருன பற்றை ஆழப்பதிப்பது அபிநிவேசம். இந்த மூன்றும் சித்தத்தின் போக்காக அமைந்துள்ளன. அவற்றை மடைமாற்றிச் சித்தத்தை அதன்வாஸனே எனும் போக்கை இழக்கச் செய்து சித்தத்திற்கும் மூலமான பேரியல்பில் (பிரகிருதியில்) லயமடையச் செய்வதே இதற்கு வழி. பேரியல்பிலிருந்து சித்தம் பிறந்தது. சித்தத்திடமிருந்து ராகம் துவேஷம் முதலியன பிறந்தன. பிறந்தமுறையைப் பின் நோக்கிச் செலுத்துவதே பிரதிபிரஸவமாகும். ராகமும் துவேஷமும் சித்தத்தில் போக்கிழந்து அடங்க, சித்தமும் தன்போக்கிழந்து மஹத்தில் அடங்க, சித்தப்பிரஸவத்தால் ஏற்படுகிற ராகத் வேஷக்கலவரங்கள் மறைகின்றன.

இந்த பிரதிப்ரஸவ முறையில், வெளிவந்த சிசு தாயின் வயிற்றில் மறைந்து சிசுவென்று தன் தனித் தன்மையை இழக்கிறது. தாயும் தன்மூலத்தில் மறைந்து பெறுபவள் என்ற தன் தனித்தன்மையை இழக்கிருள்.

முதலில் விருப்பும் வெறுப்பும் வருத்தமும் ஆர்வமும் உற்சாமும் கொடுத்த பொருளில் நாட்டம் குறையப் பயிற்சிகள் எடுக்க, அவை தனி உணர்ச்சிகளாக ஆட்டிவைத்த நிலை தடைபடுகிறது. பகவானிடம் பயிற்சிநிலையில் வைத்த நாட்டம் முதிர்ந்து இயல்பானவுடன் அந்நாட்டத்திற்கு வேண்டியவரோ வேண்டாதவரோ தடுப்பவரோ தூண்டுபவரோ தேவைப்படாததால், விருப்பின்மையும் வெறுப்பின்மையும் வருந்தாமையும் மற்றதும் இயல்பாகி விடுகின்றன.

குணநிலையிலுள்ள ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்றும் சித்தத்தை ஆட்படுத்துகிற தன் இயல்பை இழந்துவிடுகின்றன. சித்தம் சுத்த ஸத்வமாக ஆகிவிட்டதால் ஸத்வம் முதலிய தன் வெளிப்பாடான ராகம் துவேஷம் சோகம் உத்ஸாஹம் முதலியன தன் நிலை இழக்கின்றன. தன்னலமற்றவனுயிருப்பதால் தன்னளவில் தான் விருப்பு வெறுப்பற்றவனுக இருப்பான். பிறரது துயரைத் துடைப்பதில் முன் நின்று பரிவும் கரிசனமும் இதமான பேச்சும் அன்பால் மிகவும் மென்மை பெற்ற உள்ளமும் ஆர்வமும் ஈடுபாடும் கொண்டு உதவுவான். அவரது துயரில் தான் துயருறுவான். பிறரது சுகத்தில் மகிழ்ச்சியுறுவான். அன்பு என்பதே பிறரது இன்பத்தில் இன்புறுவதும் துன்பத்தில் துன்புறுவதும் தான். तत्सुखसुखित्वं, तद्दुःखदुःखित्वं च । தனக்கெனத் தனித்து முக்திபெறுவதில் கூட நாட்டம் இராது என்கிருர் பிரஹ்லாதர் பகவானிடம்.

नैवोद्विजे परदुरत्ययवैतरण्याः
त्वद्वीर्यगायनमहामृतमग्नचित्तः ।
शोचे ततो विमुखचेतस इन्द्रियार्थ-
मायासुखाय भरमुद्वहतो विमूढान् ॥

प्रायेण देव मुनयः स्वविमुक्तिकामाः
मौने चरन्ति विजने न परार्थनिष्ठाः ।
नैतान् विहाय कृपणान् विमुमुक्ष एकः
नान्यं त्वदस्य शरणं भ्रमतोऽनुपश्ये ॥ (7-9-43.44)

''பெருமானே ! உமது குணங்களைப் பாடுவதாகிய பேரமுதக்கடலில் ஆழ்ந்துள்ளேன். அதனால் நரகபயம் எனக்கில்லை. ஆனால் என்னைச் சூழ்ந்து வாழ்பவர் விஷய சுகமே பெரிது எனக் கருதி மயங்கி வீண்சுமை சுமப்பதைக் கண்டு வருந்துகிறேன். முனிவர்களோ தான் முக்தியடைய விரும்பிக் காட்டில் வசித்து விஷயத் தொடர்பிலிருந்து ஒதுங்குவதாகிய மௌனத்தைக் கடைபிடிக்கின்றனர். அவர்கள் இந்தப் பாமரர்களுக்கு வழி காட்டுபவராக இல்லை. விஷயக்கடலில் ஓயாமல் சுழல்கிற இவர்களுக்கு உதவுபவர் வேறில்லையே ! இவர்களைப் பரிதவிக்கவிட்டு, நான் மாத்திரம் உய்ய வழிதேட விரும்பவில்லை. நீர் தான் இவர்களுக்குப் புகலிடம் தரவேண்டும். எவ்வளவு தேடியும் வேறொருவரைச் காணமுடியவில்லையே'' என ஏங்குகிறார். இதுவும் ஒரு மாறுபட்ட, ஆனால் அன்பால் பகவானுடன் இணைந்தவனின் உட்கிடக்கை. எதனையும் தனக்கெனத் தொடங்காதவனும் (सर्वारंभपरित्यागी) தனக்கென எதனையும் விரும்பான். துயருற்று வாடுகிறவனுக்காக எதனையும் வேண்டிப்பெறுவான். சிபி, ததீசி, ரந்திதேவர் முதலிய பல மேலோர் பிறருக்காக அனைத்தையும் துறந்தனர் என வரலாறு கூறும். ஆப்தகாமனெனச் சிறப்பு பெற்ற கிருஷ்ணரும் கோபர்களைக் காப்பாற்ற முனைவதும், அசுரர்களை அழிக்க முனைவதும், சுயவிருப்பு வெறுப்புகளால் அல்ல. वसन्तवत् लोकहितं चरन्तः । காலம் உணர்வுகளுக்கப்பாற்பட்ட இயற்கையின் ஒரு வெளிப்பாடு. அதுவே வஸந்தமாகி உலகை இன்பத்தில் ஆழ்த்துகிறது. பராபக்தியும் இவ்வாறு லோகஹிதம் புரியும், சுகர் தன் விருப்பு-வெறுப்புகளுக்கு இடம் கொடாத அவதூதர். அவர் பரீக்ஷித்து இருக்குமிடம் வந்து அவன்

வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து ஐயம் நீக்கிப் பகவானை அவரது உள்ளத்தில் நிலைக்கவைத்து அவர் முக்தி நிலை பெறும் வரை கூட இருந்து உதவுகிறார். இது அவர் விரும்பி ஏற்ற பணியல்ல. அவரது உள்ளத்தில் குடி கொண்ட பராபக்தி அவரை அவ்வாறு கட்டிப்போட்டது. பராபக்தி நிலையோ ஞானி நிலையோ. மனிதனைச் செயலற்றவனாகத் துரும்பாக ஆக்கவில்லை. ஈசனின் செயலையே ஸ்வதந்திரமாகச் செய்யும் ஆற்றலிருந்தும் 'தான்' 'தனது' என்ற எண்ணத்திற்கு அடிமையாகி சுய நலத்திற்கு முனைந்து செயலாற்றாத நிலைதான். அது தான் **नैष्कर्म्यसिद्धिः** செயலற்றிருந்து நிறைவு காண்பது எனப்படும்.

மனிதனின் ஆழ்மனத்தை அறிய அவனாலேயே முடியாது. எனினும் அதன் நோக்கம் என்ன என்பதை அவனது நடைமுறையும் அதனைத்தூண்டுகிற உள்ளப்பாங்கும் உணர்த்தும். ஆனால் சில நிலைகளில் அவ்வாறு கண்டறிவதும் எளிதல்ல என அடுத்த ஸூத்திரத்தில் விளக்குகிறார்.

**6. यत् ज्ञात्वा मत्तो भवति, स्तब्धो भवति, आत्मारामो भवति।**
**யத் ஜ்ஞாத்வா மத்தோ பவதி, ஸ்தப்த்தோ பவதி, ஆத்மாராமோ பவதி**

**यत् ज्ञात्वा** எந்த அதனை உணர்ந்தவன் **मत्तः भवति** தன் நிலையுணர்வின்றி மதம் பிடித்தவனாகிறான். **स्तब्धः भवति** செயலற்றுத் திமிர்த்துவிடுகிறான். **आत्मारामः भवति** ஆத்மானுபவத்தில் ஈடுபட்டவனாகிறான்.

பராபக்தியின் நிலை சொல்லால் விளக்கக் கூடியதல்ல. பக்தனின் நிலையைக் கொண்டு ஒருவாறு ஊஹித்தறியலாம். அவன் சுற்றுப்புறத்தை உடலாலோ உள்ளத்தாலோ உணர்வதில்லை, உணர்வதில் ஆர்வமும் கொள்வதில்லை. தனக்குள் இறைவன் நிறைந்துள்ளதால் வேறொன்றையும் பிரித்தறிவதோ ஒன்றை தனித்து ஏற்பதோ அவனுக்குத் தேவைப்படவில்லை. கங்கையின் இனிய தெளிந்த நீரில் மூழ்கி எங்கும் அதன் குளிர்ச்சியும் இனிமையும்

கண்டானந்திப்பவனின் நிலேயை ஒத்தது. வெளியுலகமே கண்களில் படுவதில்லே. பகவானேச் சரணடைந்து அவருக்குள்ளேயே புகுந்து அவராகவே ஆகிவிட்ட உணர்வது.

மதம் பிடித்த யானே தன் கட்டுகளேயும் யானேப் பாகனின் ஆளுமையையும் அறுத்துக்கொண்டு மனம் போன போக்கில் செல்வது போல் சுயக்கட்டுப்பாடுகளாகத் தானே ஏற்றவைகளேயும் சமுதாயக்கட்டுப்பாடுகளேயும் உதறி மதம் பிடித்துச் சில சமயம் சுற்றுவான். சில சமயம் அசைவற்று உணர்வற்றுத் திமிர்த்து நிற்பான். வெளியே சுறு சுறுப்புடன் இயங்குபவனுகக் காணப்படுபவனே உள்ளத்தில் எந்தத் தூண்டுதலும் முரண்படுதலுமின்றி அமைதியுடன் காணப்படுவான். தன்னுல் பெறப்படவேண்டியதென நினேத்ததைப் பெற்று (लब्ध्वा) அதனேத் தனதாக்கிக் கொண்டு (प्राप्य) அதில் நிறைவு கண்டவன் அதனே மேனிலேயாகிய தன்னுணர்வாக (ज्ञात्वा)க் காண்கிருன். உணரவேண்டிய பொருள் முதலில் வெளியிலிருந்தது. அது தனக்கு வேண்டுமென விரும்பி அதனேப் பெற்ருன். அதனே தன் வசப்படுத்தித் தன்னுடையதென உரிமை உணர்ந்தான். உரிமைப் பொருள் மெள்ள மெள்ளத் தன்னுடையதென்ற நிலேயிழந்து தானுகவே ஆகிவிட்டது. லாபம், ப்ராப்தி, ஜ்ஞானம் என்ற மூன்றும் ஒரேபொருளே ஒருவன் உணரும் போது காண்கிற உணர்வு மாற்றத்தைக் குறிப்பிடுகின்றன. சொல்லோ செயலோ எண்ணமோ இந்த மாற்றத்தைச் செய்ய முடியாது. உண்மையில் உணரப்பெறுகிறபொருளில் எந்த மாற்றமுமில்லே. உணர்வில் உணர்வு முறையால் ஏற்பட்ட மாற்றமிது. இதுவே உண்மையான உணர்வு.

நான் என்ற உணர்விற்கு ஆதாரமான ஆத்மா, உலகின் ஆதாரமான பரம்பொருள், நான் என்ற வியஷ்டியையும் உலகம் என்ற ஸமஷ்டியையும் இணேக்கின்ற பகவான் என்ற மூன்று தனிக் காட்சிகளும் இணேந்தன. அதனே உணர்ந்ததும் கட்டுக்கடங்காத பெருமிதம் கொள்கிருன். (मत्तः)

செயலிழக்கிருன். (स्तब्धः) ஆத்மாவாக பகவாஞக உள்ள தொன்றே உணர்வில் நின்று அந்த உணர்வேயாகிப் பேரானந்தமாகிருன். (आत्मारामः) ஸாதகனளவில் பரஜ்ஞானமும் பர பக்தியும் என இரு உணர்வுகளில்லே. எவ்வகைக் குறிப்பீடுமற்ற பேருணர்வு அது.

ஸாதகன் இருவழிகளில் இந்தப் பேருணர்வு நிலேக்கு வந்து சேர்கிருன். பக்தியோகமார்கம், ஜ்ஞானயோக மார்க்கம் என தனித்தனிவழியாகவே நின்று அழைத்துச் சென்ற அவை சென்றடைய வேண்டிய இடம் வருமுன்னரே இணேந்து ஒரேபாதையாகிப் பிறகு வழி எனத் தனித்தில்லாமல் அடையவேண்டிய இடமாகிவிடுகின்றன. இரண்டும் அருகருகே செல்வதால் ஒன்றுக்கொன்று உதவவும் கூடும். ஞானயோகத்தின் உதவிகொண்ட பக்திவழி கடக்க எளிதாகும். பக்தியோகத்தின் உதவிகொண்ட ஜ்ஞானவழியும் அவ்வாறே. இவர் எந்தப்பாதையில் செல்கிருர் என்று வெளியே நின்று பார்ப்பவனுக்கு இரண்டும் ஒன்றையொன்று சாராத தனிவழியாகவே புலப்படும்.

பகவத் பக்தி ரஸாயனத்தில் மதுஸூதன ஸரஸ்வதீ இதனே விளக்குகிருர். ''பக்தியும் பிரும்ஹவித்யையும் பெயரளவில் வேறே தவிர இரண்டும் ஒன்றே என்று கருதுவதுண்டு. வேதமோதுதலாலும் வேள்வியாலும் தானத்தாலும் தவத்தாலும் பிரும்மத்தைப் பெரியோர் அறிய முற்படுவர் என வேதம் கூறும். பெரும்புண்ணியத்தாலும் பிரும்மவித்யை பெறக்கூடியது. ஸ்வரூபம், ஸாதனம், பயன், தகுதி என்ற நான்கும் ஸாதன நிலே வரை இரண்டிலும் வேறுபடுபவையே. உள்ளம் நெகிழ்ந்து பகவானின் வடிவைப் பெறுவதும், அவரை அனுபவிக்கப் பல மாறுபட்ட உணர்வுகளேக் கொண்டதும் பக்தி. பிரும்ஹவித்யையில் விகல்பமற்ற உணர்வும் மனமிழந்த நிலேயும் உண்டு. பகவானின் பெருமையைக் கதைகேட்பது முதலியதால் உணர்வது பக்தியில் முக்கியம். மஹாவாக்யங்கள் மூலம் நிர்குணமான பிரும்ஹத்தை உணரச்

செய்வது பிரும்ஹவித்யை. பகவானிடம் அன்பே பக்தியின் பயன். எல்லாத்துன்பங்களுக்கும் காரணமான அஜ்ஞானநீக்கமே பிரும்ஹ வித்யையின் பயன். உயிரினமனைத்தும் பக்தியால் பகவானை உணரலாம். (1) நித்ய - அநித்யப் பொருளின் பகுத்தறிவு, (2) எந்தபலனையும் அனுபவத்தையும் எதிர்பார்க்காத வைராக்யம். (3) சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை ஸமாதானம் என்ற ஆறு குணங்களின் நிறைவு, (4) முக்தி பெறுகிற விருப்பம் என்ற நான்கு ஸாதனங்கள் நிறையப் பெற்றவன் மட்டுமே பிரும்மத்தை உணரமுடியும். ஸ்வரூபம் ஸாதனம் பயன் தகுதி என்ற வகையில் மார்க்கமும் லக்ஷ்யமும் தகுதியும் வேறுபடுவதால் பக்தியும் பிரும்மவித்யையும் வேறுபடுகின்றன.

எனினும் பக்தனிடம் மஹாயோகியின் நிலையும் மஹாஜ்ஞானியின் நிலையும் பொருந்திக்காணப்படுவதால் பாமரனுக்கும் எளிதான பக்தியோகம் சிறந்ததல்லவா ?.

**वासु देवे भगवति भक्तियोगः प्रयोजितः ।**

**जनयत्याशु वैराग्यं ज्ञानं च यदहैतुकम् ॥** *(பாகவதம் 1.2)*

''வாஸுதேவனிடம் பக்தியால் இணைவதால் வைராக்யமும் நிர்விகல்பகஜ்ஞானமும் ஏற்படும்.''

**या निर्वृतिस्तनुभृतां तव पादपद्म-**

**ध्यानाद् भवज्जनकथाश्रवणेन वा स्यात् ।**

**सा ब्रह्मणि स्वहिमन्यपि नाथ मा भूत्** (பாகவதம் 4-9-10)

''பகவானின் திருவடியைப் பக்தியுடன் தியானிக்கும் போதும் பகவானிடம் தொடர்பு கொண்டு இன்புற்றவரின் கதை கேட்டும் போதும் ஏற்படுகிற நிம்மதி தானேதானாக உள்ள பிரும்ஹத்தின் உணர்வால் ஏற்படுவதில்லை.'' துருவன் தன் தவப்பயனாக பகவானை நேரில் கண்டபோது அவர் பெற்ற இன்பம் அப்படி.

தேனீ ஒவ்வொரு பூவாகத் தேடி அலைந்து பூவின்

தேனீ ஒவ்வொரு பூவாகத் தேடி அலேந்து பூவின் ஆத்மாவாகிய மகரந்தத்தைப் பெற்று அதனைத் தன் உமிழ்நீருடன் கலந்து இனிய சுவையுள்ளதாக உணர்ந்து, அதனை உள்ளே கொண்டதிலும் வெளியே வைத்து அனுபவிப்பதிலும் வேற்றுமை உணராமல், நாக்கால் சுவைத்ததை கூட்டில் சேமிக்கிறது. அந்தத் தேனுக்கான கூடு மெழுகால் ஆனது. உள்ளே வைக்கின்ற பொருளுக்கேற்ப நெகிழ்ந்து இடைவெளியின்றி அணைக்கின்ற பாங்கு மெழுகுக்கே உண்டு. அந்த மெழுகுக் கூண்டில் தானே இனிது சுவைத்த தேனைச் சொட்டு சொட்டாகப் பதித்து வெளியிலும் கண்டானந்தித்து ரீங்காரமிட்டுச் சுற்றி மொய்த்தும் ஆடியும் பாடியும் களிக்கிறது. தேனீ தேன்குடித்துக்கிறக்கத்துடன் சுற்றும் (मत्तः). சிலசமயம் இறக்கைகள் அசையாது வானில் நிலேகுத்தி நிற்கும். (स्तब्धः) தான் இன்ப எல்லேயைக் கடந்துவிட்டு ஆடாது அசங்காது தேனைக்கண்டுகளித்து நிற்கும். (आत्मारामः) அந்தத் தேன் காரியகாரணரீதியில் பூவைச் சார்ந்தது. மகரந்தமாக வேறு பொருளாக நின்றது. தேனீ அதனை உறுஞ்சி வாய் நீரில் கலந்ததும் சுவை வெளிப்பட்டது. இனித்தது. இனிப்பாக, சுவையாக, ஆனந்தமாக தேனீ அதனை வரிசையாக உணர்ந்தது. தேனீ அதனை வெளியிலும் வைத்து அழகுபார்த்தது. முன் சுவைத்தது மகரந்தமாக, இப்போது தேனுகவே சுவைத்தது. வெளியில் தேனிருப்பதைக் கண்டு அதை உட்கொள்ளப் பேராசைப்பட்டு அலேயாமல் உள்ளும் புறமும் தேனுகக் கண்டது. அதனுல் ஏற்பட்ட கிறக்கமும் திகைப்பும் நிறைவும் தேனீயிடம் மட்டுமே காணப்படுகிறது. அதனைப்பறித்து உண்கிற குரங்குக்கும் மனிதருக்கும் தேனும் அதன் இனிப்பும் கிட்டினுலும் தேனீ பெற்ற இன்பம் கிட்டாது. மகரந்தம் என்ற வெளிப்பொருளேத் தேனுக்கி இனிக்க இனிக்கச் சுவைத்துக் கிறக்கம் பெறுவது தேனீக்கு மட்டுமே இயலும். பக்தனின் நிலேயும் அத்தகையதே.

பகவானின் லீலே பல நூல்களில் பரக்க காணப்படுகிறது. அதன் தத்துவத்தை உணர்பவன் பக்தியுள்ளம் படைத்தவன்

மட்டுமே. அவன் அதைச் சுவைத்து ஆனந்தமாக, பேரன்பாக, அமுதமாக ஆக்கிவிடுகிறான். தான் சுவைத்த இன்பத்தை மற்றவரும் பெறும்படி ஆடியும் பாடியும் களிப்புடன் வெளிப்படுத்துகிறான். மத்தனாக, ஸ்தப்த்தனாக ஆத்மாராமனாக அவன் விரும்பித் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளவில்லை. உள்ளத்தில் அடங்காத அந்த பேரன்பின் பேரின்பம் அவனை அவ்வாறு நிலை குலையச் செய்கிறது.

உபநிஷதங்கள் பிரும்மவித்யையை மது (தேன்) வித்யை என்றே கூறும். பிரும்ஹ ஜ்ஞானியின் நிலையை அது ஸாதகனுக்குப் புலப்படுத்தும். பக்தி மதுவால் கிறக்கம் பெற்றவன் தன் வசமிழக்கிறான. பகவானின் வசத்தில் ஆட்படுவதால் அவன் மீதிருந்த உலகின் பிடிப்பும் அகலுகிறது. அமானுஷமான சக்தி அவனிடம் விளையாடுகிறது. ஆட்டுவிப்பவன் ஆட்டுவித்தபடி ஆடுவதில் அவன் உள்ளம் நிறைகிறது. மற்றவருக்கு அது புதிது புதிதாகத் தோன்றினாலும் அவன் தொடர்ந்து பேரின்பத்தில் மூழ்கி நிற்கிறான். எந்நிலையிலும் அவன் பகவான் வகுத்த உலகநெறிவரம்பை மீறுவதில்லை. **नानवाप्तं अवाप्तव्यं वर्त एव च कर्मणि।**

பேரன்பு காட்டிப் பேரின்பம் பெறுவதால் இன்பநுகர்ச்சி மேன்மேலும் உலகத் தொடர்பை வலிவுபெறவைக்குமோ என்ற சிந்தனைக்கிடமில்லை என்கிறார்.

**7. सा न कामयमाना निरोधरूपत्वात्।**

**ஸா ந காமயமாநா நிரோதரூபத்வாத் ।**

**8. निरोधस्तु लोकवेदव्यापारन्यासः**

**நிரோதஸ் து லோக வேத வ்யாபாரந்யாஸ: ।**

**सा** அந்தப் பேரன்பான பக்தி **निरोधरूपत्वात्** சித்தப் போக்கைக்கட்டுப்படுத்துவதாகையால் **कामयमाना न** ஈர்க்கிற ஆசையல்ல. **निरोधस्तु** சித்தப்போக்கின் கட்டுப்பாடு என்பது

लोकवेदव्यापारन्यासः - உலகியலேயும் வேதவிதிப்படியும் அமைகிற அனைத்துச் செயல் முறைகளையும் துறப்பதேயாகும்.

பக்தி என்பது பேரன்பும் வைராக்கியமும் இணைந்த வடிவம். அன்பு சுயநலம் கலந்து வெளியே பாயும் போது விருப்பம் (காமம்) பற்று - (ராகம்) த்ருஷ்ணா (வேட்கை) என்று பலமாறுதல்களுக்கு உட்படுகிறது. தனக்கு இன்பம் தரும் என ஒன்றை விரும்புகிறோம். இன்பம் தருவதை மனம் பற்றிக் கொள்கிறது. அதைப்பெற்றால் மட்டுமே நிறைவு பெறுவதாக வேட்கையாகிறது. அன்பைக் காமமாக்காமல் அன்பாகவே வளர்க்கிறோம். அன்புக்குரியவர் அதில் முக்கிய இடம் பெறுகிறார். சுய நலம் மறைகிறது. அஹந்தா மமதா நீங்கிய நிலையில், சித்தத்தை விரும்பிய பொருள் பற்றுவதில்லை. இது விராக நிலை. (வைராக்யம்). சித்தம் நிரோதம் பெற்றது. கட்டுப்பட்டது. தன்வழியே ஜீவனை அழைத்துச் செல்ல முடியாதபடி தடுக்கப்பட்டுவிட்டது. சித்தமும் வழிமாற்றப்பெற்று அன்பைப் பகவானிடம் மட்டும் காட்டியது. விருப்பம் விரியாததால் இந்திரியங்களையும் மனத்தையும் திருப்திப்படுத்தச் செய்து வந்த பல உலகப் பணிகள் நின்றன. இம்மைக்கான பணிகள் நின்றதுபோல் மறுமைக்கான பணிகளும் ஈடுபாடின்மையால் நின்றன. தன் அழகு, பொருள், ஆண்பெண் உறவு, பதவி முதலானவை ஈர்ப்பை இழந்தன.

பக்தியின் வசப்பட்ட பக்தன் பகவானுடன் பல விதமாக உறவு கொள்வான். माता रामो मत्पिता रामचन्द्रः भ्राता रामो मत्सखा राघवेशः । सर्वस्वं मे रामचन्द्रो दयालुः என்றொரு பக்தன் கூறுவான். ராமனே என்தாய், ராமனே என் தந்தை, அவரே என் கூடப்பிறந்தவர், அவர் என் நண்பர். அவரே எனது அனைத்துச் செல்வமும். ராமனே என்னிடம் பரிவுமிக்கவன். தாஸபாவனையுடன் தன் உடையாராக, வாத்ஸல்ய பாவனையுடன் தாயாகத் தந்தையாக, நட்புடன் நண்பனாக, உரிமையுடன் உடமைப்பொருளாக, தன்னிடம் மிகப்பரிவு காட்டுபவராகப் பகவானிடம் பழகியவனே தனக்கு

இவ்வனைத்து பாவனைத் தளைகளிலிருந்தும் விடுவிப்பவராகவும் உணர்கிறான். இவ்வனைத்து பாவனைகளுக்கும் ஊற்றுக்கண்ணாக இருப்பது பக்தியெனும் அன்பே. பக்தன் தன்னை மனிதனாக் கொண்டு பகவானை அணுகும் போது அன்புருவங்களாகிய தாய் தந்தை உடன் பிறந்தவன் நண்பன் செல்வம் அனைத்தும் அவனே. தாயாகிய ராமன் தன்னிடம் காட்டுகிற அன்பு பெற்ற தாயன்பைக் காட்டிலும் பன்மடங்கு உயர்ந்ததும் இனியதும் தூயதும் கூட. அது மகன் ஆற்றவேண்டியதாக எந்த எதிர்பார்ப்பும் அற்றதல்லவா ? மற்றும் பகவான் ஒருவரே தாயுமானவரும் தந்தையுமான வருமாதலால் அந்த அன்பு வரையறைக்குட்பட்டதல்ல. நிலைத்ததும் கூட. உலகியலில் தாயன்பு வேறு, தந்தையின் அன்பு வேறு. சிசுவின் வளர்ச்சிக்கேற்ப அது வளர்வதும் குறைவதும் உண்டு.

ஜீவன் தன் உடல் வளர்ச்சிக்கும் உள்ளத்துவளர்ச்சிக்கும் பலபணிகளை இதுகாறும் தன்பொறுப்பில் செய்து வந்தான். ஈசனிடம் அந்தப்பொறுப்பை ஒப்படைத்ததும் அன்புக்குரியவனின் அன்பு மிக்க பொறுப்பில் தனது பணிகள் இனிது நிறைவுறுவதைக் காண்கிறான். தன் செயலைத் தன்நிலைக் கேற்பப் பாபமாகாதபடி புண்யமாகும்படி வேதம் வகுத்தபாதையில் தன்பொறுப்பில் செய்து வந்தான். படிப்பும் வினயமும் நேர்மையும் வேதம் வகுத்த அறநெறிப்பாதையில் தன் நடை முறைகளை அமைத்துக் கொள்வதும் இன்றியமையாதிருந்தன. அவற்றை எந்நிலையிலும் நிறுத்த முடியாது. ஆனால் தனக்கெனக் கொள்ளாமல் ஈசுவரன் பணித்தபடி செய்து அதனை ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்வது அவ்வழியின் பொறுப்பையும் பகவானிடம் ஒப்படைத்ததாகும். பொறுப்பை ஒப்படைப்பதே நியாஸம்.

यत्करोमि यदश्नामि यज्जुहोमि ददामि यत् ।
यत्तपस्यामि भगवन् तत्करोमि त्वदर्पणम् ॥

இதுவே லோகவேத வ்யாபார நியாஸம்.

वाणी गुणानुकथने श्रवणौ कथायां हस्तौ च कर्मसु मनस्तव पादयोर्नः।
स्मृत्यां शिरस्तव निवासजगत्प्रणामे दृष्टिः सतां दर्शनेऽस्तु भवत्तनूनाम्॥

(பாகவதம் 10.10.3)

''உன் குணங்களைப்பாட வாய், கதை கேட்கக் காதுகள், உனது திருப்பணியில் கைகள், உனது திருவடிகளில் மனம் உனது இருப்பிடம் நோக்கி வணங்கத் தலை, உன் பல்வேறு தோற்றங்களைக்காணக் கண்கள் என்றவாறு ஈடுபடட்டும்.'' என்று நள கூபரனும் மணிக்கிரீவனும் உரலில் கட்டுண்ட கண்ணனிடம் வேண்டுகின்றனர். உரலைக்கட்டி இழுப்பதிலும் மரத்தை வேரோடு சாய்ப்பதிலும் கூட அறுகாதபடி கண்ணனின் இடுப்பில் அன்புடன் யசோதை கட்டிய கட்டு மட்டும் கண்ணனின் இடுப்பை விட்டு அகலவில்லை. ஆனால் அந்த குபேரனின் புதல்வர்கள் மரமாகி நிற்க, சாபத்தால் அமைந்த வெகுநாட்பட்ட கட்டுகள் நீங்கின. தான் கட்டுப்பட்ட நிலையில் தன்கட்டை நீக்கக் கூட முனையாமல் பிறர்கட்டை நீக்குகிற பொறுப்பாளி பகவான்.

லோகவேத வ்யாபார ந்யாஸம் பகவானிடம் நம் ஜீவனத்தின் பொறுப்பை ஒப்படைத்ததாகிறது. இதன் பின்விளைவு என்ன ? ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் தேவீபுஜங்கத்தில் கூறுகிறார்.

शरेष्वेव नासा धनुष्येव जिह्वा
जपापाटले लोचने ते स्वरूपे।
त्वगेषा भवच्चन्द्रखण्डे श्रवो मे
गुणे ते मनोवृत्तिरंब त्वयि स्यात्॥

''மணமிக்க பூக்களாலான அம்புகளில் எனது மூக்கு, இனிக்கின்ற கரும்புவில்லில் என் நாக்கு, செம்பரத்தம் பூ போன்று சிவந்த உன் உருவில் என் கண்கள், தலையணியான சந்திரத்துண்டில் இந்த ஸ்பர்சேந்திரியமான தோல், உன் குணங்களில் என் எண்ணம் இவ்வாறு எல்லாம் உன்னிடம் பதியட்டும்.''

இந்த நியாஸத்தால் என்ன விளையும் ? எதற்காக இந்தநியாஸம் ?

**कदा वा हृषीकाणि साम्यं भजेयुः**
**कदा वा न शत्रुर्न मित्रं भवानि ।**
**कदा वा दुराशाविषूचीविलोपः**
**कदा वा मनो मे समूलं विनश्येत् ॥**

''எனது புலன்கள் விருப்பும் வெறுப்பும் மாறிமாறித் தோன்றுவதால் ஸம நிலையை உணர்த்துவதில்லை. அவை ஸமநிலை பெறுவது எப்போது ? ஸமநிலை கொள்ளாததால் நண்பன் எதிரி என்றதவருன பிடிப்புகள் முற்படுகின்றனவே. அது எப்போது மறையும்? ஆசைப்பேய் பிடித்தாட்டுவது என்று நிற்கும் ? அவித்யா ராகம் துவேஷம் அபிநிவேசம் முதலான வேர் பிடித்த மனம் என்று மறையும் ?''

இவற்றை ஏன் எதிர்பார்க்கிருய் ?

**कदा वा भवत्पादपोतेन तूर्णं**
**भवांभोधिमुत्तीर्य पूर्णान्तरङ्गः ।**
**निमज्जन्तमेनं दुराशाविषाब्धौ**
**समालोक्य लोकं कथं पर्युदास्से ॥**

''உன் திருவடிகளை ஓடமாகக்கொண்டு பிறப்பிறப்புத் தொடர் எனும் கடலைத் தாண்டி என்று மனநிறைவைப் பெறுவேன்?. கேடுதருகிற ஆசைகளாகிய விஷக்கடலில் மூழ்கித் திணறுகிற இவ்வுலகைக் கண்ட பின்னும் ஏன் பராமுகமாயிருக்கிருய் ?''

மனிதன் பிறக்கும் போது லோகவேதவியாபாரங்களின் பொறுப்பேற்கிருன். பணிகள் வளர்கின்றன. சிறிதும் குறையவில்லை. பணிகளின் பின்விளைவாகப் புண்யபாபங்கள் சுமையாகி விடுகின்றன. பிறவிக்கடலை இந்தச் சுமையுடன் தாண்டமுயன்று ஆழத்தில் மூழ்கிற நிலை வந்துவிட்டது. சுமையைக் குறைக்கவழி என்ன ? விருப்பு வெறுப்படங்கி

மனம் சமநிலை கொள்ளவேண்டும். இவன் எதிரி இவன் நண்பன் என்ற உள்ளப்பாதிப்பு நீங்கினால் ஸமநிலைவரும். ஆசை நின்றால் தான் உள்ளப்பாதிப்பு விடும். மனம் மறைந்தால் தான் ஆசை அகலும். மனம் போன வழியில் தான் புலன்கள் செல்லும். புலன்களும் தனக்கு இனியதென்ற சிலவற்றைக் கொள்ளும். அம்பாளிடம் புலன்களுக்கு விருந்தளிக்கின்றவை சில உண்டு. பூவின் மணம், கரும்பின் இனிப்பு, சிவந்த மேனி, சந்திரனின் சில்லிப்பு, அழகிய கதை என்ற ஐந்தும் ஐந்து புலன்களுக்கும் விருந்தளிப்பவை. அம்பாளின் கருணையும் மற்றகுணங்களும் மனத்திற்குப் பிடித்தவை. இவை அம்பாளிடம் பதிந்தன. உள்ளத்தின் ஸமநிலையும் உறுதியும் தேவியிடம் வாழ்க்கைப் பொறுப்பை ஒப்படைத்தன. அம்பாளின் கருணை ஓடமாகிப் பிறவிக் கடலைத் தாண்டச் செய்தது. என்று லோகவேத வியாபார நியாஸமாகிய நிரோதம் அமைந்ததைச் சங்கர பகவத் பாதரின் துதி விளக்குகிறது. **यद्यत्कर्म करोमि तत्तदखिलं शंभो तवाराधनम्** என்றாகிறது. அப்போது எல்லாம் அவன் செயல். நான் எனது என்ற அறியாமையால் சுமையான பொறுப்பு அகன்றது.

அந்த நியாஸ நிலை எவ்வாறு அமைகிறது ? நாரதர் விளக்குகிறார்.

**9. तस्मिन् अनन्यता, तद्विरोधिषु उदासीनता च ।**

**தஸ்மின் அநந்யதா, தத்விரோதிஷு உதாஸீநதா ச।**

**तस्मिन्** அந்த நியாஸ நிலையில் **अनन्यता** வேறுபாடின்றி இணைதலும் **तद्विरोधिषु** அதற்குத் தடையாயிருப்பவற்றில் **उदासीनता च** பொருட்படுத்திருத்தலும் காணப்படும்.

பகவானிடம் பொறுப்பை ஒப்படைத்தபின் அவர் எண்ணமே தன் எண்ணமாகி அவர் செயலே தன் செயலாகிவிட்டதாகத் தோன்றும். பின்னர் அவ்வெண்ண முதிர்ச்சியில் அவர் எண்ணமும் செயலும் மட்டுமே இயங்குவதை உணரலாம். இது தான் வேறு, பகவான் வேறு என்ற எண்ணாத நிலை— அநந்யதா. அன்பு பகவானின்

பணிவிடையிலும் வழிபாட்டிலும் இயங்கும். தனது துயரம், தனது இன்பம் என்ற எண்ணமே தோன்றுது. பிறரது துயரத்தில் உதவுவதும் பிறரது இன்பத்தில் மகிழ்வதும் இந்த அனன்யபாவத்தில் தடையாக இராது.

பிறர் பாராட்டிஞல் நம்மையறியாமல் ஓர் இன்பம் காணப்படும். பிறர்துன்புறுத்தும்போது, அவன் எதிரி என்ற எண்ணம் வெளிப்படாவிடினும் தன்னிச்சையில்லாதிருந்தும் தடுக்கவோ எதிர்க்கவோ தூண்டும். நியாஸத்தின் பிறகு அதனையும் பொருட்படுத்துகிற எதிர் உணர்வு மறைந்துவிடும்.

பகவானின் அன்பெனும் இனிப்பில் தடை என்ற கசப்பு மறைந்துவிடும். பகவான் துணை நிற்கிறதாக உணர்ந்ததும் புதுத்தெம்பு ஏற்படுகிறது.

10. अन्याश्रयाणां त्यागः, अनन्यता ।

**அந்யாச்ரயாணாம் த்யாக: அநந்யதா.**

**अनन्यता** - அநந்யபாவம் என்பது **अन्याश्रयाणां त्यागः** மற்றதைச் சார்தலை தவிர்ப்பதாகும்.

பகவானிடம் நம்பிக்கை, அவன் காப்பான் என்ற நம்பிக்கை, அவன் காப்பாக நிற்பதை உணர்வது, என்ற நிலையே அநந்யபாவம். அப்போது பகவான் துணை என்று உரக்கக் கூறிவிட்டு உதவிக்கு நீ வா என்று மற்றவரை அழைக்கிற நிலை நேராது.

பிறரது உதவியை நாடாதது நான் என்ற திமிரால் அல்ல. எல்லோருக்கும் எல்லாமாயிருந்து உதவுகிற பகவான் துணை நிற்பதை ஐயமற உணர்ந்திருப்பதால் தான்.

11. लोकवेदेषु तदनुकूलाचरणं तद्विरोधिषु उदासीनता च ।

**லோகவேதேஷு ததனுகூலாசரணம்**
**தத்விரோதிஷு உதாஸீநதா ச ।**

**लोकवेदेषु** உலகிடமும் வேதங்களிடமும் **तदनुकूलाचरणं** அவற்றிற்கு இணக்கமானதைச் செய்வதும், **तद्विरोधिषु**

அவற்றிற்கு எதிரானவற்றில் उदासीनता च பொருட்படுத்தாதிருப்பதும்.

பேரன்புமிக்க அன்பு பகவானிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு ஓய்வுடன் சோம்பலுடன் அமர்ந்திருத்தல் அல்ல. அக்கடா என எந்தப்பணியும் புரியாமல் மெத்தனத்துடன் இருப்பதும் அல்ல. பகவானிடம் வைத்த அன்பிற்கு உதவுகிற லோகவேதப்பணிகளில் முழு ஆர்வத்துடன் ஈடுபாடும் அந்த அன்பிற்கு எதிரானவற்றைப்புறக்கணிப்பதும் அவனது முக்கியப் பணி. உயிரினத்திடம் பரிவு, பிறர்துயர் துடைத்தல், நற்பணிகளில் ஈடுபாடு, இறைவனை வழிபடுபவருக்கு உதவுவது, என்று அப்பணிகள் தொடரும். இதற்கு எதிரானவற்றிலிருந்து ஒதுங்கி நிற்பதும் முக்கியத்துவம் பெறும்.

உலகிற்கு உதவுவதும் வேதம் விதித்த பணிகளைச் செய்வதும் அவற்றிற்கு உதவுவதும் பக்தி நிலைத்த பின்னரும் தொடரவேண்டும் என்கிறார்.

12. भवतु निश्चयदार्ढ्याद् ऊर्ध्वं शास्त्ररक्षणम् ।

**பவது நிச்சயதார்ட்ட்யாத் ஊர்த்தவம் சாஸ்த்ர ரக்ஷணம் ।**

निश्चयदार्ढ्यात् ऊर्ध्वं பகவானின் அன்புணர்வு நிலைத்துள்ளதை ஐயமின்றி உறுதிப்படுத்திக் கொண்ட பிறகும் शास्त्ररक्षणं भवतु சாஸ்திரவிதிகளைக் காப்பது தொடரட்டும்.

ருஷிகள் யோகிகள் ஜ்ஞானிகள் பக்தர்கள் எனப்பலர், பக்திவழியைப்பின்பற்ற வழிகாட்டுகிற நூல்களைப்போல், உலக நீதி, ஸமூகரக்ஷணம், குலப்பண்பு, பிறப்பிற்கேற்ற கடமைகள், அவற்றிற்கான நடைமுறைகள் முதலானவற்றைத் தாம் உணர்ந்து, பின்பற்றி, நடைமுறையின் நலம் கண்டு, தம்மைச்சார்ந்தவரை அவ்வழிப்படுத்தி நலம் கண்டபின் அதனை முறைப்படுத்தி அருளியவையே சாஸ்திரங்கள். அவற்றில் வேதங்களும் ஸ்ம்ருதிகளும் கடமை என உணர்த்தியவைகளையே அவர்கள் கூறியுள்ளனர்.

பிறந்ததும் பிறந்த நிலைக்கேற்றவாறு அக்கடமைகள் ஒட்டிக் கொள்கின்றன. அக்கடமைகளைத் துறப்பது ஈசனின் நியதியை மீறியதாகும். அக்கடமைகளை ஒழுங்காகச் செய்வதே ஈசனின் வழிபாடும் கூட. **वेदो नित्यमधीयतां, तदुदितं कर्म स्वनुष्ठीयतां, तेन ईशस्य विधीयतां अपचितिः** என்பது சங்கரபகவத்பாதரது உபதேசம். பாமரன் பொதுவாகவே பல விதிகளிலிருந்து விலக்கு பெறுகிறான். அறிவு வளர வளரக் கட்டுப்பாடுகள் அதிகம். சமூக நிலை உயர உயர மேலும் சில கட்டுப்பாடுகள் கூடும். பொறுப்புகளும் கூடும். இது மரணம் வரை தொடரும்.

பக்தி முதிர்ந்த நிலையில் தானும் தனதும் ஆணும் பெண்ணும் ஏற்றமும் தாழ்வும் உணராத நிலையில் கடமைகள் தாமே நழுவக்கூடும். பக்தன் தானே எக்கடமைகளையும் புறக்கணிக்கமாட்டான். பக்தி முதிர்ந்து தன் நிலையுணர்வற்ற நிலையிலும் வழக்கத்தால் கடமைகளைச் செய்து கொண்டே வருவான். கடமைகளாகப் புரிகிற பணிகள் இனித்தேவை இல்லை எனப் பக்தன் புறக்கணிப்பானேயாயின் அவனைப்பின்பற்றுபவர்கள் கடமைகளைப் புறக்கணிப்பர்.

**यद्यदाचरति श्रेष्ठः तत्तदेव इतरो जनः ।**
**स यत् प्रमाणं कुरुते लोकः तदनुवर्तते ।**
**न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन ।**
**नानवाप्तं अवाप्तव्यं वर्त एव च कर्मणि ।** *(கீதை 3.21.22)*

''சமுதாயத்தில் மேனிலையிலுள்ளவனது செயல் முறையை மற்றவர் பின்பற்றுவர். அவர் எதனை நம்பிச் செயல்படுகிறாரோ மற்றவரும் அதையே நம்புவர். எனக்குக் கடமைகள் என எதுவுமில்லை. கடமைகளையாற்றிப் பெறவேண்டியதெதுவும் இல்லை. எனினும் சாஸ்திரம் விதித்துள்ள கடமைகளைச் செய்து தான் வருகிறேன்'' என்கிறார் பகவான். பக்தியின் உயர்நிலையடைந்தவனும் சிஷ்டாசாரம் என ஏற்றவற்றைப்புறக்கணிக்க இயலாது. அவனுக்கு அந்த நிலையில் அவற்றால் பெறத்தக்கது எதுவுமில்லாவிடினும் மற்றவருக்கு முன்னுதாரணமாக நிற்பதால் அவன் அவற்றை

ஒழுங்காக ஆர்வத்துடன் செய்யவேண்டும். ஏன் இந்த இக்கட்டு ? நாரதர் விடைதருகிறார்.

13. अन्यथा पातित्य शङ्कया।

**அந்யதா பாதித்ய சங்கயா ।**

**अन्यथा** அப்படி நடக்காவிடில் **पातित्य शङ्कया** (மற்றவர்) கடமைகளிலிருந்து நழுவி விழுகிற நிலைவரும் என்ற ஐயத்தால்.

பக்தனுக்கு கடமைகளைப்புரியாவிடில் வீழ்ச்சி நேராது. அவன் பகவானின் நிலையிலிருக்கிறான். ஆனால் தர்மஆசரணத்தில் அவன் முன் உதாரணமாக நிற்கிறான். அவனைப்பின் பற்றிப் பக்திப்பாதையில் அவருடன் இணையத் தாமதமாகலாம். அதுவரை அவர் தன் தர்மமான கடமைகளைச் செய்யாவிடில் வீழ்ச்சி நேரும். அதற்குப் பக்தரின் நடைமுறையைப் பின்பற்றியது காரணமாகலாம். அதனால் பக்தன் தன் நிலையுணர்வு இருக்கும் வரை கடமைகளைச் செய்து வரவேண்டும். அவரது பொறுப்பில் அவரைப் பின்பற்றுபவர்கள் உள்ளனர். அவர்களது வீழ்ச்சிக்கு இவர் காரணமாகக் கூடாது.

14. लोकोऽपि तावदेव। भोजनादिव्यापारस्तु
आशरीररधारणावधि।

**லோக: அபி தாவத் ஏவ ।**
**போஜநாதிவ்யாபாரஸ்து ஆசரீர தாரணாவதி ।**

**लोकः अपि** உலகையொட்டிய பழக்கவழக்கங்களும் **तावत् एव** அதே அளவில் தான். **भोजनादिव्यापारः तु** உணவு முதலியதன் நடைமுறையோ **आशरीरधारणावधि** உடல் தரித்துள்ளவரை.

பிறர் தன்னைப் பின்பற்றக் கூடும் என்று எதிர்பார்த்து உலகியலின்படி நன்னடத்தைகளைப் பின்பற்றுதல் அவசியம். **क्षुद्व्याधिश्च चिकित्स्यतां - स्वाद्वन्नं न तु याच्यताम्** என்ற சங்கர பகவத்பாதர்களின் குறிப்பு நினைவிற்குகந்தது. பசி என்பது

நோய். அதற்கு அளவோடு உணவு மருந்து. நாக்கிற்கு அடிமையாகி அதுவிரும்புகிற உணவை எதிர்பார்க்கக் கூடாது.

உலகம் மதிக்கும்படி வாழ்வதற்காக உணவு உடை அணி இடம் எனப்பல விரும்பப்படுகின்றன. உடையும் அணியும் வேஷம் போடுவதற்காகவே. ஆடையின்றி உலாவுவதால் பக்தனுக்குக் குறை ஏதும் இல்லை. ஆனால் அவனைப்பின்பற்றி ஆடையற்றிருப்பதே பக்திக்கு வழி எனக் கொண்டால் சமூகக்கேடு நேரும். வாழும் வரை உடலைப்பேணுவதும் சமுதாயம் கெடாதபடி ஆடை அணிவதும் மற்றதும் தன்னைப் பின்பற்றுபவரும் மேனிலை அடையும் வரை தேவையே. உடலையும் உள்ளத்தையும் பகவானிடம் ஒப்படைத்த பின்னரும் தனது இந்நிலைக்கு ஸமுதாயமும் உதவியிருக்குமாதலால் ஸமுதாயப்பாதுகாப்பிற்கேற்பத் தன் நடைமுறையை அமைத்துக் கொள்ளுதல் அவசியம். நல்ல ஆரோக்யமுள்ள உடலும் உள்ளமுமின்றி நன்கு பகவானை வழிபடவும் முடியாது. தனக்காக இவற்றில் கவனம் செலுத்துகிற முனைவு தானே நேராவிடிலும் சமுதாய நலனை முன்னிட்டு இவற்றில் தேவைக்கு அதிக மாயிராத கவனம் செலுத்த வேண்டும்.

பக்தியானது இவ்வாறு இத்தகையது என விளக்க முடியாத அற்புத அன்புணர்வு. உணர்பவரையும் உணர்கிற பொருளையும் அதற்கான சூழ்நிலையையும் ஒட்டி அந்த உணர்வு மாறுபடலாம். அதனால் பக்தி எனும் பகவானிடம் வைத்த பேரன்பைப்பலர் பலவாறாக விளக்குவதைக் காணலாம். இவற்றில் எது பொருத்தமானது ? சிந்திக்கத்தக்கதானதால் அவரவர் பெற்ற அனுபவத்தை இங்கு பின் வருகிறஸூத்திரங்களால் விளக்குகிறார்

15. तल्लक्षणानि वाच्यन्ते नाना मतभेदात्।

**தல்லக்ஷணானி வாச்யந்தே நாநா மதபேதாத்**

तत्लक्षणानि அதன் அடையாளங்கள் मतभेदात् கருத்துவேற்றுமைகாரணமாக नाना பலவாறாக वाच्यन्ते சொல்லப்படுகின்றன.

16. पूजादिष्वनुरागः इति पाराशर्यः ।

பூஜாதிஷு அநுராக: இதி பாராசர்ய: ।

पूजादिषु பூஜை முதலானவற்றில் अनुरागः தொடர்ந்த ஈடுபாடு इति पाराशर्यः என்கிறார் பராசரரின் குமாரரான வியாஸர்.

17. कथादिषु इति गर्गः ।

கதாதிஷு இதி சர்க: ।

कथादिषु கதை முதலானவற்றில் इति गर्गः என்று கர்க்கர்.

18. आत्मरत्यविरोधेनेति शाण्डिल्यः

ஆத்மரதி - அவிரோதேந இதி சாண்டில்ய:

आत्मरति-अविरोधेन ஆத்மாவிடத்தில் ஈர்ப்பிற்கு விரோதமின்றி வருகிற அன்பு. इति शाण्डिल्यः என்கிறார் சாண்டில்யர்.

19. नारदस्तु तदर्पिताखिलाचारता तद्विस्मरणे परमव्याकुलताच ।

நாரதஸ்து ததர்பித அகில ஆசாரதா,
தத்விஸ்மரணே பரமவ்யாகுலதா ச ।

नारदस्तु நாரதரோ तत् अर्पित अखिल आचारता அவரிடம் சரண்புகுந்து தன் நடவடிக்கைகளனைத்தையும் அவரிடம் ஒப்படைப்பதும். तद् विस्मरणे அவரை மறப்பதில் परमव्याकुलता च மிகவும் கலங்குவதும் அடையாளம் என்கிறார்.

பக்திக்குப் பல லக்ஷணங்கள் உண்டு அவற்றில் முக்கியமானவை வியாஸர், கர்கர், சாண்டில்யர் என்ற மூவருடையது. உள்ளத்தாலும் உடலாலும் வெளிப்படையாகவும் மானஸிகமாகவும் பக்தியும் சிரத்தையும் கொண்டு வழிபடுவது பூஜை. இதனைப்போல் உற்சவங்கள் கொண்டாடுவது, நாமபஜனம், ஆலயவழிபாடு,

அதில் ஸங்கீதம் நாட்யம் வாஹனஸேவை அலங்காரம் ஆலயங்களையும் உற்சவங்களையும் ஒட்டி அன்னதானம் முதலியவை, விக்ரகம் வார்த்தல் ஆலயம் கட்டுதல் இவற்றிலும் உள்ளத்தாலும் உடலாலும் பணிவிடை செய்வதும் பக்தி என்பார் வியாஸர்.

இறைவனின் நாமபஜனம் கதை சொல்லுதல் கதை கேட்டல், இறைவனைப் பற்றிப் பாடுதல், மந்திரஜபம் நாமஜபம், வேதமோதுதல் முதலியவை பக்தி எனப்படும் என்பார் கர்கர். ஆழ்வார்கள் நாயன்மார்கள், மீரா, துகாராம் போதேந்திரர் ஸத்குருஸ்வாமிகள் தியாகய்யர் ஜயதேவர் ஸூரதாஸர் முதலானோர் இத்தகைய பக்தர்கள். நாரதரும் வால்மீகியும் சுகாசாரியரும் வியாஸரும் வேதமந்திரங்கள் கண்டருஷிகள் முதலானோரும் இவர்களுக்கு வழிகாட்டியவர்.

சாண்டில்யரோ सा परानुरक्तिः ईश्वरे என்ற இலக்கணம் வகுத்தவர். பகவானை ஆத்மாவாகக் காண்கிற பேரீர்ப்பே பக்தி என்பார். சொல்லாலோ செயலாலோ வெளிப்படையாகக் காட்டுகிற அன்புமட்டும் பக்தியல்ல. அவை உள்ளத்திலுள்ள பேரன்பின் வெளியீடாக இருத்தல் அவசியம். ஆத்மாவிடம் வைத்த தொடர்ந்த அன்பே பக்தி.

நாரதரோ இந்த நிலையில் கூட நிறைவு காணாதவராக, ஈசனிடம் தனது உடல் ரீதியாகவும் உள்ளத்து ரீதியாகவும் உள்ள எல்லா நற்செயல்களையும் அர்ப்பணம் செய்து, சரணடைந்து, அவரிட்ட பணியாக, அவர் எண்ணத்திற்கு உவந்ததாக உள்ள செயலை மட்டும் செய்வது, அவரை எப்போதும் ஆழ்ந்து நினைப்பது, சிறிது நேரம் அவரை மறந்தாலும் பெரிதும் பரபரப்பும் கலக்கமும் அடைவது, இவையும் பக்தியின் லக்ஷணம். கணநேரம் கூட விட்டுப்பிரிய விரும்பாத பேரன்பு அவரை மறக்கச் செய்யாது. மறந்தால் அன்பு தளர்ந்துவிட்டதென்ற பரபரப்பு விளைகிறது.

20. अस्त्येवमेवम्

**அஸ்தி ஏவம் ஏவம்.**

**एवं एवं अस्ति** *இவ்வாறிவ்வாறு உதாரணங்கள் உள்ளன. அத்தகைய பக்திமான்கள் எவர் எவர்? நாரதர் விடை தருகிறார்.*

21. **यथा व्रजगोपिकानाम्**
**யதா வ்ரஜ கோபிகாநாம்.**

**यथा व्रजगोपिकानाम्** *ஆயர்பாடியிலுள்ள கோபிகைகளின் பக்திபோல்.*

*அவர்களது பக்தி பாமரனின் பக்திபோன்றது. பகவானின் பெருமையை உணராமல் அன்பு செலுத்துபவராயிற்றே எனில் அது தவறான எண்ணம் என்கிறார் நாரதர்.*

22. **तत्रापि न माहात्म्यज्ञानविस्मृत्यपवादः ।**
**தத்ராபி ந மாஹாத்ம்ய ஜ்ஞான விஸ்ம்ருதி அபவாத: ।**

**तत्रापि** *அங்கும்* **माहात्म्यज्ञानविस्मृत्यपवादः न** *பெருமை உணர்வற்றவர் என்ற அவதூறுக்கு இடமில்லை.*

*ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் நன்கறியாமலே இணைந்து வாழக்கூடும். கோபியர் கண்ணனிடம் கொண்ட அன்பு பாமரத்தனமானதல்ல. கோபியர் கண்ணனை காதலனாக மட்டும் கொள்ளவில்லை.* **अखिलदेहिनां अन्तरात्मदृक्** *தனக்கு மட்டும் ஆத்மா என்று மட்டுமல்ல. அனைத்து உயிரினத்திற்கும் அந்தராத்மாவான ஸாக்ஷி அவர்.* **प्रेष्ठो भवान् तनुभृतां किल बन्धुः आत्मा** *ஆத்மாவிற்கு எதுபிரியமானதோ அதனிடம் தான் மாந்தர் பிரியம் காட்டுவர். ஏனெனில் ஆத்மாதான் மிகமிகப்பிரியமானவற்றுள் பிரியமானது. உடலில் வாழ்பவனுக்கு உற்ற உறவினர் அவர். மிகமிகப்பிரியமான ஆத்மா அவர் என்று ஒவ்வொரு கோபியரும் புரிந்து கொண்டுள்ளனர். அதனால்தான் கணவர், மக்கள், நண்பர்கள் என்ற அனைத்துப் பிரியமானவரையும் எல்லோரையும் விட்டு எட்டிப்பிடிக்கமுடியாத பகவானின்*

திருவடிகளைப்பற்றிச் சரணமடைந்தனர். முக்திக்கு ஏற்றவர்கள் என்று தங்களைப் பகவானிடம் அறிமுகம் செய்து கொள்கின்றனர்.

मैवं विभोऽर्हति भवान् गदितुं नृशंसं
सन्त्यज्य सर्वविषयान् तव पादमूलम्।
भक्ता भजस्व दुरवग्रह मा त्यजास्मान्
देवो यथाऽऽदिपुरुषो भजते मुमुक्षून्॥

''பற்று கொண்டிருந்ததனைத்திலும் வைத்த பற்றைக் கழற்றிவிட்டு, நீயே சரணம் என்று வந்த பக்தர்களான எங்களை ஏற்கமாட்டேன் என்பது கொடூரமான சொல். அவ்வாறு சொல்வது உமக்கு ஏற்புடையதல்ல.'' பாமர பக்தியின் வெளிப்பாடல்ல இது. विखनसाऽर्थितो विश्वगुप्तये सखे उदेयिवान् सात्वतां कुले । ''உலகைக் காக்கும்படி பிரும்மாவின் வேண்டுதலை ஏற்று ஸாத்வதர்களின் வம்சத்தில் பிறந்த பரமபுருஷன் நீர்'' என்று புலம்புகின்றனர். प्रणतकामदं पद्मजार्चितं धरणिमण्डनं ध्येयमापदि । चरणपङ्कजं शन्तमं च ते வணங்கியவர் விரும்பியதைத் தருவதும் பிரும்மாவால் பூஜிக்கப்பெற்றதும் பூமிக்கு அழகுதருவதும் ஆபத்து நீங்க நினைக்கத்தக்கதும் மங்களத்திற்கும் மங்களமான உன் திருவடிகள்'' என்ற உண்மையை உணர்ந்தவர்கள். காமுகனுடன் பழகுகிற வேசி போன்று கண்ணனிடம் பழகியவர்கள் அல்ல.

பகவானும் அவர்களது பக்தியை உணர்ந்து தன்னுல் கூட அந்தபக்திக்கு ஈடுசெய்ய இயலாது என்கிருர். ''பரஸ்பரம் அன்பு வைப்பது தன்னலம் மிக்கது. அது நட்போ அன்போ அல்ல. தன்னிடம் அன்புகாட்டாதவனிடமும் வைக்கின்ற அன்பு தாய்தந்தையரிடம் காணக்கூடியது. அதில் கடமையும் நட்பும் சேரும். தன்னிடம் அன்பு காட்டுபவனிடமும் சிலரால் அன்புகாட்ட முடியாது. அவர் ஆத்மாராமர் அல்லது நன்றியற்ற குருதுரோகி. கண்ணன் கோபிகளிடம் தன் நிலை விளக்கம் தருகிருர். தோழிகளே! நானே என்னைப்பக்தியால்

அடைந்தவரிடம் சில சமயம் அன்புடன் பழகிவிட்டு உடன் விலகிவிடுவேன். அப்போது தான் பிரிவிலும் என்னை நினைத்து உருகுவார்கள். பெற்ற செல்வம் மறைந்துவிட்டால் அந்த செல்வத்தையே நினைத்து உருகி மற்றொன்றிருப்பதையே உணரமாட்டான். எனக்காக எல்லாவற்றையும் லோகவேதக் கடமைகளையும் துறந்து என்னை அடைந்த உங்கள் கண்களில் படாமல் மறைந்தது, என் நினைவு உங்கள் உள்ளத்திலிருந்து அகலாமலிருக்கவே. என்னிடம் கோபப்படாதீர். ஒரு குறையுமின்றி என்னோடு இணைந்த உங்கள் அன்புப்பணிகளுக்கு ஈடாக தேவ ஆயுளால் கூட (மனிதனின் ஒரு ஆண்டு தேவருக்கு ஒரு நாள். அப்படி நூறாண்டுகள்) நான் ஈடுசெய்ய முடியாது இந்தக்கடன் திருப்பிக் கொடுக்கப் படாமலேயே இருக்கட்டும். தங்களது நேர்மையே அதற்கு முழுஈடாகட்டும்''.

न पारयेऽहं निरवद्यसंयुजां
स्वसाधुकृत्यं विबुधायुषाऽपि वः ।
या माऽभजन् दुर्जर गेहशृङ्खलाः
संवृश्च्य तद् वः प्रतियातु साधुना ॥

(பாகவதம்10-32-22)

தனது அன்புக்குரியவனிடம் மற்றொருபெண் நாட்டம் கொள்வதை எந்தப் பெண்ணும் ஏற்கமாட்டாள். மற்றொரு பெண்ணிடம அதே அன்புடன் பழகுபவனையும் ஏற்கமாட்டாள். இங்கு எல்லோரும் ஏகோபித்து எல்லோரும் ஒருவரையே நாடுகிறோம் என்று உணர்ந்து கூட்டமாகத் தேடி வந்து கூடி விளையாடுகின்றனர். கிருஷ்ணன் மறைந்ததும் கூடியே தேடுகின்றனர். பிரிவிலும் ஏதோ ஒரு அன்பின் ஈர்ப்பில் கூடிக் கோபிகா கீதம் பாடுகின்றனர். त्वयि धृतासवस्त्वां विचिन्वते நாங்கள் அனைவருமே உன்னிடம் உயிரையே வைத்திருக்கிறோம் என்ற அன்பு எதிர்பார்ப்பில்லாத அன்பு.

23. तद्विहीनं जाराणामिव ।

தத்விஹீனம் ஜாராணாமிவ.

**तद्विहीनं** பகவானின் பெருமை உணர்வற்ற அன்பு **जाराणामिव** முறையற்ற காதலில் ஈடுபட்ட ஜாரர்களுடையது போல்.

கிருஷ்ணனின் தெய்வநிலையையும் எல்லோரின் அந்தராத்மா என்ற பெருமையையும் தனது காமம் அவரிடம் எந்த மாறுபாட்டையும் விளைவிக்காது, எதிர்பார்த்தலில்லாத அன்புடன் சரணாகதி ஒன்றே அவரை அடையவழி என்பதையும் உணராமல், காமவேட்கையால் பரபுருஷனை அடைவதைப் போல் கிருஷ்ணனைச் சென்றடைந்தவர்களல்ல. கிருஷ்ணனது சுகமே தன் சுகம். அவனுக்குத் துன்பமளிப்பதே தமக்கும் துன்பமளிப்பதை உணர்ந்தவர்கள்.

**यत्ते सुजात चरणांबुरुहं स्तनेषु**
**भीताः शनैः प्रिय दधीमहि कर्कशेषु।**
**तेनाटवी मटसि, तद्व्यथते न किंस्वित्**
**कूर्पादिभिः भ्रमति धीर्भवदायुषां नः ॥**

பாகவதம் 10.31.19

''நல்ல பிள்ளையே ! எங்கள் மார்பகம் கரடுமுரடானது. அதில் உன் தாமரை போன்று மென்மை மிக்க திருவடிகளை வைத்துக் கொண்டால் வலிக்குமே என்று பயந்து பயந்து மெள்ளமெள்ள வைத்துக் கொள்வோம். அந்தத் திருவடியால் காட்டில் சுற்றுகிறாயே ! அங்குள்ள சரளைக்கற்களில் அழுந்தி வலிக்குமே ! உன்னிடமே உயிர் வைத்துள்ள எமக்கு அறிவு குழம்புகிறதே ! (தலை சுற்றுகிறதே !).'' இந்த அன்பு ஒருவனை மணந்தவள் பரபுருஷனிடம் வைக்கிற காமம் அல்ல.

### 24. नास्त्येव तस्मिन् तत्सुखसुखित्वम्
### நாஸ்த்யேவ தஸ்மின் தத்ஸுகஸுகித்வம்

**तस्मिन्** அந்த ஜாரர்களின் அன்பில் **तत्सुखसुखित्वं नास्त्येव** அவரது சுகத்தில் தானும் சுகம் காண்பது என்பது இல்லையே !

பரபுருஷனிடம் அவள் செல்வது தன்புருஷனிடம் பெறுத இன்பத்தை அவனிடம் பெறலாம் என்ற சுய நலத்தால் தான். தன்னை அனுபவிப்பதால் அவன் சுகம் பெறுவான் என்ற நோக்கத்தால் அல்ல. கோபிகள் கிருஷ்ணனுடையவர்களாகி அவனது இன்பத்திற்காகவே தன்னை அவரிடம் ஒப்படைத்தவர்களாவர்.

இத்துடன் பரபக்திநிலை விளக்கிய முதல் அத்தியாயம் முற்றிற்று.

---

## द्वितीयोऽध्यायः - இரண்டாம் அத்தியாயம்

## परभक्तिमहत्त्वम् - பரபக்தியின் பெருமை

25. सा तु कर्मज्ञानयोगेभ्योऽपि अधिकतरा ।

**ஸா து கர்ம - ஜ்ஞான - யோகேப்ய: அபி அதிகதரா ।**

**सा तु** அதுவோ **कर्मज्ञानयोगेभ्योऽपि** கர்மயோகத்தையும் ஜ்ஞான யோகத்தையும்விட **अधिकतरा** அதிகச் சிறப்புள்ளது.

26. फलस्वरूपत्वात् ।

**பலஸ்வரூபத்வாத் ।**

**फलस्वरूपत्वात्** பயனாக இருப்பதால்.

27. ईश्वरस्यापि अभिमान(नि)द्वेषित्वात् दैन्यप्रिय त्वात् च ।

27. ஈச்வரஸ்ய அபி அபிமாந(நி)த்வேஷித்வாத் தைந்யப்ரியத்வாத் ச

**ईश्वरस्यापि** பகவானுக்கும் **अभिमान(नि) द्वेषित्वात्** சுய நலனையே பெரிதும் விரும்புவதில்(விரும்புபவரிடத்தில்) வெறுப்புள்ளமையாலும் **दैन्यप्रियत्वात् च** பக்தனது ஏக்கத்தைப் பெரிதும் விரும்புபவராயிருப்பதாலும் (கர்மஜ்ஞான யோகங்களை விட பக்தியோகம் சிறந்தது).

கர்மயோகம் ஜ்ஞானயோகம் பக்தியோகம் என்ற மூன்றில் பக்தி யோகமே சிறந்ததென இந்த மூன்று ஸூத்திரங்களும் விளக்குகின்றன.

கீதை முதலிய பகவானைச் சென்றடைவதற்கான வழி கூறவந்த நூல்கள் இந்த மூன்று வழிகளையும் ஒன்றன்பின் ஒன்றாக விளக்குகின்றன. தனித்து ஆராய்ந்தால் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனிநிலையில் உள்ளவர்க்கு ஏற்றது என்பது விளங்கும்.

மனிதன் பகவானைச் சென்றடைய வழிதேடிக் குருவை நாடுகிறான். அவனவனுக்கேற்ற வழியைச் சுட்டிக் காட்டித்துணை நின்று அவனது இலக்கில் கொண்டு சேர்ப்பதே குருவின் கடமை. யோகம் என்பது ஒன்றுடன் இணைவது. இணைவதற்கான ஒட்டுதலுக்கு ஒரு பிசின் (सन्धेयं) தேவை. வேதவிஹிதமான கர்மங்கள். பகவானின் பரதத்வ நிலையுணர்வு, அவரிடம் சுய நலமற்ற பேரன்பு என்ற மூன்றும் அந்த ஒட்டுதலைத் தரவல்ல முறைகள் இவை. சுய நலம், அதற்கான வெளிப்பொருளில் விருப்பு - வெறுப்பு. அபிநிவேசம் (பிடிவாதம்மிக்க ஈடுபாடு) என்ற பற்றின் பல நிலைகளிலிருந்து விடுபடவேண்டும். இது வியோகம். பகவானது பெருமை முதலியவற்றை உணரவும், உணர்ந்ததைத் தன் ஒரே உணர்வாக வெளிக்காட்டவும் மட்டும் பயன்படுகிற மனம்வாக்கு காயம் என்ற திரிகரணங்களின் ஆர்வமிக்க ஈடுபாடு கொள்ளவேண்டும். இது ஸம்யோகம். இந்த வியோக ஸம்யோகங்களின்றி யோகம் நேராது. இருகைகள் அஞ்ஜலியாவது யோகம். வேறு நிலைகளில் தனித்துச் செயல்படுகிற கைகளை அதிலிருந்து விலக்குவது வியோகம். இது ஒன்றையும் அது மற்றொன்றையும் செய்தால் இணைய முடியாது. ஒன்றுக்கு ஒன்றாக நேராக இணைய முற்பட்டுச் செயல் முடியும் வரை தொடர்ந்த ஈடுபாடு ஸம்யோகம். கைகள் இணைய அஞ்சலி என்று பகவானின் முன் எல்லாம் உன் செயல் ஒன்று ஒப்படைப்பு அஞ்சலியின் பயன்.

இந்த யோகம் கர்மத்தாலும் ஜ்ஞானத்தாலும் பக்தியாலும் பெறத் தக்கதே. இணைந்தும் தனித்தும்

செயல்படலாம். கர்மயோகம் பத்திஜ்ஞானங்களில் துணை கொண்டு பகவானின் இணைப்பிற்கு உதவலாம்.

ஈச்வரனிடம் அர்ப்பணம் செய்வதற்காகவே (சுய நலம் பெற அல்ல) கருமங்கள் செய்வது கர்மயோக வழியாகும். இந்த அர்ப்பணத்தைப் பெறவிருக்கிற பகவானது பெருமை உணர்ந்து செயல்படும்போது, பகவான் அன்புக்குரியவன். அந்த அன்பைச் செயலாக்கி அவனிடம் ஒப்படைக்கும் போது மனம் எல்லையற்ற இன்பம் பெறுகிறது.

பகவானின் உயர்நிலை உணர்வு ஜ்ஞானமாகும். தன்னிடமிருந்து உலகைப் படைத்துக் காத்து மாற்றி மறைத்து தன்னிடம் லயமடையச் செய்வதை லீலையாகப் புரிபவர் அவர். படைக்கப்பட்டவற்றின் உள்ளே தானே தன் சக்தியால் உட்புகுந்து இயக்கிவைப்பவரும் அவரே ! தன் ஒளி படைத்தவற்றின் மீது படர அவை அவை தாமாகவே இயங்குகின்றன. அவர் அதனை ஸாக்ஷி நிலையில் பாதிப்படையாமல் கண்காணிப்பவர். அவர் எல்லாவற்றின் உள்ளும் புறமும் மட்டுமின்றி அது அதுவாகவேயும் இருப்பதால் உலகமாக இயங்குவது அவரது பெருநிலையில் கால்பங்கே. மற்ற முக்கால் பங்கு அவர் அவராக இருக்கும் நிலை. அதுவே பரம்பொருள், பெரும் பொருள், பொருளாக நாடத்தக்க ஒரே பொருள், செயலற்று வெளிக்காட்சியின்றி இதயத்தில் ஒளிமயமாகக் கண்டு அதில் கரைந்து ஒன்றுவதே ஜ்ஞான வழியில் பெறுகிற அனுபவம். கர்மயோகத்தால் ஏற்பட்ட ஸர்வஸ்வ - அர்பணமும் ஜ்ஞானயோகத்தால் ஏற்பட்ட எங்கும் எல்லாமாய் எப்போதும் உள்ள பரமன் என்ற நிலையுணர்வும் பெறும்போது அதனைப்பேரன்பு என்ற பாவமாக உள்ளத்தை மாற்றி உள்ளேயும் வெளியேயும் ஒன்றாயும் பலவாயும் இனியதாயும் மற்றதாயும் இருப்பதொன்றில் அன்பால் லயமடைவதே பக்தியோகம். இனியது, பாமரனுக்கும் எளியது. அவர் எங்கே ! நாம் எங்கே ! எட்டாதவரும் அன்பில் ஏங்கி நிற்பவனைக் கண்டு ஆறுதல் கூறவருகிறாரே ! என்ற அன்பு தருகிற இணைப்பைப் பெற்றுத் திளைப்பதால் அந்த ஏக்கம் மறைந்து நிறைவு தருகிறது.

எல்லாம் என்னுல்முடியும். பகவானையும் ஆடிப்பாடி வசப்படுத்திவிடுவேன் என்று மார்பு தட்டிக்கொள்வது அவனுக்குப் பிடிக்காது.

கிருஷ்ணன் கோபிகளின் சரணாகதியை ஏற்கிருர். ஒவ்வொரு கோபிக்கும் அருகே அவளுக்காகவே வந்தவர் போல் தன் பூர்ண நிலையில் நிற்கிருர். ஒவ்வொரு கோபிக்கும் 'தன்னைப்போல் மற்ற கோபிகளும் ஒரு கிருஷ்ணனைப் பெற்றிருக்கிருர்கள். கோபிகள் அனைவரும் பாக்ய சாலிகள்' என்ற நினைப்பு வருகிறது. நான் மிக அழகானவள். அன்பால் உருகுபவள். என்னைவிட அன்பும் அழகும் கொண்டவள் யாரும் இல்லை. அதனுல் என்னிடம் தான் அவருக்கு ஈர்ப்பு அதிகம் என்று நினைவும் ஒட்டிக்கொள்கிறது. பகவானும் அவ்வாறு இறுமாப்படையச் செய்ய தன்ஹாவபாவங்களை அவளுக்கென்றே தனித்துக் காட்டுகிருர். செருக்கு வளர்கிற வாய்ப்பை அளித்து, செருக்கு தருகிற இடிப்பை உணர்வித்து, செருக்கின்றி அன்பைச் சொரிய சிக்ஷை தருகிருர். நொடியில் எங்கும் கண்ட கண்ணனைக்காணும்.

**एवं भगवतः कृष्णात् लब्धमाना महात्मनः ।**
**आत्मानं मेनिरे स्त्रीणां मानिन्योऽभ्यधिकं भुवि ॥**
**तासां तत्सौभगमदं वीक्ष्य मानं च केशवः ।**
**प्रशमाय प्रसादाय तत्रैवान्तरधीयत ॥**

(பாகவதம் 10.29.47.48)

அங்கேயே தான் உள்ளார். கோபிகள் கண்களில் படவில்லை. கண்ணன் நின்றஇடம் பரவெளியாகியது. நொடியில் தன் நிலையையும் பகவானின் நிலையையும் உணர்ந்த கோபிகள் தன் அருகில் இருப்பவனுக உணர்ந்து தம் ஏக்கத்தைக் கண்ணனிடம் தெரிவிக்கின்றனர். அந்த ஏங்கிநிற்கின்ற கோபிகளை அன்புடன் சிறிது நேரம் புலம்பவிட்டு, மறுபடி செருக்கு நீக்கி, பிரிவிலும் இனிதான அன்பு மேலிட்டதால், கசிந்து நீர்மல்கச் செய்கிருர்.

तन्मनस्काः तदालापाः तद्विचेष्टाः तदात्मिकाः ।
तद्गुणानेव गायन्त्यो नात्मागाराणि सस्मरुः ॥

பகவான் தம்மை விட்டு நீங்கினுல் இருள் சூழ்கிறது. அவனை அகலாதே என வேறெதனுலும் கட்டுப்படுத்த முடியாது. உள்ளத்தினுள் இனிய நினைவாக அவனைக் கொள்ளலாமே என்ருள் ஒருத்தி. அவனைப் பற்றியே பேசுவோமே. அப்போது நம்மை விட்டு அவன் அகலமாட்டான். உள்ளத்தில் அவன், பேச்சில் அவன் என்ருல் அவனைப் போன்று அவனுகவே இயங்குவோமே! அடி! நானே கண்ணன். என்னைப்பார் என ஒவ்வொரு கோபியரும் மனம் வாக்கு காயம் என்ற மூன்றையும் அவனிடம் அர்ப்பணம் செய்கின்றனர். அப்படி அர்ப்பணம் செய்பவரும் பெறுபவரும் ஒன்ருக இணைகின்ற அற்புத அனுபவத்தையும் பெறுகின்றனர். जयति तेऽधिकं என்று தொடங்குகிற கோபிகா கீதமாக அந்த அனுபவம் பேசவைக்கிறது.

பேரன்பால் பெற்றதும் அன்பே. ஜ்ஞானிக்கும் கர்மயோகிக்கும் தற்பெருமையுணர்வு நேரலாம். ஏக்கம் இடம் பெருது. அதுவே தடையாகி அந்த யோகம் முழுமை பெருது. பலன்தராது. பக்தியே அன்பால் பகவானையும் பிணைத்துவிடும். கணநேரத்தின் பிரிந்ததும் விக்கித்துத் தான் கதியற்றவன் என ஏங்கச் செய்யும். இது பகவானுக்கு மிகவும் பிரியமான நிலை. அதனுல் தன்னளவில் தன் வழியின் வந்த துருவன் பிரஹ்லாதன் முதலானேரின் அளவிலும் பக்தியோகம் சிறந்ததெனக்கருதுகிருர் நாரதர்.

अयंतु परमो धर्मो यद्योगेनात्मदर्शनम् என்று யாஜ்ஞவல்க்யர் தனது ஸ்ம்ருதியில் கூறுகிருர். எவ்வாறு இணைவதால் ஆத்ம அனுபவம் பெற இயலுகிறதோ, அந்த யோகமே மேலானது. பராபக்தி நிலையில் அது எளிதாகிறது. கடுமையான உடல் - உள்ளப்பயிற்சியை எதிர்பார்க்கவில்லை. ஸாதனமே ஸாத்தியமுமாவதால் எதனையும் தவிர்க்கவேண்டியதில்லை. वेदो नित्यमधी यतां, तदुदितं कर्म स्वनुष्ठीयतां, तेनेशस्य विधीयतामपचितिः

என வேதமோதுவது அதிலுள்ள கருமாக்களைச் செய்யவே. கருமாவைச் செய்வது அது ஈசனின் வழியாவதற்கே என ஸாதனம் ஸாத்தியத்தைக் காட்டிலும் வேறுபடுகிறது. பக்தியோகத்தில் அன்பே ஸாதனமும் ஸாத்தியமுமாகிறது. பாமரனும் பரநிலையை அடையமுடிகிறது. பாமரனுக்கு எளிதாவதற்கு அவனது முன் செய்த புண்ய வினைகளே காரணம் எனக் கூறலாம். கர்மயோகமும் ஜ்ஞானயோகமும் முன்பிறவியில் ஸித்தி நிலைக்குக் கொணர்ந்திருக்கலாம். அதனால் இப்பிறவியில் அவனது பகவத் பக்தி சிறந்த நிலைபெறுகிறதெனவும் கூறலாம். ஆனால் அந்நிலையைத் தொட இங்கு பக்தியே உதவுகிறது. கர்மயோகத்திற்கும் ஜ்ஞானயோகத்திற்குமான தகுதியும் வாய்ப்பும் அவர்களிடமில்லை.

ராஜயோகம் லயயோகம் மந்திரயோகம் போன்ற மாற்றுவழிகளும் ஜ்ஞானயோகத்தின் வழியே தான் எல்லையை எட்டுகின்றன. அதனால் அவை ஜ்ஞானயோகத்தின் அங்கமே. உள்ளத்தைப் பகவானிடம் பதித்து சிரத்தையுடன் பகவானைத்தன்னவனாக்கிக் கொள்பவனே யோகிகளுள் சிறந்தவன் என்கிறார் கண்ணன் கீதையில் (6.47)

**योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना।**
**श्रद्धावान् भजते यो मां स मे युक्ततमो मतः ॥**

அது பக்தியோகத்தில் எளிதில் அமைகிறது.

யோகம் என்பது வழியே. உபாயமே. அதனைக் கொண்டு ஈசனுடன் இணைய வேண்டும். பக்தி என்பது அவனது பங்காக மாறுவது. அதுவே எல்லா யோகங்களின் பலனாகும். மாறுமிடம் நிலைத்ததானதால் மாற்றம் என்பது நிலைத்ததாகும். மாறுதலால் தனித்துப்பலன் என்று ஒன்றில்லை. மாறுதல் என்ற ஸாதனமே பலனுமாகிறது. ஜ்ஞானயோகத்தால் பெறுகிற ஜ்ஞானமும் அத்தகையதே. எனினும் அது எளிய மார்க்கமல்ல. ஜ்ஞானயோகத்தால் உள்ளம் படிப்படியாகப்பக்குவப்பட்டு ''நான்'' ''எனது'' என்ற நிலையை இழக்கிறது. அந்த தன்மானம் மறைவதற்கு அன்பு

எளிதில் உதவுகிறது. அன்புக்குரிய பொருள்பெரிது, இனியது என்ற எண்ணம் அன்புப் பயிற்சியின் தொடக்கத்திலேயே ஏற்பட்டுவிடுகிறது. இறைவன் செருக்கை அடக்கிவிடுவான் என்ற பயமும் அதற்கு உதவுகிறது. அன்பிற்கேங்கி நிற்பதிலும் சுகம் உள்ளது. பகவான் அஹந்தையும் மமதையுமற்றவன். வேண்டியது, வேண்டாததில்லாதவன். எல்லாம் அவனுக்கு ஸமமே. ஏற்றத்தாழ்வு (வைஷம்யம்) உணராதவன். சலுகை காட்டாதவன் (निर्घृणः). அவனிடம் அன்புணர்வு அன்பு என்ற பண்பின் முழுமை உணரவே. அதனுல் தனது குறுகிய அஹந்தையும் மமதையும் மறையவே. அவன் பகவானது அஹந்தையிலும் மமதையிலும் ஆட்பட்டுப் பக்தன் என பாகவதன் என உரிமை கொண்டாடுகிருள்.

கிருஷ்ணன் தன் பௌத்திரனுன அநிருத்தனின் விவாஹத்திற்குப் பிறகு தன் முதுமையில் ஸூரியக்கிரஹணத்தை முன்னிட்டு ஸ்யமந்த பஞ்சகத்தில் நீராடத் தன்னவர் அனைவருடன் செல்கிருர். நந்தரும் யசோதையும் கோபிகளும் பல்லாண்டுகளுக்குப் பிறகு - கண்ணனைச் சந்திக்கின்றனர். அன்று அக்ரூரருடன் மதுரைக்கு அனுப்பிய கோகுலத்தில் தன் மகனுக வாழ்ந்த பால கோபாலனுகத் தான் கிருஷ்ணனை இன்றும் யசோதா காண்கிருள். கிருஷ்ணனைக் கண்டதும் மனத்தால் மடியில் அமர்த்திப்பாலூட்டத் தொடங்குவது அவளது அன்பின் வெளிப்பாடு. உத்தவர் கம்ஸவதம் ஆனதும் கோபிகளுக்கு நல்வாழ்த்து தெரிவிக்க கிருஷ்ணனுல் அனுப்பப்பெறுகிருர். கிருஷ்ணனிடமிருந்து செய்தி என்றதும் நந்தருக்கு மனம் கொள்ளாத பரவசம். யசோதை நந்தரின் அருகில் அமர்ந்து அதனைக் கேட்கிருள். அவளது பரவசம் மார்பில் பால் ஊறிப்பெருகுகிறது.

यशोदा वर्ण्यमानानि पुत्रस्य चरितानि च।
शृण्वन्त्यश्रूण्यवास्राक्षीत् स्नेह स्नुतपयोधरा ॥ (10.16.28)

காதுவழிச் செய்திக்கு அந்தப் பரவசமடைந்தவள் இன்று முதிர்ந்த கிருஷ்ணரையும் பலராமரையும் கண்டதும். மடியிலமர்த்திக்கட்டி அணைத்து கொஞ்சுகிருள்.

तावात्मासनमारोप्य बाहुभ्यां परिरभ्य च।
यशोदा च महाभागा सुतौ विजहतुः शुचः। (10.82.36)

அந்த அளவில் நெருக்கமும் நிலேப்பும் கொண்ட அன்பு அது. பயிற்சியால் வந்ததல்ல. அனுபவத்தால் முதிர்ந்து அருகாமையிலும் பிரிவிலும் ஆத்மாவுடன் இணைந்ததால் ஒரேநிலேயில் உணரப்பெறுகிறது.

கோபிகளும் கண்ணனேக் காண்கிறார்கள்.

गोप्यश्च कृष्णं उपलभ्य चिराद् अभीष्टं
यत्प्रेक्षणे दृशिषु पक्ष्मकृतं शपन्ति।
दृग्भिः हृदीकृतं अलं परिरभ्य सर्वाः
तद्भावं आपुरपि नित्ययुजां दुरापम्॥ (10.82.40)

கோபிகளும் கண்ணனேக் கண்டனர். பல்லாண்டுகளுக்குப் பிறகு காண்பதால் ஆசைதீர உற்று நோக்குகின்றனர். உற்றுநோக்கும்போது இமைகள் தன்னியல்பாக மூடுவதை ஏற்க இயலாமல் இமைகளே நொந்து கொள்கின்றனர். பார்த்த நொடிக்குள் உணர்ந்தவரை இதயத்தில் அமர்த்தி அங்கு இமைமூடுகிற நிலேயற்ற மனக் கண்ணுல் தடையின்றி பார்க்கின்றனர். இதயத்தில் காணப்படுபவர் ராஸலீலேயில் தம்முடன் ஆடியவர். இப்போது கண்களால் கண்டு உள்ளே புகுந்தவர் ராஸரஸிகரான கண்ணனுகிவிடுகிறார். இறுக அவரைக்கட்டி அணேக்கின்றனர். புறச்சூழ்நிலே அவர்களேத் தடை செய்யவில்லே. அணேப்பவரும் அணேக்கப் பெற்றவரும் அன்பால் ஒரே உருவம் பெறுகின்றனர். அங்கு அணேப்பவரும் இல்லே. அணேக்கப்பெறுபவருமில்லே. அணேப்பு என்ற நிலேயும் அகன்றது. அன்பு ஒன்றே மீந்தது. அந்நிலேயை அடையத்தான் பெரும் யோகிகளும் தவப்பயிற்சி செய்கின்றனர். ஆனுல் அவர்களால் பெற இயலாததை இந்த அன்பு கூட்டி வைக்கின்றது. நாரதர் இந்த அனுபவத்தைத் தியானயோகத்தில் கண்டவரானதால் பக்தி யோகமே சிறந்ததென்கிறார்.

*பக்தியோகத்திற்கு ஜ்ஞானயோகம் பெரிதும் உதவும் என்கிறார்.*

**28. तस्याः ज्ञानमेव साधनमित्येके ।**

**தஸ்யா: ஜ்ஞானமேவ ஸாதநம் இதி ஏகே.**

**तस्याः** *அந்தப்பேரன்பு நிலைக்கு* **ज्ञानमेव साधनं** *ஜ்ஞானமே உதவக்கூடியது* **इति एके** *என்று சிலர்.*

**29. अन्योन्याश्रयत्वं इति अन्ये**

**அந்யோந்யா ச்ரயத்வம் இதி அந்யே.**

**अन्योन्याश्रयत्वं** *ஒன்றுக்கொன்று பிடிப்பாக உதவக் கூடியது* **इति अन्ये** *என்றும் பிறர் கூறுவர்*

**30. स्वयं फलरूपता इति ब्रह्मकुमारः**

**ஸ்வயம் ப்பலரூபதா இதிப்ரம்ஹகுமார:**

**स्वयं फलरूपता इति** *தானே பலனாகக் கூடியதன்மை உள்ளதென்பார்* **ब्रह्मकुमारः** *பிரும்மாவின் குமாரரான நாரதர்.*

*பராபக்தி பிரம்ஹஜ்ஞானம் என்ற இரண்டும் ஒருநிலையின் இருபெயர்களா ? இரண்டும் வெவ்வேறா ? உண்மையான பரதத்துவநிலை உணர்வே முக்தி. இந்திரிய ஜ்ஞானம், மனோஜ்ஞானம், விஜ்ஞானம், ப்ரஜ்ஞானம் என்ற பல நிலைகளுக்கு யோகம் இட்டுச் சென்றதும் இவற்றைக் கடந்த ஜ்ஞான நிலையுணர்வு பிரும்ஹஜ்ஞானம். ப்ரஜ்ஞானம் ஈறான நிலைகளைக் கடந்த குருதான் ப்ரஜ்ஞான நிலைகடந்த பிரும்ஹஜ்ஞானம் என்ற நிலைக்குச் சிஷ்யனை இட்டுச் செல்வார். ஆரம்பத்தில் ஒவ்வொன்றும் படியாகி அடுத்த நிலைக்குக் கொணர்ந்துவிடும் அடுத்த மேனிலையும் படியாகி அதைவிடமேனிலையைக் காட்டும். எந்த நிலை ஏறிய பிறகு அது படியாகி மேனிலை என ஒன்றைக் காட்டாதோ அதுவே அடைய வேண்டிய இடம். அதனைவிட்டு மறுபடித்திரும்பி இறங்க நேராது.* **यद् गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम।** *இதில் கடைசி*

இடம் பராபக்தியா ! பிரும்ஹஜ்ஞானமா ? பிரும்ஹஜ்ஞானமும் பராபக்தி நிலைக்குப் படியே என்பவருமுண்டு. பக்தி பிரும்ஹஜ்ஞானத்திற்கும் பிரும்ஹஜ்ஞானம் பரபக்திக்கும் படியாக உதவும் என்பவரும் உண்டு. நாரதரோ பக்திக்குப் பக்தியேதான் பலன். ஜ்ஞான மல்ல. (ஜ்ஞானத்திற்கு ஜ்ஞானமே தான் பலன், பக்தியல்ல). அவித்யை என்ற மாயை அகல அகந்தை - மமதை அகன்றால் மட்டும் போதாது. உண்மையான அஹம் என்பதன் உணர்வும் தேவை. திரை நீக்கியதால் மட்டும் காட்சி நேராது. காட்சிப்பொருளை உணரத்தேவையான தகுதியும் பொருளை விளக்குகிற ஒளியும் தேவை. ஜ்ஞானயோகத்தில் ஒளியும் காட்சிப்பொருளும் ஒன்றே. பக்தியிலும் அஹந்தையும் மமதையும் அகன்றால் திரைவிலகியதை உணரலாம். அன்பெனும் ஒளியால் அன்பை உணர்வதே பக்தியோகம். பேரன்பே உருவானவர் பகவான். பகவானைப் பேரன்பாளராகக் காண அந்தப்பேரன்பே ஒளியாகி உதவுகிறது. ஸாதனமும் பலனும் ஒன்றே.

இதனை ஒரு உதாரணம் காட்டிவிளக்குகிறார்.

31. राज - गृह - भोजनादिषु तथैव दृष्टत्वात्।
ராஜ - க்ருஹ - போஜநாதிஷு
ததைவத்ருஷ்டத்வாத்.

राज - गृह - भोजनादिषु அரசன், வீடு, உணவு முதலியவைகளில் तथैव दृष्टत्वात् அவ்வாறே காணப்படுவதால் ஸாதனமான அன்பேதான் பலனும்.

32. न तेन राजा परितोषः क्षुच्छान्तिर्वा।
ந தேந ராஜா பரிதோஷ: க்ஷுத்சாந்திர்வா

तेन ராஜா எனவும் வீடு எனவும் உணவு எனவும் ஜ்ஞானத்தால் राजा அரசனுவதோ परितोषः மகிழ்ச்சியோ क्षुच्छान्तिर्वा பசி நீக்கமோ न இல்லை.

ஜ்ஞானத்தால் பக்தி என்பது பொருந்தாது என்பது

நாரதரின் கருத்து. அதனை மூன்று உதாரணங்களால் நிரூபிக்கிறார். ஓர் அரசரின் குமாரன் சிறுவயதில் காட்டில் சிக்கி வேடர்களால் வளர்க்கப்பெற்று வேடச் சிறுவனெனத் தன்னைக் கருதி வந்தான். தன்னை வளர்த்த வேட தம்பதிகளையே பெற்றோராக உணர்ந்தான். ஒருநாள் திடீரெனத் தற்செயலாக வெகுநாட்களாகத் தன்னைத் தேடிவந்த அரசனால் கண்டுபிடிக்கப் பெற்றுத் தான் ராஜகுமாரன் என்பதை உணர்ந்தான். அந்த வேடதம்பதியரும் அரசலக்ஷணங்கள் கொண்ட சிறுவனாகவே அவனைக் கண்டெடுத்து வளர்த்ததை ஒப்புக் கொண்டனர். முன்னதாகப் பிறப்பிலேயே அரசகுமாரனாயிருந்தும், அரசகுமாரன் என்ற தகுதியை இழக்காதிருந்தும் வேடருடன் வசித்ததால் வேடனானான். வேடனாக இருந்த நிலையிலும் அவன் அரசனின் குமாரனே. அரசனால் கண்டுபிடிக்கப்பட்டபின் புதிதாக அரசகுமாரனாகவில்லை. இதுவரை உள்ளத்தில் ஊறிவந்த அன்பு அவித்யை காரணமாக மறைந்தது. மறுபடி பகவானின் அருகாமைகிட்டியதும் புதிதாக உள்ளத்தில் அன்பின் ஊற்று கண்டுபிடிக்கப்பட்டாலும் அன்பே இயல்பானதால் தான் தூண்டப்பட்டதும் அதே அன்பை உணரமுடிந்தது. பராபக்தியாக இன்று மலர்ந்துள்ள அன்பு முன்னமே இதயத்தில் குடிகொண்டிருந்தது தான். தத்துவஜ்ஞானத்தால் இந்த அன்பு புதிதாக ஊறியதல்ல. அரசகுமாரனாக அல்லாதவன், அரசகுமாரன் என ஊரறியக்கோஷமிட்டதால் மட்டும் அரசகுமாரனாகி விடமுடியாது. தான் அரசகுமாரன் என்ற உண்மை நிலை, சூழ்நிலையில் வேடர்கூட வாழ்ந்ததால் மறைந்து, நினைவை விட்டு அகன்றது. மறுபடி நினைவூட்டப்பெற்றதும் அரசகுமாரனானான்.

தான் முன் வாழ்ந்த தன் வீட்டிலிருந்து ஊர் சுற்றச் சென்றவன் ஆங்காங்கு கிட்டிய தாற்காலிக சுகத்தால் தன்வீட்டைப்பற்றி மறந்திருந்தான். யாத்திரை முடிந்து தன் வீட்டை அடைந்ததும் ''அப்பாடா! என் வீட்டை அடைந்தேன். இனி நிம்மதிக்குக் குறைவில்லை'' என்று நிறைவுபெறுகிறான். இது புதிய நிறைவல்ல. ஏற்கனவே அனுபவித்ததுதான். நடுவில் தடைபட்டு மீண்டும் பெற்றதானதால் புதிய அனுபவமல்ல.

உண்டு சுகம் பெற்றுப்பழகியவன், பசி வந்ததும் உணவை நாடுகிறான். உணவின் ஒவ்வொரு பிடியிலும் பசியின் துன்பம் நீங்குவதை உணர்கிறான். மனம் மகிழ்கிறது. வாட்டம் நீங்கிப் புஷ்டியைப் பெறுகிறான். மனத்தின் மகிழ்வும் புஷ்டியும் இயல்பு. நடுவில் பசிவந்ததும் பத்தும் பறந்தன. உணவின்றித் துன்பம் தான் என்ற உணர்ந்தவன் ஒரு கவளம் வாயினுள் சென்றதுமே சுகம், ஸந்தோஷம் புஷ்டி என்று புதிதாக எதனையும் உணரவில்லை. நடுவில் தடைபட்டது, தடை நீங்கியதும் பழைய உணர்வு நீடிக்கிறது.

**भक्तिः, परेशानुभवः, विरक्तिः**
**अन्यत्र चैष त्रिक एककालः ।**
**प्रपद्यमानस्य, यथाऽश्नतः स्युः**
**तुष्टिः पुष्टिः क्षुदपायोऽनुघासम् ॥** (பாக 11.2.42)

காற்று தடைபடும்போது மூச்சுவிடத் திணறுவான். காற்றைப் பெற்றதும் நிம்மதியடைவான். நடுவிலிருந்த தடையானது பின்பெற்றகாற்றைப் பெரிதுபடுத்தியது. பக்தி, பரமேசனின் இணைப்பு, மற்றவற்றில் பற்றின்மை என்ற மூன்றும் தனித்தனி அல்ல. புதிதாகபெறப் பெறுபவையுமல்ல. முன் அதனை உணராதிருந்து இப்போது புதிதாகக் கிட்டியது போன்ற அனுபவம் என்ற அளவில் தான் புதுமை.

அதனால் புதிதாக அரசனாகவில்லை. புதிதாக வீட்டால் சந்தோஷம் வரவில்லை. புதிதாகப்பசி நீங்கிய சுகம் வரவில்லை. அதனால் அன்பே ஸாதனமாகி அன்பென்ற பலனைத் தந்தது.

**33. तस्मात्सैव ग्राह्या मुमुक्षुभिः ।**
**தஸ்மாத் ஸைவ க்ராஹ்யா முமுக்ஷுபி: ।**

**तस्मात्** அதனால் **मुमुक्षुभिः** பிறவிக்கடலின் சுழல்களில் இருந்து விடுதலை பெற விரும்புபவர்களால் **सैव** அந்த பக்தியே **ग्राह्या** ஸாதனமாக ஏற்கத்தக்கது.

ग्राह्या ஸாதனமாக ஏற்கத்தக்கது.

பரமப்ரேமை என்ற பராபக்தியே முக்தி. முக்தி என்று ஒன்று தனியே உண்டு எனக் கானல் நீரைத் தேடி ஓடுகிற மான்போலானவன் முக்திபெறமாட்டான். ஜீவகோஸ்வாமி இதனை அழகாக விளக்குகிறார்.

भुक्तिमुक्तिस्पृहा यावत्पिशाची हृदि वर्तते।
तावद्भक्तिसुखस्यात्र कथं अभ्युदयो भवेत्।

பகவானை வழிபடுவதால் போகங்களைப் பெறலாம் என்று அலைபவரும், முக்தி பெறலாம் என இல்லாததொன்றை நாடி அலைபவரும், முன்னதாகவே பெற்றுள்ள பக்தியின் ஸுகத்தைப் பெறுவது எங்ஙனம் ? தான் அன்பால் ஸுகமாக இருப்பதையே உணராமல் வெளிப்பொருளால் சுகமென்று அலைவது எதற்காக? பகவானின் அருகாமை பெற்ற பின்னும் முக்தியைத் தருவீர் என அவரிடம் கோருவது எதற்காக ? பகவத் ஸ்வரூபத்தின் அன்பை உணர்ந்த உடனேயே மற்றதெல்லாம் இவனைப்பற்றுவதைக் கைவிட்டுவிட்டனவே ? இந்நிலையை விடவேறுபட்ட முக்தி என்ற நிலை உண்டா ?

न पारमेष्ठ्यं न महेन्द्रधिष्ण्यं
न सार्वभौमं न रसाधिपत्यम्।
न योगसिद्धीरपुनर्भवं वा
मय्यर्पितात्मेच्छति मद् विनाऽन्यत्॥ (பாக 11.14.14)

கிருஷ்ணன் உத்தவரிடம் கூறுகிறார் - என்னிடம் தன்னை ஒப்படைத்தவன் என்னைத்தவிர மற்றதை நாடமாட்டான். பிரும்மனின் பதவியோ இந்திரபதவியோ பூமியின் சக்ரவர்த்தி நிலையோ பாதாள அரசோ யோக ஸித்தியோ மறுபிறப்பின்மையோ அவனுக்குப் பெரிதல்ல. "न तथा मे प्रियतमः आत्मयोनिर्न शङ्करः। பக்தனைவிட எனக்கும் பிரும்மாவோ சிவபெருமானோ பிரியமானவரல்ல". பகவானுக்கும் பக்தனின் அன்பைவிடப் பெரிதொன்றுமில்லை. பக்தனுக்கும் அந்தப் பேரன்பை விடப்பெரிதொன்றுமில்லை.

பக்தியின் பெருமை விளக்கம் முற்றிற்று.

— ✱ — ✱ —

# तृतीयोऽध्यायः மூன்ருவது அத்தியாயம்

## भक्तिसाधनानि பக்திக்கு உதவுபவை

34. तस्याः साधनानि गायन्त्याचार्याः

தஸ்யா: ஸாதநாநி காயந்தி ஆசார்யா: ।

आचार्याः *ஆசாரியர்கள்* तस्याः साधनानि *அந்தபக்திக்கு உதவுபவற்றை* गायन्ति *எளிதில் மனத்தில் பதியும்படி பாடியிருக்கிருர்கள்.*

35. तत्तु विषयत्यागात् संगत्यागाच्च ।

தத் து விஷயத்யாகாத் ஸங்கத்யாகாத் ச

तत्तु *அந்த பக்தியோ* विषयत्यागात् *வெளிப்பொருள் நாட்டத்தைத் தவிர்ப்பதாலும்,* सङ्गत्यागात् च *ஈர்க்கின்றவற்றின் தொடர்பைத் தவிர்ப்பதாலும் நிலைபெறுகிறது.*

36. अव्यावृत्तभजनात्

அவ்யாவ்ருத்த பஜநாத்.

अव्यावृत्तभजनात् *மனத்தை மற்றவற்றிலிருந்து திருப்பி அன்புடன் பகவானை வழிபடுவதால் ஏற்படுகிறது.*

37. लोकेऽपि भगवद्गुण - श्रवण - कीर्तनात् ।

லோகே அபி பகவத்குண - ச்ரவண - கீர்தநாத் ।

लोके अपि *உலகத்தின் தொடர்புள்ளபோதும்,* भगवद् गुण-श्रवण-कीर्तनात् *பகவானின் பெருமைகளைக் கேட்பதாலும் வாயாரப்பாடுவதாலும் நிலைபெறுகிறது.*

38. मुख्यतस्तु महत्कृपयैव भगवत्कृपालेशाद् वा ।

முக்க்யதஸ்து மஹத் க்ருபயைவ, பகவத் க்ருபா லேசாத்வா

मुख्यतस्तु *முக்கியமாகப் பெருமளவில்* महत्कृपयैव *பெரியோரின் கருணையால் தான் நிலைபெறுகிறது.*

भगवत्कृपालेशाद्वा பகவானின் சிறிதளவு கிருபையாலும் கிட்டலாம்.

பக்தி என்ற பேரன்பின் ஊற்று உள்ளத்திலுள்ளது. அது வெளியே பெருக்கெடுத்து வழிய, சிலதூண்டுதல்கள் தேவை. மனத்தைப் பல பொருட்கள் ஈர்த்து அவற்றின் வசப்படும்படி கட்டுப்படுத்தும். அவை விஷயங்கள் (विषिणोति विशेषेण बध्नाति इति विषयः) சுய நலம் அவற்றின் வசத்தில் நம்மைச் சேர்க்கும். அவைதவிர்க்கத் தக்கவை. நான் எனது என்ற உணர்வுகள் அவசியமல்லாத பலவற்றுடன் தொடர்பு கொள்ளச் செய்யும். அவை சுகம் தருபவை என விளம்பரப்படுத்தும். வாழ அவசியத்தேவை என்பது சில தான். அஹந்தையும் மமதையும் தான் பலவற்றை அறிமுகப்படுத்தி அவைகளையும் தேவையானவையாகக் காட்டுகின்றன. தேவையைக் குறைப்பதென்ற அடக்குமுறையைப் (யமங்கள்) பழகுவது அவசியம். தேவையைக் குறைப்பதும் எதனையும் தேவை என்று உணராதிருத்தலும் (अपरिग्रहः) அவசியம். அதற்கும் முதலாக எடுக்கப்படவேண்டிய பயிற்சி எதிலும் ஈடுபடாதிருத்தல் (सङ्गत्यागः). யோகப்பயிற்சியில் முதலிடம் பெறுபவை யமமும் நியமமும் தான்.

இயல்பாகத் தன்னைமுன் நிறுத்தித்தவறுன வழியில் அழைத்துச் செல்பவை ஐந்து. ஹிம்ஸை, பொய் பேசுதல், பிறர்பொருளை அவர்கள் அறியாதபடி தனதாக்கிக் கொள்ளுதல், உலகில் உள்ள ஆணையும் பெண்ணையும் போகப் பொருளாகக் கருதுதல், தேவையை வளர்த்துக் கொள்வதும் தேவையற்றதையும் தேவையாக்கிக் கொள்வதும் தான். இவை இயல்பான உணர்ச்சிகளே எனத்தோன்றும். இவற்றைத் தவிர்ப்பதென்ற எதிர் நடவடிக்கையே முதலிடம் பெறும். அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம், ப்ரும்ஹசர்யம், அபரிக்ரஹம் என்ற ஐந்தும் யமங்கள் என்ற பயிற்சி முறைகள். இவைகளே இங்கு விஷயத்யாகம், ஸங்கத்யாகம் என்ற இரண்டு நடைமுறைகள். இதனைச் செய்யாதே என்பது

முதலில். இதனைச்செய் என்பது அதனைத் தொடர்ந்து. இந்தத் தவிர்த்தல் உலகத்தையே தவிர்த்தல் என்ற செயலில் முடிவடையும்.

நிலைத்த நிலைபெற நிலைத்ததை நாடவேண்டும். பகவானின் நிலைமட்டுமே **பரமார்த்த ஸத்**. என்றும் எங்கும் எவ்வகையிலும் நிலைத்தது. மற்றதனைத்தும் நடைமுறையில் நிலைத்தது. **வியாவஹாரிக ஸத்**. அல்லது தோற்ற அளவில் நிலைத்தது, **பிராதிபாஸிக ஸத்**. எதனாலும் மாறுபடாதது ஒன்றை அடைய விரும்புபவன் கானலையும் கனவையும் தவிர்க்க வேண்டும். சிலவற்றிடமிருந்து தூரவிலகி நிற்பதும் அவசியம். அப்போதுதான் நாடவேண்டியதைத் தடையின்றி நாடமுடியும். தவிர்த்தலையும் பழகிப் பழகித் தான் இயல்பாக்க முடியும். நம்மைக் கெடுப்பவை என அவற்றை அழிக்க முயல்வதும் சரியல்ல. அழிப்பதும் இயலாது. அவை கெட்டவை அல்ல. அவற்றோடு நாம் தொடர்பு கொள்வது தவறு. அவற்றை அகற்ற இயலாத போது அவற்றுடன் தொடர்பு கொள்ளாதிருத்தலே முதலிடம் பெறுகிறது. மனத்தைத் தூண்டிக்கெடுப்பவை எதிரில் உள்ளபோது அதனால் மாறுபடாத உள்ளமுடையவனே தீரன் என்கிறார் காளிதாஸ கவி. **विकारहेतौ सति विक्रियन्ते येषां न चेतांसि त एव धीराः ।** மனச்சலனத்திற்கு இடம்தராதபடி சூழ்நிலை அமைத்துக் கொள்வதும் சலனத்திற்கு ஆட்படுத்துபவற்றைத் தவிர்ப்பதும் அவசியம். சபலத்திற்குச் சிறிதளவு என்பது கிடையாது. சிறுதீப்பொறி பெருந்தீயாக தீயை அணைக்கின்ற காற்றே உதவக்கூடும். சலனத்தைத் தருபவற்றை தீண்டாதிருத்தல் மட்டும் போதாது. மனத்தில் ஸங்கல்ப அளவில் எழுந்த சலனம், சொல்லாகச் செயலாக வெளிப்படாதிருந்தாலும் கேடுவிளைவிக்கக் கூடியதே, செல்வமாகக் கவர்ந்தால் தானம் செய்யலாம். போகமாகக் கவர்ந்தால் விரதமிருந்து தவிர்க்கலாம். தவத்தால் சுகநாட்டத்தைத் தவிர்க்கலாம். மௌனத்தால் பேசுவதில் சபலத்தைக் குறைக்கலாம். சிறிது சிறிதாகக் கட்டுப்படுத்திப் பழகி இயல்பாக்கிக் குறையுணர்வை மாற்றி பொருளின்றியும் நிறைவு காணலாம்.

க்ர்மத் தியாகமும் கர்மபலத்தியாகமும் இம்முயற்சியில் பலன் தரவல்லவை.

மனிதன் உணர்ச்சிகளால் வாழ்கிறுன். உணர்ச்சியற்ற நிலையைப்பழகவில்லை. நல்லதைக் கேட்போம். நல்லதைச் சொல்வோம். நல்லதைநினைப்போம். நல்லதைச் செய்வோம். என்ற சுயக்கட்டுப்பாடு உணர்ச்சிகளை அடக்கும். எது நல்லது ? இதனை நிர்ணயிப்பது எளிதல்ல. ஒருநிலையில் நல்லது மற்ருெரு நிலையில் கெட்டதாகலாம். எப்போதும் நல்லது பகவானுடன் கொள்கிற தொடர்பே. உள்வாஸனைகளும் ஸம்ஸ்காரங்களும் அந்தத்தொடர்பைச் சிதறச்செய்யும். சுய நலமற்று ஆராய்ந்தால் எது எல்லா நிலைகளிலும் நல்லதோ அதனைப் பின்பற்றமுடியும். தெய்வசிந்தனையுடன் தெய்வத் துணையுடன் நல்லதைத்தேட கீதையில் *(16.13)* சொன்ன தைவீ ஸம்பத் என்ற அழியாச் செல்வம் கிட்டும். தைவச் செல்வத்துடன் பகவானைப்பக்தியுடன் வழிபடப் பக்தி பராவாகும். பதஞ்ஜலி உபதேசிக்கிற வழி இதனை எளிதில் கிட்டச் செய்யும். **स तु दीर्घकाल-नैरन्तर्यसत्कारासेवितो दृढभूमिः ।** எத்தனை நாட்களில் கிட்டும் என்ற கேள்வி பயனற்றது. பயன் கிட்டும் வரை எத்தனை நாட்களாயினும் முயன்றுபார். இடைவிடாமல் முயன்று பார். அதுவே நல்ல வழி என்று நன்கு மதித்து முயன்றுபார். அப்போது வலிவாக உள்ளத்தில் பற்றிக் கொள்ளும். நடுநடுவே இடைவெளி தருவது. நன்மதிப்பின்றி கடனுக்காகச் செய்வது, பலனைப் பெற அவசரப்படுவது இவை அதற்கு இடையூறுகள். உலகத்தொடர்பை விட்டு ஏகாந்தமாக பகவானை வழிபடுகிற வாய்ப்பு வெகு சிலருக்கு மட்டுமே கிட்டும். மற்றவர் பெரும்பொழுதை சிரவணம் கீர்த்தனம் முதலிய பலவற்ருல் மனனம் தொடரும்படி செய்ய வேண்டும்.

பகவானின் பெருமையைக் கேட்பதாகிய சிரவணம் மிக எளிது. புதிதாகப்பழகுபவனுக்கு மனம் தானே ஈடுபடக் காது வழியே செல்கிற செய்தி பெரிதும் உதவும். ருக்மிணி கிருஷ்ணனிடம் அன்பை வைக்கப்பெரியோர் பலர் அவளது

காதில்படும்படி பகவானின் பெருமையைக் கூறினர்களாம்.

श्रुत्वा गुणान् भुवन सुन्दर शृण्वतां ते निर्विश्य कर्णविवरैर्हरतोऽङ्गतापम्।
रूपं दृशां दृशिमतां अखिलार्थलाभं त्वय्यच्युताविशति चित्तमपत्रपं मे।

''அச்யுதா ! காது வழியே உட்புகுந்து உள்ளத்தைக் குளிர்வித்தாய். கண்களால் பருகத்தக்க உனது அழகையும் காது வழியே கேட்டேன். மனம் கூசாமல் உன்னிடம் ஈடுபட்டுள்ளது என்கிருள். அவளை அவ்வாறு மகிழ்வித்தது மற்ெருருவர் செய்த பகவானின் குணகீர்த்தனம். சிரவணமும் கீர்த்தனமும் நேரத்திற்கு உட்பட்டதே. அதனுல் ஏற்பட்ட பகவானின் நினைவு ஆயுட்காலம் வரை. ஏன் ! அடுத்த பிறவியிலும் பல பிறவிகளிலும் தொடரும். இவை மூன்றுமே பாதஸேவனம் அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் என்று உடலால் வழிபடச் செய்யும். மனம் அன்பால் இணையும் (ஸக்யம்). அதன் விளைவு தன் நலமற்ற நிலையில் தன்னையே பகவானிடம் ஒப்படைக்கச் செய்யும். இவை ஒன்பதும் பக்திக்கு ஸாதனங்களாகும்.

பக்தியுள்ளமே பெரும்பாலும் இவற்றிற்கு வழிகாட்டும். அல்லது பக்தி குருவடிவம் கொண்டு வழிகாட்டும். காட்டில் நோக்கமற்றுத் திரிகிற துருவனுக்கு நாரதராக வழிமறித்து வழிகாட்டுவதும் உண்டு. தவத்தால் வெளியுணர்வே அற்றிருந்த துருவனுக்குப் பகவான் தன் சங்கத்தால் காதருகே வருடி சுய உணர்வு தந்து தன்னை வணங்கவும் துதிக்கவும் திருவடிகளைத் தீண்டவும் சக்தி தருகிருர். லேசான பகவானின் கிருபை தருகிற உதவி இது. மஹான்களின் கிருபையும் பகவானின் கிருபையும் ஸாதனமாகின்றன. விஷயத்தியாகமும் ஸங்கத்தியாகமும் பகவானைத் தொடர்ந்து வழிபடுவதும் சிரவணத்திலும் கீர்த்தனத்திலும் ஈடுபடுவதும் பக்தனின் செயற்பாட்டினுட்பட்டவை. மஹான்களின் கிருபையும் பகவானின் கிருபையும் பகவானுல் ஆகக்கூடியவை. दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम् என்று தேவி தேசிகனின் வடிவில் தனக்கு நலம் புரிந்ததைக் காளிதாஸர் கூறுகிருர்.

மஹான்கள் பகவானின் நாமங்களை உபதேசித்து வழிபடச் சொல்வர். பகவானுக்குத் தன் நாமங்களில் அத்தனை அபிமானமும் பிரியமும். பெயருக்கும் பெயரால் குறிப்பிடப் பெறுபவனுக்கும் உள்ள தொடர்பு வலிவுள்ளது. தான் யார் என்று வெளியேகாட்டிக் கொள்ள விரும்பாத ஒற்றனும் கடும் தூக்கத்தில் அவனைப்பெயரிட்டழைத்தால் எழுந்து தானே தன்னைக்காட்டிக் கொடுத்துவிடுவான். பெயருக்குப் பெரும் ஆகர்ஷண சக்தி உண்டு. உபாஸனையில் பகவானின் நாம பாராயணம் முதலிடம் பெறும். பகவானின் தொடர்ந்த நினைவிற்கு, அது அலை அலையாகப் பரவித் தொடர் அறுகாதிருப்பதற்குப் பெயரைத் தொடர்ந்து கூறுவது எளிது. உடலையும் உள்ளத்தையும் தூயதாக்க நாமஸ்மரணம் மானஸஸ்நானம் என்பர். குறைவுற்றதையும் நிறையுள்ளதாக்கும். திதியும் வாரமும் நட்சத்திரமும் யோகமும் கரணமும் விஷ்ணுவே. அவனது நாமம் சொல்ல அவை மங்களமாகி அனுகூலமாகிவிடும்.

अपवित्रः पवित्रो वा सर्वावस्थां गतोऽपि वा।
यः स्मरेत्पुण्डरीकाक्षं स बाह्याभ्यन्तरः शुचिः॥
तिथिर्विष्णुः तथा वारो नक्षत्रं विष्णुरेव च।
योगश्च करणं चैव सर्वं विष्णुमयं जगत्॥
तदेव लग्नं सुदिनं तदेव ताराबलं चन्द्रबलं तदेव।
विद्याबलं दैवबलं तदेव लक्ष्मीपते तेऽङ्घ्रियुगं स्मरामि॥

நற்பணியைத் தொடங்குமுன் இந்த சுலோகங்களைக் கூறுவர். தூய்மையற்ற நிலையிலும் தூய்மை பரவும். தகாத வேளையும் தக்கவேளையாகும். ஸாதனக்குறைவால் நிறையுறாத நற்பணியும் நாம ஸ்மரணத்தால் நிறைவடையும். நாமஜபமே பெரும் வழிபாடு என்கிறார் பீஷ்மர் விஷ்ணுஸஹஸ்ரநாமத் தொடக்கத்தில். एष मे सर्वधर्माणां धर्मोऽधिकतमो मतः। ஸ்ரீசங்கர பகவத் பாதர்கள் நாமங்களைக் கொண்டு துதிப்பதாலும் வழிபடுவதாலும் பெறுகிற லாபம் பற்றிக்குறிப்பிடுகிறார் விஷ்ணுஸஹஸ்ர நாமபாஷ்யத் தொடக்கத்தில்.

अस्य स्तुतिलक्षणस्य अर्चनस्य आधिक्ये किं कारणम् ? उच्यते, हिंसादिपुरुषान्तर द्रव्यान्तर देशकालादिनियमानपेक्षत्वं आधिक्ये कारणम् ।

இதில் பிராணி ஹிம்ஸை இல்லை. சுற்றிநிற்பவர் சிரமப்படாதபடி மனத்தினுள் ஸ்மரணம் செய்யலாம். இதனைச் சொல்ல வாய் வசத்திலிருந்தால் போதும். வேறு ஸாதனத் தேவையில்லை. இதனைக் கொண்டு வழிபடு என்ற திரவிய நியமமில்லை. திரவியத்தின் குறையால் வழிபாட்டில் குறை என்பதில்லை. நாமஸ்மரணத்துடன் செய்ய தகுதிக் குறைவும் திரவ்யக் குறைவும் மறையும். இந்த இடத்தில் இந்தநேரத்தில் இவ்வாறு செய் என இடம் நேரம் முறை இவற்றின் கட்டுப்பாடு இல்லை. இதனைவி ட எளிய உபாயம் வேறேதுமில்லை. நாமஸ்மரணத்தை ஜபயஜ்ஞமாகச் செய்வதும் மிக எளிது. பிறருடன் சேர்ந்தும் தனித்தும் செய்யலாம். கட்டுப்பாட்டினுட்பட்டுப் பழகிப் பழகி மனத்தை வசப்படுத்துதல், தூய்மை, மௌனம், நாமத்தின் பொருளையும் உணர்ந்து நாமம் கூறுதல், கவனம் சிதறாமல் சோர்வுறாமல் ஆர்வம் குன்றாமல், ஜபம் செய்ய ஈச்வரதர்சனம் எளிதில் கிட்டும்.

मनः संहरणं शौचं मौनं मन्त्रार्थचिन्तनम् ।
अव्यग्रत्वं अनिर्वेदो जप संसिद्धिहेतवः ॥

காரித்துப்புதல் கொட்டாவி கோபத்துடிப்பு தூக்கம் சோம்பல் பசி திமிர் போன்ற ஜபத்தைக் குலைப்பவைகளைத் தவிர்க்கலாம்.

மிக எளிதான நாமஜபத்தின் போது தவிர்க்கத் தக்கவை சில. வழிபாட்டால் பகவானை திருப்திபெறச் செய்கிறோம். இது ஆராதனம். பரம கருணாமூர்த்தியான அவரும் அதிருப்தியடையும் படி சில தவறான நாமஸ்மரண முறைகள் உண்டு. இவற்றை நாமாபராதங்கள் என ஸனத்குமாரர் நாரதருக்கு உபதேசிக்கிறார். அதனை இவ்வாறு தொகுத்திருக்கிறார்கள்.

•

सन्निन्दा सति नामवैभवकथा श्रीशेशयोर्भेदधीः
अश्रद्धा श्रुतिशास्त्रदेशिकगिरां नाम्न्यर्थवादभ्रमः।
नामास्तीति निषिद्धवृत्ति विहित त्यागौ च धर्मान्तरैः
साम्यं नामनि शङ्करस्य च हरेर्नामापराधा दश ॥

பெரியோர்களை நிந்திப்பது, பெரியோர்களுக்கே நாமத்தின் பெருமையை விளக்கமுறப்படுவது, விஷ்ணுவிற்கும் பரமேசுவரனுக்கும் இடையே ஏற்றத்தாழ்விருப்பதாக எண்ணுவது, வேதம் சாஸ்திரம் குருவின் உபதேசம் முதலியவற்றில் அசிரத்தையுடன் தனக்கே எல்லாம் தெரியும் என்ற அகந்தை, 'நாமத்தின் பெருமைபற்றிக் கூறியதெல்லாம் நம்மை ஈடுபடுத்தவே. உண்மையில் அந்தப்பெருமை நாமங்களுக்கு உரித்தானதல்ல' என்ற அர்த்தவாதத்தால் குழம்புவது, நாம ஜபம் செய்வதால் முறை தவறி நடக்கலாம். செய்யத்தகாததைச் செய்ததாலும் செய்ய வேண்டியதைச் செய்யாததாலும் நேர்கிற குறையை நாம ஜபம் போக்கும் என்ற தவருன அணுகுமுறை, மற்ற வழிபாட்டு முறைகளுடன் நாம ஜபத்தை ஒப்பிட்டுவது, சிவ விஷ்ணு நாமங்களுக்கு இடையே ஒப்பீடு இவை அனைத்தும் நாமத்தைத் தவருன வழியில் பயன்படுத்தி ஈசன் விஷயத்தில் குற்றம் புரிவதாகும். இந்த நாமாபராதங்கள் நீங்க, நாமத்தை முறைப்படி சொல்வதே உபாயம்.

பெரியோரின் கருணையும் பகவானின் அருளும் பக்தி மார்க்கத்தில் பெரும் துணை. ஆனுல் அவ்விரண்டையும் பெறத்தகுதியும் வாய்ப்பும் அதனை நோக்கிச்செல்பவனுக்கு மட்டும் கிட்டும். 'அவனருளால் அவன்தாள் வணங்கி' என்பது உண்மையாக நிகழ்வதே. அவ்வாறு நிகழ, அவன் தாள் வணங்கி அவனருள் பெற்று என்பதும் சரியானதே. ஸாதகனின் நோக்கில் அவனை வழிபட்டு அவன் அருள் பெறுவது முறை. பகவானின் நோக்கில் பக்தனைத் தன் அருளால் தன் அருகில் அழைத்துக் கொள்வதும் மேனிலைக்கு அழைத்துச் செல்வதும் அவரது விருப்பப்படி நடக்கும். அதனுல் பெரியோர் தானே

கருணை வசப்பட்டு துருவனுக்கு நாரதர் உபதேசித்தது போல் நம்மை ஆட்படுத்தி நல்ல வழிகாட்டுவாரா ? அல்லது குருவைத்தேடிப் பணிந்து பணிவிடை செய்து அவர் மனம் கருணையால் நெகிழும்படி நடந்து கொள்வது இன்றியமையாததா ? இதற்கும் விடை தருகிறார்.

39. महत्सङ्गोऽपि दुर्लभः अगम्यः अमोघश्च।

மஹத் ஸங்கோகபி துர்லப:, அகம்ய:, அமோகஶ்ச।

**महत्सङ्गः अपि** *நல்லோரிணக்கமும்* **दुर्लभः** *எளிதாகப்பெற இயலாதது.* **अगम्यः** *தானே சென்றடைய முடியாதது.* **अमोघः च** *(பெற்றுவிட்டால்) வீணாகாதது (தவறாமல் பயனளிக்கக் கூடியது)*

40. लभ्यतेऽपि तत्कृपयैव।

லப்ப்யதே அபி தத்க்ருபயா ஏவ

**तत्कृपया एव** *அவரது பரிவாலேயே* **लभ्यते अपि** *கிட்டவும் கூடும்.*

41. तस्मिन् तज्जनेऽपि भेदाभावात्।

தஸ்மின் தத்-ஜநே அபி பேத அபாவாத்

**तस्मिन् तज्जने अपि** *அவருக்கும் அவரைச்சார்ந்த மகான்களுக்கும் இடையே* **भेदाभावात्** *வேற்றுமை கிடையாதாகையால், (நல்லோரிணக்கம் பகவானின் அருளால் கிட்டுகிறது.*

42. तदेव साध्यतां तदेव साध्यताम्।

ததேவ ஸார்த்த்யதாம் ததேவ ஸாத்த்யதாம்

**तदेव** *நல்லோரிணக்கமும் பகவானின் திருவருளும்* **साध्यतां** *கிட்டுவதற்கான உரிய செயலில் முனைந்து சாதித்துக் கொள்ளவும்.* **तदेव** *அதனைப்பெறுவதற்கான செயலில்* **साध्यतां** *முயன்று வெற்றிபெறவும்.*

மஹான்களின் கிருபைபெற பகவானின் அருள் உதவும். பகவானின் அருள்பெற மஹான்களின் கருணை நம்மீது படவேண்டும். இந்த இரண்டும் இன்றியமையாத பக்தி ஸாதனங்கள். ஒன்றுக்கொன்று உதவிக் கொள்பவையே. இரண்டும் இணைந்து செயல்படுபவையே. மஹான்களின் ஸங்கம்பெறுவது எளிதல்ல. அதனை அடைய குறுக்குவழி இல்லை. அவர்களே முன்வந்து வழிகாட்டுவது பகவானின் சித்தப்படி அமையும். பகவானே தான் குருவாக வருகிறார். ''देशिकरूपेण दर्शिताभ्युदयाम्'' । ''குருவாய் வருவாய் அருள்வாய் குகனே !'' என்பது இதனை உணர்ந்தோரின் வாக்கு. தகுதியற்றவனும் இறையருளால் நமக்கு நல்வழிகாட்டியாகலாம். இறைவனே குருவாகியுள்ளார் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை ஒன்றே இங்கு உதவும். இறையருள் குருவருளாக உருவெடுத்து நம் அறியாமையை நீக்கி இறையனுபவம் தருகிறது. அதனால் இறையருள் செறிந்த குருவருள் பெறுவதே இங்கு ஸாதனையின் குறிக்கோள்.

நமது கடும் முயற்சி மட்டும் பக்தியை உணரப் போதுமானதல்ல. நற்பாதையில் நம் முயற்சி செல்வதைக் கண்காணிக்க நம் அறிவு போதுமானதல்ல. நம் அறிவு குறுக்கு வழியில் செல்லத் தூண்டும். அதுதான் அதற்கு எளிதானதும் பிடித்ததும் கூட. பகவானை அணுகக் குறுக்கு வழி கிடையாது. அதனால் பற்றற்ற குரு ஸாக்ஷியாக நம் செயலைக் கண்காணிக்கிறார். அவரது இயல்பான பரிவு நம்மை நல்வழியில் அழைத்துச் செல்லும்படி அவரைத்தூண்டுகிறது. அந்தப்பரிவு பகவதனுபவம் கலந்தது. பகவானது பரிவும் குருவின் பரிவின் மீதேறி வழிகாட்டுகிறது. நம் கடும் முயற்சியை அது எளிதாக்கி, இனியவழியில் பகவானிடம் சேர்க்கிறது. நாரதரின் முன்பிறவியில் பெற்ற அனுபவம் அதனைமெய்ப்பிக்கின்றது.

மனிதனுக்குத் தன் செயல்முறையில் சுதந்திரம் உள்ளது. அதனைப்பகவானது தந்திரத்திற்கு உகந்தவாறு முறைப்படுத்துவதே பெரியோர்களின் வழி. மனிதன் தன்

சுதந்திரத்தைப் பயன்படுத்துகிறவரை பகவான் பொறுப்பேற்பதில்லை. மஹாபாரதப் போரைப் பகவான் தன் சுதந்திரத்தால் தடுத்திருக்க முடியும். கௌரவர்களோ பாண்டவர்களோ போரைக் குறித்து முடிவில் தன் சுதந்திரத்தைக் காட்டினர். தன் சுதந்திரத்தை வலிவில் பகவானிடம் ஒப்படைத்த அளவில் தான் போரில் வெற்றி. போரில் அனைவரும் மடிந்தனர். கிருஷ்ணனின் பொறுப்பிலிருந்த ஒரு சிலரே மரணத்திலிருந்து தப்பினர். அம்புப்படுக்கையில் படுத்திருந்த பீஷ்மர் தன்னைக் காணவந்த பாண்டவர்களிடம் கூறுகிறார்.

सर्वं कालकृतं मन्ये भवतां च यदप्रियम्।
सपालो यद्वशो लोको वायोरिव घनावलिः॥
यत्र पाण्डुसुतो राजा गदापाणिर्वृकोदरः।
कृष्णोऽस्त्री गाण्डिवं चापं सुहृत्कृष्णस्ततो विपत्॥
यद्विजिज्ञासया युक्ता मुह्यन्ति कवयोऽपि हि।
तस्मादिदं दैवतन्त्रं व्यवस्य भरतर्षभ। (பாக. 1-9-14-15)

''காலம் என்பது நம் வினையையும் பகவானது ஸங்கல்பத்தையும் ஒட்டிச் செயல் புரிகிறது. உங்களுக்கு ஏற்பட்டதுயரம் காலத்தால் நேர்ந்தது. பேரரசனின் பாதுகாப்பிலுள்ள இந்த உலகம் காற்றின் வலிவில் அலைகிற மேகக் கூட்டம் போன்றது. உருண்டு திரண்டு நல்மழை பெய்யலாம். பெருமழையாகி அழிக்கலாம். கணத்தில் கலகலத்துத் தூவானமாகக் வானில் மறையலாம். அதன் சுதந்திரம் அந்த அளவிற்கே. உங்கள் நிலையில் அறவழி நிற்கிற தர்மபுத்திரன் அரசன். கதை ஏந்திய வாயுகுமாரனான பீமன், சிறந்த வில்லாளியான இந்திரபுத்திரனான அர்ஜுனன், அவன் கையில் காண்டீவவில், பகவான் கிருஷ்ணன் நண்பனாக உதவுபவன். இத்தனை பாதுகாப்பிலும் விபத்து நேர்ந்துள்ளது. தைவத்தின் செயல்முறையே (தந்திரமே) வென்றது. இதனை உணர்ந்த பெரியோர் மீண்டும் இதனை ஆராய்ந்து பேரறிவாளராயினும் குழம்புகின்றனர்.''

அதனால் மனிதனின் நன் முயற்சி, அகந்தை - மமதை பாதிப்பின்றி பகவான் குரு இவர்களது கிருபையின் வலிவால் பகவதனுபவத்திற்குக் காரணமாகிறது. அகந்தை - மமதை பாதிப்பிருந்தாலும் அம்முயற்சி பலிக்காமலிருக்கலாம். அகந்தையும் மமதையுமின்றி முயற்சி செய்வதில் குருவிடமும் பகவானிடமும் அந்த அஹந்தையையும் மமதையையும் சரணடையச் செய்ய வேண்டும். இதன் நடைமுறையில் ஏற்படுகிற ஏற்றத்தாழ்வே பக்தியின் தராதரத்தை நிர்ணயிக்கும். ஸாதகனின் பூர்ணசரணுகதியே குருவைக் கனிய வைக்கிறது. அதனால்ஸாதகன் அளவில் குருவிடம் சரணுகதி மட்டுமே தெய்வ அருள்பெறப் போதுமானதாகக் கூடும்.

**महत्सेवां द्वारमाहुर्विमुक्तेः तमोद्वारं योषितां सङ्गिसङ्गम्।**
**महान्तस्ते समचित्ताः प्रशान्ताः विमन्यवः सुहृदः साधवो ये॥**

*இது ருஷபயோகியின் உபதேசம். (பாகவதம் 5.5.2)*

**रहूगणैतत्तपसा न याति न चेज्यया निर्वपणाद्गृहाद्वा।**
**न च्छन्दसा नैव जलाग्निसूर्यैः विना महत्पादरजोऽभिषेकम्॥**

இது ருஷபகுமாரரான பரதரின் உபதேசம் (பாகவதம் 5.12.12) ''ஸமநோக்கும் அமைதியும் மனப்புழுக்கமின்மையும் நட்பும் கொண்ட நல்லோர் நமக்கு வழிகாட்டினால் தான் வாழ்க்கைச் சிக்கல்களிலிருந்து விடுபடமுடியும்.'' வாஸுதேவரைப் பற்றுவது மஹான்களின் திருவடிபற்றியவருக்கே எளிது. தவமோ வேள்வியோ துறவோ வேதமோதுதலோ நீரிலும் நெருப்பிலும் ஸூரியனிடத்திலும் தைவவழிபாடோ மஹான்களின் துணையின்றி பகவானிடம் அழைத்துச் செல்லாது'' வழிதெரியாதவன், ஸாதனங்கள் பல இருந்தும் அடையவேண்டியதை அடைய முடியாது. அரிசி சமைத்தாலன்றி உணவாகாது. அரிசி தான் உணவாகிறது என்பது உண்மை. ஆனால் சமைக்கும் முறைதெரிந்தவனே, சமைக்கிற முறை அறிந்தவனின் வழிகாட்டல் பெற்றவனே தான் உணவாக்க முடியும். ஸாதகனின் நிலைக்கேற்ப ஸாதனங்களும் ஸாதனமுறையும் வேறுபடலாம். தெய்வ அருள்பெற்ற குருவே

தெய்வ அருளால் கனிந்து தெய்வஅருளுக்குத் தகுதி பெற்று ஸாதகனுக்கேற்ற ஸாதனங்களையும் ஸாதனைமுறையையும் தேர்ந்தெடுத்துக் கூட இருந்து வழிகாட்டுகிறார். சாதுர் மாஸ்ய காலத்தில் சிறுவனின் பணிவிடையில் மகிழ்ந்த மஹான்கள், அவனது தகுதியைப் பொருட்படுத்தாமல் பரதத்துவ நிலைபெறும் வழியைக்காட்டி அதில் நாட்டத்தை உண்டாக்கினர். அதுவே சிறுவனின் வாழ்நாள் முழுவதும் துணை நின்றது. பகவதனுபவம் பெறத் தகுதி தந்தது. அந்த நன்றியுணர்வை நாரதர் இந்த ஸூத்திரங்களின் மூலம் வெளிப்படுத்துகிறார்.

பகவானின் கிருபை எல்லையற்ற பெருமை கொண்டது. அதில் லவலேசம் நம்மீது பட்டால் போதும். கணக்கற்ற கோணங்களில் எல்லையற்ற காலவரையில் பல்வேறு இடங்களில் நின்று கண்டு உணர்ந்து ஆடிப்பாடி மற்றவருக்குக் காட்டிப்பழுத்த பகவதனுபவம் பெற்ற நாரதர் भगवत्कृपा लेशाद्वा என கிருபையின் லவலேசம் பெற்றாலே போதும், பக்தி நிலைத்துவிடும் என்கிறார்.

பகவானின் கிருபை ஊமையைப் பேசவைக்கும். முடவனை மலை தாண்டச் செய்யும். அவன் நாமம் முன்வினைப்பயனைப் போக்கும். பாபம் விலகச் செய்யும். தூய்மைதரும். அவனை அடையத்தக்க புத்தியோகம் தரும். ददामि बुद्धियोगं तं येन मां उपयान्ति ते। அதனால் எந்தப்பொருளிலும் அவன் உள்ளிருப்பதை ஊடுறுவி நிற்பதை உணரலாம். மனம் அவனிடமே நிலைக்கும். மேலும் மேலும் தூய்மையிலும் நேர்மையிலும் பற்றற்றிருப்பதிலும் நாட்டத்தை வளர்க்கும். தானே தன்னைமேம்படுத்திக் கொள்ளச் செய்யும். தன்னைத் தாழ்ந்த நிலைக்குக் கொணர்வதைத் தவிர்க்கச் செய்யும். தானே தனக்குக் குருவாக முடியும். आत्मनो गुरुरात्मैव। बन्धुर्गुरुरहं सखे। உள்ளத்தில் அவனவனது ஆத்மா தானே என உணரச் செய்து, பெற்றோர், உற்றார் உறவினர் நண்பன் என்று பலவுமாகி உதவுபவராக பகவானை உணரச் செய்யும்.

இங்கு ஒன்று கவனத்திற்குரியது, பகவானே குருவோ ஸாதகனுக்கேற்றதைச் சிந்தித்துப்பரிவுடன் காட்டுகிற வழியில் சிந்தனையின்றி செல்லலாம். ஆனால் அவர்கள் தமக்கென ஒருவழியில் செல்வர். அவ்வழியில் ஸாதகனும் செல்வது நல்லதல்ல. பத்மபாதர் குரு கூப்பிட்டதும் கங்கை மீது நடந்து வந்தார். கங்கை அவரது காலடிப்பதிப்பைத் தாமரை கொண்டுதாங்கினாள். அது அவருக்கு மட்டுமே உரியபாதை. न चैवास्यानुकुर्वीत गतिभाषितचेष्टितम् என மனு குருவின் வழியையோ பேச்சையோ செயலையோ கண்மூடித்தனமாகப் பின்பற்றாதே என்கிறார். महाजनो येन गतः स पन्थाः। यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः। பெரியோர்கள் சென்ற வழியே நல்வழி. சிறந்தவன் எவ்வழி நடக்கிறானே மற்ற மக்கள் அதனையே பின்பற்றுவர் என்று சான்றோர்வாக்கு வில்லங்கமுள்ளது. தைத்தரீயோபநிஷத் ஆசிரியர் மூலமாக சீடனுக்கு உபதேசிக்கிறது. यान्यस्माकं सुचरितानि तानि त्वयोपास्यानि। नो इतराणि। எமது நல்ல நடைமுறைகளில் எவை எளிதில் பின்பற்றத்தக்கவையோ அவையே நீ பின்பற்றத்தக்கவை. மற்றவை அல்ல. குருவின் நடைமுறைகளில் தனக்கெனத் தான் தேர்ந்தெடுந்தவற்றையே பின்பற்றவேண்டும். அவர் வழிகாட்டியவற்றைச் சிந்தனையின்றி பின்பற்றவேண்டும். இந்த பாகுபாடு பகவானின் நடைமுறைகளிலும் உபதேசங்களிலும் உண்டு.

பக்திக்குப் புறச்சாதனங்கள் பல உண்டு. அகச்சாதனங்களைப்பற்றியே இவ்வத்தியாயம் விளக்கம் தருகிறது. விஷயத்தியாகம், ஸங்கத்தியாகம், ஸதா பகவத்பஜனம், மஹத் கிருபை, பகவத் கிருபை என்று ஐந்து ஸாதனங்கள் விளக்கப்பட்டன. வெளிப்பொருள் நாட்டத்தைக் குறைக்கும்போதே குருவிடமும் பகவானிடமும் நாட்டமும் பெருக வேண்டும். திடமானதொன்றைப் பற்றிய பிறகு தான், முன் தவறாகத் தன்னைப் பற்றியுள்ளதைத் தவிர்க்க இயலும். தவறானதொன்றைப் பற்றியுள்ளவன் தவறானதன் பற்றை

நீக்கினால் தான் நல்லதொன்றைத்திடமாகப்பற்ற முடியும். இதில் எதனை முதலில் செய்வதென்ற சர்ச்சை வீணானது. இரண்டிலும் ஒருங்கே இடையறாத முயற்சி தேவை.

பக்தியின் ஸாதனமான ஸங்கத்தியாகத்தை மறுபடி வேறுவிதமாக விளக்குகிறார்.

43. दुःसङ्गः सर्वथा त्याज्यः ।

துஸ்ஸங்க: ஸர்வதா த்யாஜ்ய: ।

दुःसङ्गः கெட்டதன் தொடர்பு सर्वथा எவ்வகையிலும் त्याज्यः விலக்கத்தக்கது.

44. कामक्रोधमोह-स्मृतिभ्रंश-बुद्धिनाश- सर्वनाशकारणत्वात् ।

காமக்ரோதமோஹ-ஸ்ம்ருதிப்ப்ரம்ச-புத்த்திநாச-ஸர்வ நாசகாரணத்வாத்.

काम -क्रोध - मोह - स्मृतिभ्रंश - बुद्धिनाश सर्वनाश कारणत्वात् (கெட்டதுடன் தொடர்பு) காமம், க்ரோதம், மோஹம், ஸ்மிருதிப்ரம்சம் புத்தி நாசம் ஸர்வநாசம் என வரிசையாக பெரும் வீழ்ச்சிக்குக் காரணமாவதால் (தவிர்க்கத்தக்கது)

மனத்தை ஈர்த்து வெளிப்பொருளை நாடச் செய்வது விஷயவாஸனை. பல்வேறு பிறவிகளிலும் இப்பிறவியிலும் உள்ளத்தில் ஆழப்பதிந்த துர்வாஸனை மறுபடி அவற்றை நாடத்தூண்டும். மனத்தில் திரும்பத் திரும்ப அப்பொருளைப் பற்றிய தொடர்ந்த சிந்தனை உருவாகி மனத்தளவில் அந்த இல்லாத பொருளிடம் பற்று ஏற்படும். அதனைப்பெற ஆசை எழும். அது நிறைவுறாவிடில் தடுத்தவரிடமோ சூழ்நிலையிடமோ கோபம் எழும். கோபம் மனத்தின் தெளிவை அகற்றிக் குழப்பம் ஏற்படுத்தும். அதனால் சிந்தனை சிதற லக்ஷ்யத்தைப்பற்றிய நினைவாற்றல் கெடும். அதனால் அறிவுமங்கி மறையும். அறிவற்ற செயல் அழிவைத்தரும். இவை அனைத்திற்கும் காரணம் விஷயப்பற்று (विषयसंगः) கீதையில் கண்ணன் இதனை விளக்குகிறார். (2.62.63)

ध्यायतो विषयान् पुंसः सङ्गस्तेषूपजायते।
सङ्गात्सञ्जायते कामः कामात्क्रोधोऽभिजायते॥
क्रोधाद्भवति संमोहः संमोहात् स्मृति विभ्रमः।
स्मृतिभ्रंशाद् बुद्धिनाशः बुद्धिनाशात्प्रणश्यति॥

நல்லது - கெட்டதைப் பற்றி, உண்மை - பொய் பற்றி முக்கியமானது முக்கிய மற்றதென்றவாறு பகுத்தறிபவனே லக்ஷ்யத்தை நோக்கி முன்னேற முடியும். துர் விஷய ஸங்கம் அதனைக் கெடுக்கும். லக்ஷ்யத்திலிருந்து நழுவிய மனம் படிகளில் வழுக்கி விழுவது போல் விரைவில் வீழ்ச்சியைக் காணும்.

45. तरंगायिता अपीमे सङ्गात्समुद्रायन्ते।
**தரங்காயிதா அபி இமே ஸங்காத் ஸமுத்ராயந்தே.**

**इमे** இந்த காமம் கோபம் முதலியவை **तरङ्गायिता अपि** சிற்றலைபோல் காணப்பட்டாலும் **सङ्गात्** ஒருங்கிணைவதால் **समुद्रायन्ते** கடலாகிவிடுகின்றன.

காமமோ கோபமோ தொடக்கத்தில் அலைகள் போல் உடன் எழுவதும் உடன் மறைவதுமாக நிலையற்றவை போலத் தோன்றும். எளிதில் அவற்றைக் கடக்கமுடியும் என்ற நம்பிக்கையும் தோன்றும். பிறகு அவை ஒருங்கிணைந்ததும் கடக்கமுடியாத கடலாகத் மாறிவிடும். கடல்தான் கரையோரத்தில் சிற்றலைகளாகக் காட்சி தருகின்றது. உள்ளே நுழைந்த பின்னரே ஆழமும் பரப்பும் பயத்தை விளைவிக்கும். கடலின் மாயைவிளையாட்டே அலைகள் என்பதை உணரும் போது கடலினுள் மூழ்கியிருப்போம். அலைகளாக மனத்தைக் கவர்ந்த கடல் தான் திமிங்கிலமும் முதலையும் நிறைந்த ஆழ்கடலாக விழுங்கும். அதனால் சிறு சிறு விஷயங்களாயினும் மனத்தைத் தவறானபாதையில் இட்டுச் சென்று பெரும் வீழ்ச்சிக்கு ஆளாக்குபவையானதால் அலைநிலையில் கூடத் தவிர்க்கத் தக்கவை.

46. कस्तरति कस्तरति मायाम् ? यः सङ्गः त्यजति,
यो महानुभावं सेवते, निर्ममो भवति।

க: தரதி க: தரதி மாயாம் ? ய: ஸங்கம் த்யஜதி, யோ மஹானுபாவம் ஸேவதே, நிர்மமோ பவதி.

**मायां कःतरति कःतरति ?** *மாயையை எவன் கடப்பான் ? எவன் கடப்பான்.* **यः सङ्गं त्यजति,** *எவன் பற்றை கைவிடுகிறானோ,* **यः महानुभावं सेवते** *எவன் பெரும் தன்மைமிக்கவனை வழிபடுகிறானோ,* **निर्ममो भवति** *தனக்கென எதனையும் வேண்டாதிருக்கிறானோ அவன்.*

**மாயை** - *அறியாமையால் மெய்ப்பொருள் பொய்ப் பொருளாகவும் பொய்ப்பொருள் மெய்ப் பொருளாகவும் காணச்செய்யும். இல்லாததை இருப்பதாகக் காட்டும். இருப்பதை இல்லாததாகக் காட்டும். மயன் மாயையால் அமைத்த அரசமாளிகையில் துர்யோதனன் நீர் நிரம்பிய இடத்தில் நீரில்லை என நினைத்து இடுப்பளவு நீரில் நனைந்து கடக்கிறான். நீரில்லாத இடத்தில் நீருள்ளதென்று நினைத்து இடுப்பளவில் கீழாடையைத் தூக்கிக்கொண்டு நடக்கிறான். பெரும்பாலானவர் வாழ்க்கையில் பல மாயைத் தோற்றங்களில் ஏமாறுவது கண் கூடு. தன்னை வெட்டவிருப்பவனின் கையில் தழையைக் கண்டும் அரிவாளைக்காணுமலும் தழையிலுள்ள ஆசையால் ஆடு பின் தொடர்கிறது. இந்த மாயையைத் தாண்டுவது எப்படி ? தொடர்ந்து பல உபாயங்களைத் தொகுத்துத் தருகிறார்.*

*1. மனத்தைக் கவர்பவை நல்லதல்லாததாயின் தவிர்த்தல். அவற்றோடு ஒட்டாதிருத்தல். அவற்றை விட்டுத் தூரவிலகுதல்.* **(संगत्यागः)**

*2. நல்லோர்களை அணுகுதல், தனக்கு மேனிலைக்கான வழிகாட்டவேண்டுதல், அவர்கள் காட்டிய வழியில் ஈடுபாடும் நம்பிக்கையும் கொண்டு செல்லுதல்* **(महानुभावसेवा).**

*3. சுயநலம் பாராட்டாதிருத்தல். தன்னைப் பற்றியும் தன்னலம் பற்றியும் சிந்தனையைச் செலுத்தாமலிருத்தல்.*
**ममतात्यागः।**

*அருகாமையும் ஆசையும் கண்களை மறைக்கும். தூரத்தில் நின்று ஆராயும் போது உண்மை நிலை தெரியும். நல்லோருடன் பழகுவதால் இந்த ஆராய்ச்சி தீவிரப்படும். சுயநலமின்றி அவர்களது வழிகாட்டலில் நடத்தலால் பற்றுகளின் பிடி தளரும். சிந்தனை தெளியும். இதுகாறும் ஏமாற்றிக் கொண்டிருந்தவற்றின் வலிவு குன்றும்.*

47. **यो विविक्तस्थानं सेवते, यो लोकबन्धं उन्मूलयति, निस्त्रैगुण्यो भवति, योगक्षेमं त्यजति।**

**யோ விவிக்தஸ்த்தானம் பஜதே,**
**யோலோகபந்த்தம் உன்மூலயதி,**
**நிஸ்த்ரைகுண்யோ பவதி, யோகக்ஷேமம்**
**த்யஜதி.**

**यः** *எவன்* **विविक्तस्थानं** *தனிமை உணரக்கூடியதாகக் தேர்ந்த இடத்தை* **सेवते** *ஏற்கிறானோ,* **यः** *எவன்* **लोकबन्धं** *உலகம் தருகிறமதிப்பால் ஏற்படுகிற கட்டை* **उन्मूलयति** *வேருடன் பிடுங்கி அகற்றுகிறானோ,* **निस्त्रैगुण्यः भवति** *ஸத்வ - ரஜஸ் - தமோகுணங்களின் பாதிப்பிலிருந்து விடுபடுகிறானோ,* **योगक्षेमं त्यजति** *பொருள் சேமிப்பையும் அதனைக் கொண்டு தன் நலம் பேணுவதையும் விடுகிறானோ அவன் மாயையைக் கடக்கிறான்.*

*4. தன் லக்ஷ்யம் சிதறாதிருக்கத் தனிமை தேவை. விவிக்தம் - எதற்காகத் தனிமையை விரும்புகிறானோ அந்த லக்ஷ்யம் நிறைவேற ஏற்றதாக அது தேர்ந்தெடுக்கப்பட்டது. மனத்தின் நோக்கம் பக்தி ஒன்றே. அந்த ஏகத்தையே முடிவில் தரக்கூடியதால் ஏகாந்தம் என்றும் கூறுவதுண்டு. மனத்தைத் தூண்டுபவற்றிலிருந்து விடுபடுவதே விவிக்தஸ்தான ஸேவையின் பயன்.*

5. உலகம் தருகிற மதிப்பைக் கொண்டு,தான் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்றவாறு சிந்தனையும் இவனது ஏகாந்தத்தைக் கெடுக்கும். தனக்கு இது ஏற்றதா என்ற அஹந்தைக்கு உலக பந்தம் இடம் தரும். உலகத்தை இவன் உதறினாலும் உலகம் இவனை உதறினாலும் இந்த அவதூதநிலை கிட்டும். வைராக்யம் இதனால் உறுதி பெறும்.

6. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மனத்தின் தூண்டுகோலாகிய குணங்கள், காலை பகல் இரவு ஸந்தி வேளை நள்ளிரவு என்ற காலத்திற்கேற்பவும் பாலியம் கௌமாரம் யௌவனம் முதலிய உடல் நிலைக்கேற்பவும் ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்ற மன நிலைக்கேற்பவும், பலவாறு சித்தம் நிலையடங்காமல் சலிக்கச்செய்பவை. இவற்றின் பாதிப்பிற்குட்பட்டவன் சில சமயம் வழிபாட்டில் அதிதீவிரமாக ஈடுபடுவான். சிலமயம் பரபரப்புடன் நிலையற்றுக் குழம்புவான். சில சமயம் சோம்பலும் அயர்வும் தூக்கமும் காரணமாக சிரத்தையை இழந்து எந்த நற்பணியிலும் ஈடுபடமாட்டான். குருவின் வழிகாட்டலின் குணப்பாதிப்பிலிருந்து விடுபடுவது பக்திக்குரிய ஸாதனம்.

7. தன் பொறுப்பைத் தானே நிர்வகிப்பதாகித் கருதி பொருள் சேமிப்பிலும் அதனைப் போகமாக மாற்றுவதிலுமே பெரும்பொழுதைப் போக்குபவனுக்குப் பகவானை வழிபட நேரம் கிட்டாது. யோக க்ஷேமப் பொறுப்பைப் பகவானிடம் ஒப்படைப்பாய். அதனைப் பகவானே ஏற்று உரியவாறு காப்பாற்றுவார் என்ற வாக்குறுதியைப் பகவான் கீதையில் தந்துள்ளார்.

**अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते।**
**तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ।।** *(9.22)*

தன்னிடம் முழுப்பொறுப்பைத் தந்தவர்களின் யோகக்ஷேமத்தைத்தானே நிர்வஹிப்பதாகப்பகவான் சொல்கிறார். தேவையானது இதுவரை கிட்டாதிருந்து முயற்சியால் கிட்டினால் யோகம். செல்வச் சேமிப்பு

முதலியவை இதில் அடங்கும். பெற்றதைக் கொண்டு வாழ்க்கை நலம் பெறுவது க்ஷேமம். இந்த யோகமும் க்ஷேமமும் எவரும் திட்டமிட்டபடி பெற்றதில்லை. பெரும்பாலும் இவற்றை நல்லதாயின் அத்ருஷ்டம் - பாக்யம் என்பர். கெட்டதாயின் விதி தைவம் துர்பாக்யம் என்பர். பக்தன் இதனை உணர்ந்து தைவம் விட்டபடி என்று யோகக்ஷேமத்தில் உதாஸீனனுக இருப்பான். அதுவும் பக்திக்கு ஸாதனம்.

48. **यः कर्मफलं त्यजति, कर्माणि संन्यस्यति, ततो निर्द्वन्द्वो भवति ।**

**ய: கர்மபலம் த்யஜதி, கர்மாணி ஸம்ந்யஸ்யதி, ததோ நிர்த்வந்த்வோ பவதி.**

**यः** எவன் **कर्मफलं त्यजति** செய்த செயலின் பயனைப்பற்றிய எதிர்பார்ப்பை விடுகிருனே, **कर्माणि संन्यस्यति** செய்கிற செயலனைத்தையும் ஈசுவரனிடம் முழுமனத்துடன் முழுமையாக அர்ப்பணம் செய்கிருனே, **ततः** அதனுல் **निर्द्वन्द्वो भवति** சுகம்துக்கம் போன்ற துவந்துவங்கள் அற்றவன் ஆகிருனே அவன் மாயையைக் கடக்கிருன்.

8. கர்மபலனை விட்டவன் மாயையைக் கடக்கிருன். எந்தச்செயலும் பயனற்றதல்ல. சில உடன்பலன் தரும். சில எப்போதோ பலன் தரும். சில நல்லதைத் தரும். சிலகெட்டதைத் தரும். சில விரும்பியதைத் தரும். சில விரும்பாததைத் தரும். எதிர்பார்த்த பலனை எதிர்பார்த்தபடி எதிர்பார்ப்பவர் பெறுவது காணுதற்கரிது. எதிர்பார்த்ததற்கு மாறுதலை பெறுவதும் எதிர்பாராதவர் பெறுவதும் உண்டு. இந்தச் செயலுக்கு இந்தப்பயன் என செயல்தொடங்கு முன்னரே திட்டமிடப் பெறுகிறது. அதற்கேற்ற செயல்முறை பின்பற்றப்பெறுகிறது. எனினும் பலன்மாறும். செயலுக்கும் எதிர்பார்ப்பிற்கும் பலனுக்குமிடையே பல தன்னிருக்கையைக் காட்டியோ மறைத்தோ வேறுபட்டபலனையோ பலனற்றதையோ தருவதும் உண்டு. "செயலில் தான் உனக்கு உரிமை. பலனில் அல்ல. பலன் உனது இன்றையச் செயல்

முறையாலும் என்றே செய்த செயலின் பின் விளைவாலும் மாறுபடக்கூடும். அதனால் இதற்காக இதனைச் செய்கிறேன் என்ற சிந்தனையை விடுவாய். செயலைச் செயலுக்காகவே நல்ல முறையில் கட்டாயம் செய்வாய். செயலற்று நிற்காதே என்று கீதையில் கண்ணன் கர்மபலத்யாகத்திற்கு வழிகாட்டுகிறார்.

कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन।
मा कर्मफलहेतुर्भूः मा ते संगोऽस्त्वकर्मणि॥ *(2.47)*
न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठति अकर्मकृत्। *(3.4)*
नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो हि अकर्मणः। *(3.8)*
तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर। *(3.19)*

செயலின் பலனில் பற்றின்றி செயல்படுவதே கர்மபலத்யாகம்.

9. பலனை எதிர்பாராமல் செயலைச் செய்யும் போது பகவானுக்காகவே செயல்படுவதும் செயலை ஈச்வரார்பணம் செய்வதும் அடுத்து நடக்கிற ஸாதனை.

मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा।
निराशीः निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः॥ *(3-30)*

ஈச்வரார்பண மஸ்து. ப்ரம்ஹார்பண மஸ்து என்று உள்ளத்தில் நற்செயல் புரியத்தூண்டுபவனிடமே செய்த செயலையும் செயலின் பின்விளைவையும் அர்பணம் செய்வது கர்மஸம்நியாஸம். அதன்பின் அந்தச் செயல் எதனை விளைவிக்கும் என்ற எதிர்பார்ப்புமில்லை (நிராசீ:) எதிர்பார்ப்பு இல்லாததால் எனக்கு இது லாபம் என்ற எண்ணம் எழாது. மமதை மறையும் (நிர்மம:). அதன்பின் குளிர்விட்டவன் போல் செய்ய வேண்டியதைச்செய் என்று அர்ஜுனனுக்குக் கண்ணன் உபதேசிக்கிறார். போரிடு. எனக்காகப் போரிடு. போரிடுவதால் நேர்கிற லாப நஷ்டம் பகவானுடையது என திடமாக நம்புவாய். அதனால் உனக்குப்பாப பயம் இல்லை. (விகதஜ்வர:) கர்மஸந்நியாஸம் தரும் பாதுகாப்பு. பகவானை நம்புகிற பயிற்சி வலிவடைகிறது. மாயை அகலுகிறது.

*10. செயலின் பின் விளைவு இன்பமோதுன்பமோ விரும்பியதோ விரும்பாததோ, எதுவாயினும் அது செயல்புரிபவனைப்பாதிக்காது மனத்தை ஈசுவரனிடம் பதிப்பாய். ''பலன் என்னைச் சாருமாயின் இன்பமோ துன்பமோ நேரலாம். பகவானிடம் இந்த துவந்துவப் பாதிப்பு நேராது. வர இயலாத இன்பதுன்பத்தைப் பற்றி எனக்குக் கவலை எதற்கு?'' என்ற நிர்த்வந்தவ நிலை சித்தத்தைத்திடமாக்கும். எளிதில் மாயையைக் கடக்கலாம்.*

**49. यो वेदानपि संन्यस्यति, केवलं अविच्छिन्नानुरागं लभते ।**

**யோ வேதாநபி ஸம்ந்யஸ்யதி, கேவலம்**
**அவிச்ச்சின்ன அனுராகம் லபதே**

**यः** எவன் **वेदान् अपि संन्यस्यति** வேதங்களையும் தொடர்பு அற்றவை எனத் துறக்கிறானோ, **केवलं अविच्छिन्नानुरागं लभते** இடையறாத தனித்த அன்புத் தொடர்பை மட்டும் பெறுகிறானோ, அவன் மாயையைக்கடக்கிறான்.

*11. கருக்குழியை அடையுமுன்னரே இவன் இவ்வாறு இந்தப்பெற்றோருக்கு மகனாக மகளாகப்பிறக்க விருப்பதை விதி தீர்மானிக்கிறது. கருக்குழியை அடையுமுன்னரே அந்தக் கருக்குழிக்கும் குழியில் ஜீவனை விதிப்பவனுக்கும் ஸம்ஸ்காரம் நடக்கிறது. கருவில் சிசுவாக வளரும்போதும் வெளிவந்த பின்னரும் வளரும் போதும் அந்தந்த நிலைக் கேற்ப வேதம் சில ஸம்ஸ்காரங்களை விதித்துள்ளது. இந்த வேதத்தால் ஏற்படுகிற பந்தம் ஒவ்வொரு ஜீவனிடமும் பலஸம்ஸ்காரங்களை விதித்து அவற்றை நிறைவேற்றும்படி கட்டுப்படுத்துகிறது. அந்தச் சடங்குகளைச் செய்வதாலும் செய்யாததாலும் விளைந்த புண்யபாபங்கள் பலபிறவிகளிலும் பின் தொடரக்கூடும். இந்த பந்தமும் விலக்கத்தக்கதே.* **त्रैगुण्यविषया वेदाः निस्त्रैगुण्यो भवार्जुन** *என வழிகூறுகிறார் கண்ணன். (2.45) ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்களால் கட்டுப்படுகிற ஜீவர்கள் விஷயத்தில் தான் வேதத்தின் விதி கட்டுப்படுத்தும். குணாதீதனிடம் அது குறுக்கிடுவதில்லை. நீ*

நிஸ்த்ரிகுணனாகிவிடுவாய் ! கர்மபலனைச் சாராதே ! கர்மாவை ஈச்வரார்பணம் செய்வாய். நான் பிராம்ஹணன் க்ஷத்ரியன் என்ற அஹங்காரத்தை விடு. பிராம்ஹணன் க்ஷத்திரியன் என்ற ஜாதிக்கேற்ற பெருமையையும் நலனையும் எதிர்பார்த்துச் செய்யவேண்டியவற்றைத் தவிர்ப்பாய். வாழ்வதற்கான நற்பணிகளையும் ஈசுவரார்பணம் செய்வாய். கர்மபந்தமெனும் பெரும் மாயையை நீ கடப்பாய்

12. பகவானிடம் வைத்தபேரன்பு அன்பின் வெளிப்பாடாகிய உயர்ந்த அனுராகமாக இடையறாது பெருகும்.

ஜ்ஞானயோகவழியில் செல்பவனும் இதேபலனைப் பெறுகிறான். केवलं अविच्छिन्नानुरागं लभते என்பது தான் பக்தி யோகத்தின் தனிச்சிறப்பு.

கீதோபதேசத்தின் இறுதியில் சுருக்கம் பின்வருமாறு - *18.51.56*

बुद्ध्या विशुद्धया युक्तो धृत्यात्मानं नियम्य च।
शब्दादीन् विषयांस्त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च॥
विविक्तसेवी लघ्वाशी यतवाक्कायमानसः।
ध्यान योगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः॥
अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम्।
विमुच्य निर्ममः शान्तः ब्रह्मभूयाय कल्पते॥
ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न कांक्षति।
समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम्॥
भक्त्या मां अभिजानाति यावान्यश्चास्मि तत्वतः।
ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम्॥
सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः।
मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम्॥
चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः।

बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव॥

''தெளிநத அறிவால் தன்னைத்திடமாகக் கட்டுப்படுத்துவாய். சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் என மனத்தை ஈர்ப்பவற்றிலிருந்து விடுபடுவாய். விருப்பு வெறுப்புகளைக் களைவாய். தனிமையை நாடு. மிதமாக உண்பாய். மனம் சொல் உடல் இவற்றைக் கட்டுப்படுத்துவாய். பகவானை எப்போதும் நினைப்பாய். பற்றற்றிருப்பாய். அகந்தை வலிவு திமிர் ஆசைகோபம் தேவைக்கதிகமாகக் கொள்ளுதல், இவற்றைத் தவிரப்பாய். மமதை நீக்கி அமைதி பெறுவாய். பிரும்ஹமாகவே ஆவாய். உள்ளம் தெளியும். எதிலும் வருத்தம் கொள்ளாதே. எதனையும் விரும்பாதே. எல்லா உயிரினமிடமும் சமமாகப் பழகுவாய். பகவானிடம் பேரன்புபெருகும். அந்தப் பேரன்பால் பகவானை முழுவதும் உணர்வாய். யார் இவர், இவரது பெருமையின் அளவு எது என்பதனைப் புரிந்து கொள்வாய். முழுவதும் உணர்ந்தபின் உன் தனித் தன்மை விலக என்னுள் இடம் பெறுவாய். என்னை அண்டி நின்று, எல்லா நற்பணிகளையும் எனக்காகச் செய்து, என் அருள்பெற்று நிலைத்த குறையற்ற நிலைபெறுவாய். உள்ளத்தால் எல்லாப்பணிகளையும் என்னிடம் ஒப்படைத்து, என்னையே சார்ந்து புத்தியை என்னிடம் இணைத்து நானே உன் உள்ளமாகச் செயல்படுவதை உணர்வாய்.''

இந்த உபதேசத்தை ஆராயும் போது ஜ்ஞான யோகமும் பக்தியோகத்தினுள் அடங்கிவிடுவதைக்காணலாம்.

### 50. स तरति, स तरति, स लोकान् तारयति

**ஸ: தரதி, ஸ: தரதி, ஸ: லோகான் தாரயதி.**

**सः तरति** அவன் மாயையைக்கடக்கிறான். ஐயமில்லை. **सः तरति** அவன் கடக்கிறான். **सः लोकान् तारयति** அவன் மற்ற உலகினரையும் மாயையைக் கடக்கச் செய்கிறான்.

தானும் மாயையைக் கடந்து, இடையூறின்றிப் பேரன்பைச் சுவைக்கிறான். தன்னுடன் கூட பகவானின் திருவடி சார்ந்தவர்களையும் மாயையைக் கடக்க உதவுகிறான்.

பக்திஸாதனம் பற்றிய மூன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

—✱—

## चतुर्थोऽध्यायः - நான்காவது அத்தியாயம்

## प्रेमनिर्वचनम् - அன்பின் விளக்கம்.

51. अनिर्वचनीयं प्रेमस्वरूपम् ।

**அநிர்வசநீயம் ப்ரேம ஸ்வரூபம்.**

**प्रेमस्वरूपं** அன்பின் சுய நிலை **अनिर्वचनीयम्** இது இவ்வாறு என ஐயம் திரிபின்றிகுறிப்பிட இயலாதது.

52. मूकास्वादनवत् ।

**மூகாஸ்வாதனவத்**

**मूकास्वादनवत्** ஊமையின் அனுபவம் போல் இதனைச் சுற்றிவளைத்து ஏதோ ஒருவகையில் உருவகப்படுத்தலாம். அன்பென்பது வெளியிலுள்ளதொன்றைச் சார்ந்துள்ளதா ? வெளியிலுள்ளதைப் பொருட்படுத்தாமல் உள்ளத்தினுள் சுனைபோல் சுரப்பதா ? இயல்பா ? செயலால் விளைவதா ? என்று பல சிந்தனைகள் ஏற்படும். விடைகாண முடியாதவை அவை. நாரதர் அன்பை உணரவழி காட்டுகிறார். அன்பிற்குச் சிறு சிறு வெளித்தோற்றங்கள் உண்டு. சிலவற்றைப் பிறர் மட்டும் உணரலாம். சிலவற்றைத் தான் மட்டும் உணரலாம். சிலவற்றை இருவரும் காணலாம். முழு நிலையை உணர இயலாது. பகவானிடமும் அவரையொத்தவரிடமும் கொள்கிற அன்பு பக்தியாகும். பரா பக்தி, கௌணபக்தி என இதனைப் பிரிப்பர். முற்றிய நிலை பராவாகும். சிறிது சிறிதாக வலிவடைந்து தளராமல் சிதறாமல் அன்புப்பாதையில் பல பயிற்சிகளால் உள்ளத்தில் அன்பிற்கு மாத்திரம் இடம் தருவது கௌண பக்தி நிலை. அன்பின் ஆரம்ப நிலையில் ருசி கண்டவன்

பராபக்தி நிலை வரும் வரை தொடர்ந்து முன்னேறுவான். இதற்குப் பல பிறவிகள் தேவைப்படலாம். இந்த பக்தி மேலும் நிலை பெறவேண்டுமென்ற ஆர்வம் வாழ்வின் இறுதியில் உறுதிபெற மறுபிறவியில் தொடக்கத்திலிருந்தே அதனைப் பயில முற்படுகிறான். பகவானை அடைந்து விட்டதான உணர்வு உறுதிபெறுகிறவரை இம் முயற்சி நீடிக்கிறது.

வழிப்பயணம் மேற்கொள்பவன், தான் கடந்த தூரத்தையும் எதிர்பார்க்கிற இடம் வரை கடக்கவேண்டிய தூரத்தையும் கணக்கிட்டுக் கொண்டேயிருப்பான். அடைய வேண்டியதன் முன் எல்லையை அடைந்ததுமே பெருநிம்மதி கொள்வான். பக்திப்பாதையில் செல்பவனும் அவ்வாறே கடந்ததையும் கடக்க விருப்பதையும் கணக்கிடுவான். ஆனால் அன்பின் எல்லை அவ்வாறு கணக்கிட முடியாத விரிவு கொண்டது. அது அது நடுவே ஒரு நிலை என்று தோன்றினாலும் அதுவும் நினைவில் மறுபரி சீலனைக்கு வராதது.

ஊமை ஒருவன் கனவு கண்டான். அதனைப்பிறரிடம் தெரிவிக்க விரும்புகிறான். எண்ணத்தைச் சொல்லால் விளக்க வாய்ப்பில்லாத ஊமை. சொல்ல நினைத்ததும் கனவு. கனவின் முழுநிலையையும் கனவு கண்டவனால் கூட நினைவு கூர்ந்து வரிசைப்படுத்திக் கொள்ளமுடியாதது. சொல்லால் அதனை விளக்க முயல்வதே இனம் தரம் காண இயலாததை நினைவில் வரிசைப்படுத்தி உருவகப்படுத்துவதற்காகத் தான். அவ்வாறு உருவாக்கிய உண்மை உணர்வைத் தான் விளக்கமுடியும்.

நாரதர் ஊமை உணர்ந்த அவனது நாக்கின் ருசியை பக்தியுணர்விற்கு உதாரணமாகக் காட்டுகிறார். ஊமை இனியபழத்தைச்சுவைக்கிறான். நாக்கு அதைச் சப்புக் கொட்டி மீண்டும் மீண்டும் தீண்டிச் சுகம் பெறுகிறது. இனிய சுவை சுவையாகி சுவை இன்பமாகி இன்பம் பெறவேண்டியதைப் பெற்றோம் என்ற நிம்மதியாகிறது. இந்த அற்புத உணர்வைப் பிறருடன் பகிர்ந்து கொள்ள அவனுக்கு நாவின் சொல்லாற்றலின்மை தடையாகிறது. பக்தியுணர்வும் அத்தகையதே. முதலில் அதனைச் சொல்லால் விளக்க முடியும் என்ற எண்ணம் வருகிறது. சொல்லச் சொல்ல அதன் எல்லை

விரிகிறது. ஒரு நிலையில் அது சொல்லால் விளக்க இயலாதது. ஊமை பழத்தை விரும்பிச் சாப்பிடுவதையும் ''சாப்பிடுவது சுவை மிக்கதொன்று. மீண்டும் வேண்டும். மிகவும் இனிக்கிறது. இன்பமாயுள்ளது. போதும். இதுவே நிம்மதி'' என்றவாறு முகமலர்ச்சியையும் கண்களில் தளும்புகிற நிறைவின் அடையாளமான கண்ணீர் முதலானதையும் கண்டு, கூட இருப்பவன் ஊமையின் சுவை இன்பத்தைச் சொல்லால் விளக்காமலே புரிந்து கொள்வான். உணர்பவனுல் சொல்லமுடியாவிடினும் அவனிடம் ஏற்படுகிற பல்வேறு இனிய மாற்றங்களைக் கொண்டு கூட இருப்பவன் புரிந்து கொள்வான்.

சொல்லால் விளக்கமுடியாததை இப்படி வெளிப்பாட்டைக் கொண்டு ஊகிக்கலாம். அதனுல் பக்தியின் தொடக்கத்திலிருந்து அதன் முதிர்ச்சி நிலையான பராபக்தி வரை சில குறிப்பிட்ட வெளித் தோற்றங்களிலிருந்து பக்தனும் பிறரும் கண்டறியலாம். உணர்வுகளை பண்பட்ட பகுத்தறிவால் உணரமுடியும். தான் நல்லவனு கெட்டவனு என்பதைக் கூட அவன் அவன் உள்ளத்தால் உணர்ந்தறிய முடியும். சொல்லால் முழு நிலையையும் விளக்கமுடியாது. நல்லவனின் தன்மை ஓர் எல்லைக்கு உட்பட்ட காட்சிப்பொருளல்ல. பிறரிடம் சுட்டிக்காட்டி நிரூபிக்க முடிவதுமல்ல. பக்தியுணர்வும் நிரூபிக்க இயலாததே (அநிர்வசநீயம்) நிர்வசனத்திற்கென அத்தியாயத்தைத் தொடங்கியவர் நிர்வசனத்திற்கு ஏற்றதல்ல என்றே முதலில் குறிப்பிடுகிறுர். ஊமையின் உணர்வு ஊமைக்கு மட்டுமே புலப்படும். புலனுவதால் உண்மையான உணர்வு. உணர்வதனைத்தையும் சொல்லால் விளக்க முடியும் என்பதுமில்லை. சொல்லாமலே உணர்வை அவன் வெளிப்படுத்துகிற பாங்கால் பிறரும் உணரமுடியும். அதனைச் சுட்டிக்காட்டுகிறுர்.

53. प्रकाश्यते क्वापि पात्रे।

**ப்ரகாச்யதே க்வாபி பாத்ரே.**

**क्वापि पात्रे** எங்கோ அதனை வெளிப்படுத்துகிற ஒருவனிடம் **प्रकाश्यते** விளக்கம் பெறுகிறது.

அகத்தின் அழகு முகத்தில் தெரியும். அகம் என்னுடையதாயினும் அதனை நான் உணர்ந்தவனில்லை. அதன் அழகைக்காண முகம் எனும் கண்ணுடி வெளியே உள்ளது. என் முகத்தைப் பிறர் எளிதில் காணலாம். ஆனால் கண்ணுடியின் உதவி கொண்டே காண முடிகிற எனது அன்பை நான் காண அதனைப் பிறரிடம் காட்டவேண்டும். பிறரிடம் அது பிரதிபலிப்பதைக் கொண்டு தான் நான் அதன் நிலையை - போலியா ? நிஜமா ? என்றெல்லாம் காண முடியும். அன்பின் உருவைத் தெளிவாகக்காணக் கண்ணுடியும் தெளிவுள்ளதாக இருக்கவேண்டும். அது தான் பாத்திரம் - (கொண்டு அதைக் காப்பது) வெளியே காட்டுகிற தோற்றத்தைச் கொண்டுதான் அன்பின் நிலையை உணரமுடியும். அப்படி அது உணரக் கூடியதே. வெளிப்படக்கூடியதே (पात्रे प्रकाश्यते). எல்லா இடங்களிலுமல்ல, குறிப்பிட்ட சில இடங்களில் மட்டும் தான் (क्वापि पात्रे). நாரதர் தத்துவ ஆராய்ச்சியில் தேர்ந்த ஜ்ஞானியானதால் பக்தியின் பலநிலைகளை இனம் காணச் செய்கிறுர். ஜ்ஞானியின் சொல்வன்மைக்கும் இது அப்பாற்பட்டது (வாசாம் அசோசரம்). ஜ்ஞானியானதால் ஊமையின் கனவல்ல இது. ஊமையின் உண்மை அனுபவம் (மூக - ஆஸ்வாதனம்) சுவைத்துச் சுவைத்துக் கண்ட அனுபவம். ஊமை வாயால் தான் விளக்க இயலாதவன். உணர்வை வெளிப்படுத்த மற்றும் பலவழிகள் உண்டல்லவா ? அப்படி அவனும் இதனை வெளிப்படுத்துவான். அவ்வுணர்வு எத்தகையது ?

**54. गुणरहितं, कामनारहितं, प्रतिक्षणवर्धमानं,**
**अविच्छिन्नं सूक्ष्मतमं अनुभवरूपम्।**

**குணரஹிதம், காமநா ரஹிதம், ப்ரதிக்ஷண வர்த்தமாநம், அவிச்ச்சின்னம், அனுபவரூபம் ।**

**गुणरहितं** - குணச் சிறப்பற்றது. **कामनारहितं** - சுயநலத் விருப்பமற்றது. **प्रतिक्षणवर्धमानं** ஒவ்வொரு நொடியிலும்

வளர்ந்து கொண்டேயிருப்பது, **अविच्छिन्नं** இடையறாதது. **सूक्ष्मतमम्** புலன்முதலியதால் உணர இயலாத மிகமிகஸூக்ஷ்ம நிலையிலுள்ளது. **अनुभवरूपं** அனுபவவடிவானது.

மனமும் புத்தியும் சித்தமும் அஹங்காரமும் பொது உணர்வு பற்றிப்பழகாதவை. பல ருசிகள் மணங்கள் நிறங்கள் என வேறு வேறாகப்பார்ப்பதிலும் தரப்படுத்துவதிலும் ஈடுபடுவதே அவற்றின் இயல்பு. செயலில் ஈடுபடுவதிலும் பல சிறப்புகளும் தகுதிகளும் தேர்வு நிலைகளும் உண்டு. ஒரு குறிப்பீடுமற்ற ஆகாயத்தை நாம் அறிவதில்லை. சூரியனின் ஒளியால் பிரகாசிப்பது, மேகங்களால் சித்திரிக்கப் படுவது, நீலமாகக் காண்பது என ஆகாயத்தைக் காணாமல், ஆகாயத்தில் தோன்றுபவற்றைக்கொண்டு ஆகாயத்தின் இருப்பை ஊஹிக்கிறோம்.

வெயிலை அதன் ஒளியை நாம் காண்பதில்லை. ஒளியால் புலப்படுவதைக் கொண்டு வெயிலின் ஒளி இயல்பை உணர்கிறோம் நம் உடலைச் சுடுவதால் அதன் சூட்டியல்பை உணர்கிறோம். இது ஒளி, இது சூடு எனச் சுட்டிக்காட்ட முடியாது. அன்பும் அத்தகைய இயல்பே. அன்பால் சீராட்டுவதையும் பாராட்டுவதையும் கொண்டு அன்பை ஊகிக்கிறோம். அதற்கெனத் தனிச் சிறப்பில்லை. அது உடலிலும் சொல்லிலும் எண்ணத்திலும் வெளிப்படுவதைக் கொண்டு குணச் சிறப்புள்ளதாகக் காட்டுகிறோம். உணர்வின் வடிகாலைக் கண்டு உணர்வை ஊகிக்கிறோம். வடிகால்கள் எண்ணற்றவை. ஆனால் மூலப்பொருள் **குணரஹிதம்** - சிறப்பாகச் சொல்லும்படி எதனையும் கொண்டதல்ல. பக்தனிடமும் சிறப்பின் வகை கூற முடியாது. அன்புணர்வு பல்வேறு உணர்வுகளாக நேரம் இடம் வெளிப்படுமிடம் இவற்றிற்கேற்ப வடிவெடுக்கிறது.

ஏதேனும் ஒரு விருப்பத்தால் அன்பு உண்டாவதல்ல. ஒரு விருப்பத்தைத் தூண்டுவதல்ல. அது விருப்பம் நிறைவேறுவதால் நேர்கிற இன்ப உணர்ச்சியுமல்ல. அது

அதற்காகவே இருக்கிறது. நாட்டமின்மையால் மமதை அஹந்தை அற்ற நிலையில் குழப்பமில்லை. **(காமநா ரஹிதம்).**

அன்புப் பெருக்கைத் தடை செய்யக் கூடிய அகந்தை முதலியன குறுக்கிடாததால் அது இடையருமல், தடையுருமல் வளர்ந்து கொண்டே இருக்கும். (**பிரதிக்ஷணவர்த்தமாநம்**)

பக்தன் பகவானைத் தவிர வேறெதனையும் பற்றிச் சிந்திப்பதில்லை, பேசுவதில்லை. வேறு செயலில் ஈடுபடுவதில்லை. வேறு உணர்ச்சிகள் எழாததால் மனம் சாந்தமாக உள்ளது. செய்யத்தகாததெதுவும் இல்லாததால் புத்தியின் விவேகமும் விசாரமும் அமைதியுடன் உள்ளன. சித்தத்தில் பழைய வாஸனையோ ஸம்ஸ்காரமோ எழுவதில்லை. துர்வாஸனைகள் எழவில்லை. ஸத்வாஸனை அன்புக்கு ஆதாரமாகிவிட்டது. அகந்தை மமதை குறுக்கிடவில்லை. அதனுல் பக்தியென்ற ஆழ்மனத்தின் அன்புணர்வு இடையருது தொடர்ந்து இன்பம் தருகிறது. (**அவிச்சின்னம்**)

அனுபவ நிலையிலுள்ளதால் காட்சிக்குவராத மிகமிக ஸூக்ஷ்மமானது. (**ஸூக்ஷ்மதமம் அனுபவரூபம்**)

55. **तत्प्राप्य तदेवावलोकयति, तदेव शृणोति, (तदेव भाषयति,) तदेव चिन्तयति।**

**தத்ப்ராப்ய, தத்ஏவ அவலோகயதி, தத் ஏவ ச்ருணோதி, (தத்ஏவபாஷயதி) தத் ஏவ சிந்தயதி ।**

**तत् प्राप्य** அந்த பக்தி நிலையடைந்தவன். **तत् एव अवलोकयति** அதனையே எங்கும் காண்கிருன். **तत् एव शृणोति** அதனையே கேட்கிருன். (**तत् एव भाषयति** அதனையே பேசுகிருன்) **तत् एव चिन्तयति** அதைப்பற்றியே சிந்திக்கிருன்.

பக்தி உள்ளத்துணர்வின் அடித்தளமாக அமைந்தால் அவனது நோக்கமும் புலனும் சிந்தனையும் அந்த அன்பின் நிலைபற்றியதாகவும் அன்பால் உணர்ந்தவரைப் பற்றியதாகவும்

இருக்கும். வேறொன்றும் கண்களில் படாது. வேறொன்றும் காதுகளில் விழாது. மனம் அதனையே சார்ந்திருக்கும். பேச்சு அதனைச்சுற்றியே எழும். ''तन्मनस्काः तदालापास्तद्विचेष्टास्तदात्मिकाः । तद्गुणानेव गायन्त्यो नात्मागाराणि सस्मरुः । என்று கிருஷ்ணனை உடலளவில் பிரிந்திருந்தும் உள்ளத்தளவில் கணநேரமும் பிரிந்திராமல் பேச்சும் செயலும் எண்ணமும் கிருஷ்ணனையே சார்ந்திருக்க, துன்பம் தரும் நிலையிலும் துன்பத்திற்கு அவனே காரணம் என்று கருதாமல் அவனையே புகழ்ந்து பாடினர். பிறவியிலிருந்து தொடர்ந்த 'தான்' 'தனது' என்ற உணர்வுகள் அவர்களது நினைவில் கூட இல்லை. கிருஷ்ணனின் ஸ்மரணமே வேள்வியும் ஜ்ஞானயோகமுமாயின. அவனை எங்கும் கண்டனர். அவனோடு அளவளாவுவதே தான் கோபிகா கீதம்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் தனது கீதாபாஷ்யத்தில் भक्त्या मामभिजानाति यावान् यश्चास्मि तत्त्वतः । ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम् என்ற சுலோகத்தின் உரையில் ஜ்ஞானயோகத்தால் பெறுகிற நிஷ்ட்டை (கடை நிலை) பற்றி விளக்குகிறார் तेन ज्ञाननिष्ठा आर्तादिभक्तित्रयापेक्षया परा चतुर्थी भक्तिरित्युक्ता । तया परया भक्त्या भगवन्तं तत्त्वतः अभिजानाति । यदनन्तरमेव ईश्वर-क्षेत्रज्ञ भेद बुद्धिः अशेषतो निवर्तते । अतो ज्ञाननिष्ठालक्षणया भक्त्या मां अभिजानाति इति वचनं न विरुध्यते । பகவானை அணுகுபவர் நால்வர் - கடும் துயருற்றவன். (आर्तः) பகவத்தத்துவத்தைப் புரிந்து கொள்ள விரும்புபவன் (जिज्ञासुः) நாடிய பொருளைப் பெறவிழைந்தவன், (अर्थार्थी) ஜ்ஞானி (ज्ञानी) என நால்வரும் பகவானைப் புரிந்து கொண்டவரே. ஜ்ஞானி சிறந்தவர். ஜ்ஞானியின் ஜ்ஞான நிலை தான் பெருநிலை. அதுவே பரபக்தி நிலை. பரபக்தி நிலையில்தான் பகவானை தத்துவரீதியில் புரிந்து கொள்கிறான். ஈச்வரன் க்ஷேத்ரஜ்ஞன் என்றவாறு வேறு வேறு நிலைகளுள்ளவர் என்று வேற்றுமை உணர்வு மறைகிறது.

ஜ்ஞான நிஷ்டை என்ற பரபக்திநிலையால் தன்னைப் புரிந்து கொள்வதாகப் பகவான் கூறியது சரியே என்கிறார். அவரிடம் தான் கண்ட பேத நிலை மட்டும் அகலவில்லை. அதற்கும் மேல் அன்புக்குரியவர், அன்பு வைப்பவர், அன்பு என்ற திரிபுடியும் அகன்ற நிலை இது என நாரதர் கருதுகிறார்.

**यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति।**
**तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति॥**

என்ற கண்ணனின் கருத்தும் (கீதை 6.30) இத்துடன் ஒத்திருக்கிறது. ''எவன் எங்கும் என்னைக் காண்கிறானோ, எங்குமுள்ளதனைத்தையும் என்னிடம் காண்கிறானோ, அவனுக்கு நான் மறைந்த பொருளல்ல. எனக்கும் அவன் மறைபொருளல்ல.''

56. **गौणी त्रिधा, गुणभेदात् आर्तादिभेदाद्वा।**
கௌணீ த்ரிதா, குணபேதாத் ஆர்தாதிபேதாத்வா

**गौणी** குணபக்தி **त्रिधा** மூன்றுவிதம். **गुणभेदात्** பக்தனின் மனநிலை ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணத்தை ஒட்டி அமைவதால் **आर्तादिभेदाद्वा** அல்லது ஆர்தன் முதலிய வேறுபாடுகளால்.

பரபக்தி நிலையை அடைய ஸாதனமான கௌண பக்தியில் 'தான்' என்ற உணர்வு முன் நிற்கிறது. உடலிலும் மனத்திலும் 'தான்' என்ற அபிமானம் கொண்டு, தான் பக்தனாக விரும்பி, அந்த விருப்பம் காமம் ராகம் ஸ்ப்ருஹா த்ருஷ்ணா என்று விருப்பமாகலாம். தன்னையும் பிறரையும் வருத்திக்கொண்டு பிறருக்குக்குந்தகமோ அழிவோ ஏற்படுத்தவும் முனைகிற பக்தி தாமஸ பக்தி. முறையற்ற வழிகளிலும் இது செல்லும். ராவணன் முதலியவரின் பகவத்ஸேவை இத்தகையது. பெரும்பயனை எதிர்நோக்கியோ தற்பெருமை கொள்ளவோ பக்தியைப் பயன்படுத்துவது மனம் ரஜோகுணத்தின் அடிமையாயிருப்பதன் அடையாளம். எதனையும் பயனாக எதிர்பாராமல் பகவத்ஸேவையை மட்டும்

நோக்கமாகக் கொண்டு முறைப்படி வழிபாடு முதலியவற்றில் ஈடுபடுவது ஸாத்விகபக்தியாகும். மூன்றிலும் பகவானிடம் பக்தி அடித்தளமாக அமைந்தாலும் அதில் மனம் புகுந்து தன் நிழலால் பக்தியுணர்வை மறைக்கும் போது செயலும் விளைவும் மாறுபடும். எனினும் உட்சாதனமாக அமைந்த பக்தி ஆழம் காண, தமஸ் ரஜஸ் என்ற இரு விருத்திகளும் வலிவுகுன்றி ஸத்வத்திற்கு உதவுபவையாக மாறுகிற வாய்ப்பு உண்டு. இது அன்பை வெளிப்படுத்துகிற மனத்தின் மாறுபட்ட நிலைகளின் விளைவாகும்.

பக்தி ஒரு குறிப்பட்ட எதிர்பார்ப்பின் நிறைவிற்காகவும் அமையும். கடும் துன்புற்றவன் (ஆர்தன்) துயர் நீக்கப்பெற நன்றியுடன் வழிபடுகிறான். அன்பைவிட துயர் நீக்கம் முன்நிற்கிறது. துயர் நீக்கும் ஆற்றல் பெற்ற பகவானை வழிபடத் தொடங்கியவன் 'பகவான் அத்தகையவன், என் துயரை நீக்க அவன் என்னைத் தன் மக்களில் ஒருவனாகக் கொள்கிறான். அவன் உலகின் தந்தையும் தாயும் நண்பனும் ஆசிரியனும் ஆகிறான்' என்றவாறு பகவானை அறிவால் காண முயன்று நிறைவு பெறுகிறான். இவன் 'ஜிஜ்ஞாஸு'. துயர் நீக்கம் என்ற எதிர் மறையின்பத்தைவிட வாழ்வதற்கு உதவுவதனைத்தையும் அவனிடமே பெறலாமே ? பலரை அண்டாமல் தன் மக்களில் ஒருவன் என்று தன்னிடம் அன்பு வைத்தவனிடம் எல்லாவற்றையும் கேட்டுப்பெறுவது எளிதல்லவா ? இவ்வாறு எதற்கும் எல்லாவற்றிற்கும் இறைவனையே நாடலாம் என்ற திட நம்பிக்கை கொண்டு அவனை நாடுபவன் மூன்றாமவனான 'அர்த்தார்த்தீ'. பகவானிடம் பயனை எதிர்பார்க்கிற பக்தி முறைகள் இவைமூன்றும். தன்னைக்காப்பான் என்ற நம்பிக்கையாக அதுமாறி அவனிடம் சரண்புகுவதாகிய 'தான்' 'தனது' நிலையிழப்பை ஏற்றதும் பக்தியின் தூய்மை அதிகமாகிறது.

விரும்பாததைப் பெறுவதும் விரும்பியதைப் பெறாததும் துயராகி நின்ற நிலைமாறி பிறப்பும் இறப்புமே துயரம் தான் என்று எண்ணம் தோன்றி பிறப்பற்ற நிலைக்காக ஏங்கிப் பகவானை வழிபடுவதும் ஆர்த்த பக்தியின் மேனிலை.

பிறவி நீக்கம் அருள்கிற பகவான் எண்ணற்ற சிறப்புகள் கொண்டவன், எல்லாமறிந்தவன், எல்லாம் வல்லவன், எங்கும் நீக்கமற நிறைந்தவன், தூணிலும் துரும்பிலும் நிலைவேறுபாடின்றி நிற்பவன், அன்பே உருவானவன், பக்திக்கு வசப்படுபவன் என்றெல்லாம் உணர்ந்து மேலும் எல்லையற்ற அவனது மேனிலையை உணர்வது வாழ்வின் பரம லக்ஷ்யம் என்று கொள்கிற ஜிஜ்ஞாஸு பக்தி மேலானது. இம்மையிலும் மறுமையிலும் பெறத்தக்கதெல்லாம் நிலையற்றதென உணர்ந்து பகவானிடம் அன்பால் இணைவதென்ற மேனிலை வேண்டித் தனித்துப்பெற முடியாததென்ற அறிந்தும் அதனையே குறிக்கோளாகக் கொண்டு அதனை வாழ்வின் ஒரே நோக்கம் (அர்த்தம்) என்பதால் அதனை அடைய விரும்புகிற அர்த்தார்த்தியின் பக்தியும் பராபக்திக்கு இட்டுச் செல்கிற ஸாதனமே.

தன் துயரென எதனையும் காணுமல் உலகின் துயரையே தன் துயரெனக் கொண்டு அதனைப் பகவானின் அருளால் நீக்கமுயல்பவன் ஆர்த பக்தனின் சிறந்த உதாரணம். பிரஹ்லாதன் கருவில் உள்ளபோதே நாரதரிடம் உபதேசம் பெற்றதால் பெருமளவு பகவானின் நிலை பற்றி உணர்கிறுன். கருவை விட்டு வெளியேறியவனின் பால நிலையில் அருகில் உள்ள அஸுரச்சிறுவர்கள் அஸுரமனப்பான்மையைப் பெறவே பழக்கப் பெறுகிறுர்கள். பிரஹ்லாதன் அச்சிறுவர்களைத் தனியே அழைத்துத் தன் அனுபவங்களை அவர்களுக்குப்புரியும்படி உணர்த்தி, பகவானின் பெருமையை அவர்களையும் உணரச் செய்கிறுன். தான் அறிந்த உண்மையைவலிய முன் வந்து பிறருக்குக் கூறி அதனை முழுவதும் அவர்கள் உணர அறிவைத்தூண்டி வேறொன்றை நாடாமல் அதனையே சிந்திக்கச் செய்கிறுன். இது ஜிஜ்ஞாஸுபக்தியின் மேனிலை. (பாகவதம் 7.6) ரந்திதேவர் என்பவர் பேரரசன். துர்பிக்ஷம்நேர்ந்து உணவே கிட்டாமல் மக்கள் வாடினர். தனக்கும் தன் குடும்பத்திற்கும் ஒருவேளைக்குப்போதுமான உணவே தன்னிடம் உள்ளதை உணர்ந்த பின்னரும், பெறுபவர் தரம் பாராமல் தன்னிடம் உள்ளதனைத்தையும் பகிர்ந்தளித்தார். அவரும் பகவானிடம் வேண்டினுர். மக்கள் அனைவரின் பசித்துன்பமும் ஒருங்கே தன்னை

வந்தடையட்டும். மக்கள் துயரற்று இனிதுவாழட்டும் என்பதே அவரது வேண்டுகோள். இந்த பக்குவம் பெற்ற அர்த்தார்த்தி பக்தியே ஜிஜ்ஞாஸுநிலைகடந்த உயர்ந்த ஆர்தபக்தியாகி ஸாதன நிலையில் மிகச்சிறந்த நிலை

57. उत्तरस्मात् उत्तरस्मात् पूर्वपूर्वा श्रेयाय भवति ।

**உத்தரஸ்மாத் உத்தரஸ்மாத் பூர்வபூர்வா ச்ரேயாய பவதி.**

**उत्तरस्मात् उत्तरस्मात्** பின் கூறியதைவிட **पूर्वपूर्वा** முன்னதாகக் கூறப்பட்டது **श्रेयाय** மேனிலைக்கு உதவுவதாக **भवति** ஆகிறது.

ஸாத்விகபக்தி ராஜஸபக்தி தாமஸ பக்தி என்ருெருவரிசை, ஆர்த்தபக்தி, ஜிஜ்ஞாஸுபக்தி, அர்த்தார்த்தி பக்தி என்ருெரு வரிசை ஸாதன (கௌண) பக்தி நிலைகளாக முன் ஸூத்திரத்தில் விளக்கப் பெற்றது. குணாதீதபக்தி, ஜ்ஞானிபக்தி என்பவை இவ்விரண்டு பக்திவரிசைகளாலும் அடையத்தக்க குறிக்கோள். இவ்வரிசைகளில் தாமஸ பக்தியைவிட ராஜஸ பக்தியும் ராஜஸ பக்தியைவிட ஸாத்விகபக்தியும் பரபக்தி நிலைக்குமுன் நிலையான்தால் மேனிலை யாகின்றது. அவ்வாறே அர்த்தார்த்தியைவிட ஜிஜ்ஞாஸுவும் ஜிஜ்ஞாஸுவைவிட ஆர்தனும் பக்தி நிலையில் உயர்ந்தவர்.

அர்த்தார்த்தீ பகவானின் அருள்துணை கொண்டு வெளிப்பொருளை நாடுபவன். ஜிஜ்ஞாஸு வெளிப்பொருளை மறந்து உட்பொருளை நாடுபவன். ஆர்தனே பகவானுக்கும் தனக்கும் உள்ள அன்புணர்வால் எதனையும் பகவானிடம் ஒப்படைப்பவன். ஆனுல் இந்த ஏற்றத்தாழ்வை வெளிப்பொருளாராய்ச்சியில் ஆற்றல் பெற்றவனுல் உணரமுடியாது. பக்தன் ஒருவனே தன்முன் நிலைக்கும் தற்போதைய நிலைக்கும் வெவ்வேறு நிலைகளுக்கும் இடையே உள்ள வேற்றுமையும் தராதரத்தையும் உணரமுடியும். கீதையில் ஆர்தன் ஜிஜ்ஞாஸு அர்த்தார்த்தீ ஜ்ஞானீ என்றுவரிசைப்படுத்தப்பட்டுள்ளது. அவர்களில் ஜ்ஞானியே

சிறந்தவர். (7.17) மற்ற மூவரில் சிறந்தவர் தாழ்ந்தவர் என்ற தரக்குறிப்பு அங்கில்லை. இந்நிலையில் இதனை மூன்றுவகையில் விளக்கலாம். 1. ஜ்ஞானியைத் தவிர மற்ற மூவரும் தரக்கட்டுப்பாட்டினுட்படாதவர். 2. பகவான் ஞானியை மிகச் சிறந்தவர் எனக் குறிப்பிட்டுள்ளதால் ஆர்தனைவிட ஜிஜ்ஞாஸுவும், ஜிஜ்ஞாஸுவைவிட அர்த்தார்த்தியும் சிறந்தவர் எனக்கொள்வது தான் உசிதம். ஆர்தன் துயரைமட்டும் நீக்கியதும் நிறைவடைந்து பகவானை மேலும் நாடாதிருக்கலாம். ஜிஜ்ஞாஸுவோ தத்துவ ஆராய்ச்சிக்காகப் பகவானை நாடுகிறான். பகவானிடம் அன்போ அவனது பெருமையோ அவனுக்கு முக்கியமல்ல. அர்த்தார்த்தியோ பகவானை உணர்ந்து அவனிடமிருந்தே எல்லாம் பெறவிரும்புவதால் பகவானின் அருகாமை அவனுக்கு அதிகம். அதனால் தான் பகவான் இவ்வாறு வரிசை அமைத்திருக்கிறார். தர்ம - அர்த்த - காம மோக்ஷங்கள் என்ற நான்கில் மோக்ஷத்தின் அருகாமையால் காமமே முக்கிய புருஷார்த்தம் என்பர் சிலர். முதலில் தர்மத்தைக் கூறியிருப்பதால் தர்மமே முக்கிய புருஷார்த்தம் எனச் சிலர். தர்மத்திற்கு விரோதமில்லாத காமமே என் விபூதி நிலை எனக் கீதையில் கூறுகிறார். धर्माविरुद्धः भूतेषु कामोऽस्मि (7.11) தர்மம் காமத்தைப் பெறுவதற்கான அறநெறி. அர்த்தம் காமத்தைப் பெறுவதற்கான வாய்ப்பு என்ற விளக்கம் போல், எது நோக்கத்தில் முக்கியமானது ? இந்த ஸூத்திரத்தில் அந்த சிந்தனைக்கு இடம் தராமல் ஆர்தனின் பக்தி முக்கியபக்தியின் அருகிலுள்ள ஸாதனம் என்பது நிர்ணயிக்கப்பெற்றுள்ளது. துன்பம் எதனால் ஏற்படுகிறது என்ற (ஜிஜ்ஞாஸு நிலையைவிடவும்) அதற்கு எது ஸாதனமோ அதனைப்பெற்று சுயமுயற்சியால் அதனை நீக்க முற்படுகிற அர்த்தார்த்திநிலையைவிடவும் நான் துயருற்றுள்ளேன். துயர் நீக்குவது அன்புள்ளம் படைத்த உமது பொறுப்பென்று சரணடைகிற ஆர்த்த நிலை உயர்ந்ததென நாரதர் கருதுகிறார் போலும்.

58. अन्यस्मात् सौलभ्यं भक्तौ ।

**அந்யஸ்மாத் ஸௌலப்யம் பக்தௌ**

भक्तौ பக்தியில் अन्यस्मात् மற்ற உபாயங்களைக் காட்டிலும் सौलभ्यं கிடைப்பது எளிதாயுள்ளது.

அன்பின் நிலைபற்றி ஆராய்வதும் தராதரம் நிர்ணயிப்பதும் எளிதல்ல. ஆனால் அன்பு கொள்வது எளிது. பல பிறவிகளிலும் பிறந்தது முதல் மறைவு வரை பலரிடம் அன்பு கொள்வதும் பலரிடமிருந்து அன்பைப் பெறுவதும் தொடர்வதால், இப்பிறவியிலும் அது அனுபவத்தில் கைகண்டது. பல பிறவிகளிலும் சிறிதளவாவது பகவானிடம் அன்பு பூண்டதால் தான் இப்பிறவி மனிதப்பிறவியாகக் கிட்டியது. இப்போதும் அதனைப்பழகுவதோ இயல்பாக்கிக் கொள்வதோ மேன்மேலும் பக்குவப்படுத்திக் கொள்வதோ எளிதே.

59. प्रमाणान्तरस्य अनपेक्षत्वात् स्वयं प्रमाणत्वात् च ।

**ப்ரமாணாந்தரஸ்ய அநபேக்ஷத்வாத், ஸ்வயம் ப்ரமாணத்வாத் ச**

प्रमाणान्तरस्य வேறு ஒரு பிரமாணத்தின் अनपेक्षत्वात् எதிர்பார்ப்பு இன்மையாலும், स्वयं தானே प्रमाणत्वात् பிரமாணமாவதாலும் எளிது.

பக்தி தவிர மற்றவழிகளில் வேதமும் ஸ்மிருதியும் மற்றவையும் பிரமாணநூலானவை. அவற்றை யொட்டியே நடைமுறை அமைவது இன்றியமையாதது. இங்கோ ஆழ்மனத்தின் உணர்வே ஸாதனமும் ஸாத்தியமுமாகும். பசிதாகம் அறிவு மற்றும் பல உணர்வுகள் போல் இதற்குச் சான்றாக வேறு பிரமாணத்தை எதிர் பார்க்காதது. தான் பெற்ற-பெறுகிற அனுபவத்திற்கு அந்த அனுபவம் மட்டுமே சான்று. புதிதான ஒன்றைச் சீர்தூக்கி ஒப்பிட்டுப் பார்ப்பது அவசியம். இது புதிதுமல்ல, வெளியிலேயிருந்து வருவதல்ல. மற்றதைச் சீர்தூக்கி ஒப்பிட இது தான் பிரமாணமாகிறது. நல்லதா கெட்டதா விருப்பத்திற்குரியதா அல்லதா என்ற எல்லா ஒப்பீட்டிற்கும் அன்புள்ளம் ஒன்றே சான்றிதழ் தரும்.

60. शान्ति रूपात् परमानन्दरूपात् च।

**சாந்திரூபாத், பரமாநந்த ரூபாத் ச ।**

**शान्तिरूपात्** அமைதியின் உருவமானதாலும், **परमानन्दरूपात्** பரமானந்த வடிவானதாலும் எளிது.

பக்தி அன்புப்பெருக்காக அமைதி அளிப்பதாகப் பரமானந்தமாக மிக மிக இனியதாக உள்ளது. அதனைப் பற்றி மேலுமறிய அவாவே ஏற்படவில்லை. அவா ஏற்பட்டபின் சீர்தூக்கிப்பார்க்கவும் ஒப்பிடவும் சான்று தேவை. மற்றவற்றை அடைந்த பின்னரே சாந்தியும் ஆனந்தமும் கிட்டும். அன்புடன் ஒன்ருக இணைந்து சாந்தியும் ஆனந்தமும் இயல்பாகவே உள்ளன. பகவானிடம் ஒரு குறும்பு உண்டு. கேட்டால் தருவான். நீதான் காப்பாற்ற வேண்டுமென்று வேண்டிஞல் காப்பாற்றுவான் என்பர். **सर्वज्ञोऽपि, इह सर्वेशः, सदा कारुणिकोऽपि, सन्। संसारतन्त्रवाहित्वात् रक्षापेक्षामपेक्षते।** "எல்லாமறிந்தவர் தான். இவ்விஷயத்தில் எல்லாவகையிலும் பேராளுமை பெற்றவர் தான். எப்போதும் பரிவுள்ளவர்தான்; எப்போதும் இருப்பவர் தான். உலகை ஒரே சீராக நிர்வஹிப்பவரானதால் காப்பிற்கான கோரிக்கையை எதிர்பார்க்கிருர்." என்பது ஒருபக்தரின் அனுபவம். பக்தனுக்கும் எவ்வகையிலும் நிறைவின்மையை உணராததாலும், சாந்தியும் ஆனந்தமுமே ஆட்கொண்டிருப்பதாலும் கோரிக்கை எதுவும் இல்லை.

61. लोकहानौ न चिन्ता कार्या, निवेदितात्मलोकवेदत्वात् ।

**லோக ஹாநெள ந சிந்தா கார்யா, நிவேதித - ஆத்ம - லோக - வேத - த்வாத்**

**लोकहानौ** உலகிடமிருந்து பெறுவதில் குறையிருப்பினும், **चिन्ता न कार्या** கவலை கொள்ளத்தக்கதல்ல **निवेदित-आत्मलोकवेद-शीलत्वात्** தன்னைப்பற்றியும் உலகியல் வேதஇயல் பற்றியும் பொறுப்பைப் பகவானிடம் ஒப்படைத்துவிட்டதால்.

தன்னிலையில் தாழ்வும் உயர்வும், உலகத்திற்குத் தன்கடமைகளை ஆற்றியதும் ஆற்றாததும், வேதமுறைப்படி நடந்ததும் நடவாததும் எனத் தன்னைக் கட்டுப்படுத்தியதனைத்தின் பொறுப்பையும் பகவானிடம் ஒப்படைத்துவிட்டபின், உலகில் தனக்குக் குறை - நிறை நேர்வதைப் பற்றிக் கவலைப்படவேண்டியதில்லை. குறையும் நிறைவும் பகவானைச் சாரும். பகவானிடம் அவை எந்த மாறுதலையும் உண்டாக்க இயலாது.

62. न तत्सिद्धौ लोकव्यवहारो हेयः ।
किंतु फलत्यागः तत्साधनं च ।
ந தத்ஸித்தௌ லோகவ்யபஹாரோ
ஹேய: । கிம் து ப்பலத்யாக: தத்ஸாதநம் ச ।

तसिद्धौ பக்தி நிலைபெறுவதற்காகவும் பெற்றபின்னரும், लोकव्यवहारः உலகுடன் தொடர்பு न हेयः தவிர்க்க வேண்டியதில்லை. किन्तु ஆனால் तत्फलत्यागः அந்தலோக வேதப்பணிகளின் பயனுரிமை வேண்டாதிருப்பதும் तत्साधनं அதற்கேற்பச் செயல்படுவதும் அவசியம்.

பக்தன் உலகப்பற்றை விடுவான். உலகத் தொடர்பை விடமாட்டான். உலகம் அவனுக்கு எதிரியல்ல. வேண்டாததும் அல்ல. உலகில் வாழ்பவர் அனைவரும் அவனது பரிவும் கரிசனமும் தயையும் அன்பும் பெறஉரியவரே. பிறர்வாழ்வதற்கும் உய்வதற்கும் உற்றதை விரும்பிச் செய்வான். சுய நலம் கருதாததால் செய்யும் நற்பணியின் பயனுரிமையை வேண்டாதிருப்பான். அவ்வழியில் எந்த சாதனையையும் வழிபாடு முதலியவற்றையும் விடமாட்டான்.

63. स्त्रीधननास्तिकचरित्रं न श्रवणीयम् ।
ஸ்த்ரீ - தந - நாஸ்திக - சரித்ரம் ந ச்ரவணீயம்.

**स्त्री धननास्तिकचरित्रं** பெண்ணினம், பொருள், கடவுள் - வேத - பரலோகாதிகளில் நம்பிக்கையற்றவர், இவர்களது வரலாறு கேட்கத்தக்கதல்ல.

ஒன்றை நன்கு தெரிந்து கொண்டுதான் ஏற்பதோ தவிர்ப்பதோ முறை. எனினும் தவறு என்று உலகமறிந்ததொன்றைத் தன்னளவில் கேட்டுத் தெரிந்து தான் விலக்குவது என்பது முறையற்றது. ஆணுயின் காமத்தீயை வளர்க்கிற பெண், (பெண்ணுயின் காமத்தீயை வளர்க்கிற ஆண்). பற்றிய செய்தி, பொருளாசையை வளர்க்கக்கூடிய பொருள்பற்றிய செய்தி, கடவுளையும் வினையையும் வேதத்தின் நெறியையும் மறுமையையும் மறுப்பவர் நாஸ்திகர். இவர்களைப்பற்றி உலாவுகிற செய்தி. இவற்றை காது கொடுத்துக் கேட்கக் கூடாது. திடமனமும் உறுதியில் தளரும். சபலம் ஆட்கொள்ளும். பொதுவாக ஆண்களை முன்னிட்டே ருஷிகளின் உபதேசம் நடைபெறும். காம உணர்ச்சியை வளர்த்துத்தவருன பாதையில் பெண்ணின் நினைவு அழைத்துச் செல்லக்கூடுமானதால் பெண்ணினத்தின் வரலாற்றைத் தவிர்க்க உபதேசம். பெண்ணும் இதேகாரணம் கொண்டு ஆணின் வரலாற்றைத் தவிர்ப்பது தான் முறை. பக்திக்கு முதலாவதும் முக்கியமுமான உதாரணம் கோபிகளே, லோபாமுத்ரை போன்ருேர் உபாஸனா மார்க்கத்தின் வழிகாட்டிகள். மற்றும் ஸ்திரீ அனுபவத்திற்கேற்ற பொருள் என்ற நோக்கில்லாமல் ஸஹதர்ம சாரிணியாக வழிபாட்டில் சிறந்த இடம் பெறுகிருள். காம உறவு பற்றிய சிந்தனையைத் தூண்டாமல் தாயன்பின் பரிசயம் தந்து அன்புப்பாதையில் முன்னேற்றுபவள் குருவாகிவிடுவாள். அவர்களைப் பற்றிய செய்தி கேட்க ஏற்றதே.

64. **अभिमानदम्भादिकं त्याज्यम् ।**

**அபிமானதம்ப்பாதிகம் த்யாஜ்யம்.**

**अभिमानदंभादिकं**, தற்பெருமை தற்புகழ் முதலியவை **त्याज्यं** தவிர்க்கத் தக்கவை.

சுய நல சிந்தனையைத்தவிர்க்கப் பல உபாயங்கள் உண்டு. ஆனால் அதில் வெற்றி சிலருக்குச் சில நேரங்களில் மட்டுமே கிட்டும். கடும்பயிற்சி மேற்கொண்டு பழகினாலும், வாஸனையும் ஸம்ஸ்காரமும் எளிதில் அடங்குவதில்லை. அடங்கியது போன்று புலப்படாதிருந்த வாஸனை கணத்தில் ஏதோ ஒன்றால் தூண்டப்பெற்று முன் நிற்கும். அடித்தளமில்லாத செருக்கும் தற்புகழ்ச்சியும் ஸமுதாயத்தின் முன் தன்னைப் பகட்டாகக் காட்டிக் கொள்ள உதவுகிறது. பலரால் மதிக்கப்பெறுவது பெரும் போதை தரவல்லது. தனக்குள் மறைந்துள்ள சிறுமையுணர்ச்சியை மறக்க இது உதவும். அதனால் மனத்தில் ஆழப்பதிந்துள்ள பிறரது நன்மதிப்பை எதிர்பார்க்கிற குணங்களை மாற்றுப் பயிற்சிகள் மூலம் தான் அகற்றமுடியும். கல்வியாலும் குலத்தாலும் அழகாலும் ஆற்றலாலும் மற்றதாலும் நொடிக்கு நொடி அபிமானம் (தற்பெருமை) வளரும். நொடியில் அது குலையக்கூடும். பின்னர் ஏற்படுகிற நிலைகுலைவு தாங்கவொண்ணாதது. பக்தரிடமும் எளிதில் இது இடம்பெறும். எந்தச் செருக்கும் டம்பமும் பகவானிடம் குலைந்து விடும். செருக்கைக் குலைப்பதில் பகவானுக்கு ஆர்வம் அதிகம் போலும் .**यस्य निग्रहं इच्छामि तस्य वित्तं हराम्यहम् । यस्यानुग्रहमिच्छामि तस्य बुद्धिं ददाम्यहम् ।** ''எவரை அடக்க விரும்புகிறேனோ அவனது சுய சம்பாத்திய மனைத்தையும் பிடுங்கிக்கொள்வேன். எவனுக்கு அருள்புரிய விரும்புகிறேனோ அவனுக்கு அறிவைத் தருவேன்'' என்பார் அவர். **दर्पहा दर्पदो दृप्तः** என்று விஷ்ணுஸஹஸ்ரநாமத்துதியில் உள்ள நாமங்கள். சிலரது செருக்கைப் பிடுங்கி எறிவார். சிலருக்குச் செருக்கூட்டி நற்பணியில் ஆர்வத்துடன் ஈடுபடச்செய்வார். சில சமயம் தன்னை மிகுந்த செருக்குள்ளவனாகக்காட்டி அதன் எதிரில் மற்றவரின் செருக்கு தானே அடங்கும்படி செய்வார். பக்தியால் வருகிற செருக்கு தானே அடங்கிவிடும். கல்விகுலம் செல்வம் இவற்றால் வருகிற செருக்கை அடக்குவதற்கான பயிற்சி அவசியம் தேவை.

65. तदर्पिताखिलाचारः सन्; कामक्रोधाभिमानादिकं तस्मिन्नेव करणीयम् ।

**தத்-அர்பித-அகில-ஆசார: ஸன்; காம - க்ரோத - அபிமானாதிகம் தஸ்மின் ஏவ கரணீயம்**

तत् अर्पित अखिल आचारः सन् *தனது அனைத்து நடைமுறைகளையும் தொடர்ந்து பகவானிடமே அர்பணம் செய்தவனாக வேண்டும்.* काम-क्रोध-अभिमानादिकं *காமம் கோபம் அபிமானம் முதலானவற்றையும்* तस्मिन् एव करणीयम् *அவனிடமே கொள்ளவேண்டும்.*

*தனது நடவடிக்கைகள் அனைத்தையும் ஈச்வரார்பணமாகச் செய்யப்பழகவேண்டும். நல்லதையும் கெட்டதையும் தரம்பாராமல் அவனுக்காகவே செயல் படுவதாக உணரவேண்டும். தவறான நடைமுறையையும் பகவானிடம் சேர்ப்பிக்கும்போது மனம் கூசத்தொடங்கும். மெள்ள மெள்ளத்தவறான பாதையிலிருந்து விலகுவதில் உறுதி காணப்பெறும். நல்லதை மட்டுமே, அதிலும் சுய நலக்கலப்பின்றி செய்கிற மனப்பான்மை வலிவுறும். எல்லாவற்றையும் ஈசனிடம் ஒப்படைக்காமல், தன்பங்கில் சுயநலத்தால் செய்கிற தவறான நடைமுறையையும், ஈசுவரனின் பங்கில் சுயநலமற்ற நற்பணியையும் ஒப்படைக்கலாமே ! எனில் அந்தப்பிரிவு எளிதானதல்ல. தவறான பாதையிலிருந்து விலக மனம் வராது. அதனால் தொடர்ந்து தவறு செய்யக் கூடும். அதனால் எல்லாவற்றையும் அவரிடம் ஒப்படைப்பது முதல் பணி. மெள்ளமெள்ள கெட்டதிலிருந்து விலக அதுவே உதவும். காமமும் கோபமும் அபிமானமும் மனத்தைக் கெடுக்கும். அதே காமம் முதலியவற்றை இறைவனிடம் திருப்பினால் அவை குணமாகிவிடும். பகவானுக்குத் தான் தான் மிகவேண்டியவன் எனக்காட்டிக் கொள்வதும் பகவானுக்காகவே எதனையும் விரும்பிப் பெறுவதும் கிடைக்காவிடில் கோபப்படுவதும் பகவானிடம் நெருக்கத்தை வளர்க்கும். அது தானே*

படிப்படியாகத் தூய பக்தியாகிவிடும். அவர் என் எஜமானர். நான் அவரது தாஸன் எனப்பறை சாற்றிக்கொள்ளலாம். அது நல்லபாதைக்கே இட்டுச் செல்லும்.

## 66. त्रिरूप-भङ्ग पूर्वकं नित्यदास्य-नित्यकान्ता-भजनात्मकं प्रेम कार्यम्, प्रेमैव कार्यम् ।

**த்ரிரூப பங்க பூர்வகம் நித்யதாஸ்ய நித்யகாந்தா பஜநாத்மகம் ப்ரேம கார்யம், ப்ரேமைவ கார்யம்.**

**त्रिरूपभङ्ग पूर्वकं** ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்ற பக்தி நிலையையும் ஆர்தன், ஜிஜ்ஞாஸு அர்த்தார்த்தி என்றவையையும் (ஸூ.56) தாண்டி **नित्यदास्य-नित्यकान्ता भजनात्मकं** எப்போதும் அடிமைப்பணியாளனுக அன்பு மனேவியாகப்பழகுவதாகிய **प्रेम कार्यम्-** அன்பை வெளிப்படுத்தவேண்டும். **प्रेमैव कार्यम्** அன்பை மட்டுமே வெளிப்படுத்தவேண்டும்.

ஒரு உண்மையான பணியாளனே அன்பு மனேவியோ, தாற்காலிகமாக அவ்வப்போது தம் தம் விருப்பப்படி என்றில்லாமல், எப்போதும் அன்புக்குரியவனிடம் அன்புடன் பணிபுரிவர். பணிபுரிபவனின் மன நிலேக்கேற்ப அது தாமஸ அன்பாகவோ ராஜஸ அன்பாகவோ ஸாத்விக அன்பாகவோ இருக்கக் கூடும். தொடர்ந்து பழக தாமஸமும் ராஜஸமும் கூட ஸாத்விகமாக மாறிப்பின் மிகத் தூய அன்பாக மாறக்கூடும். அன்பால் தன் எஜமானனுக்குப் பணிவிடை புரிகிறசேவகனும் தன் கணவனுக்குப் பணிவிடை புரிகிற மனேவியும் தூய அன்பின் வெளிப்பாட்டிற்காகவே பணிவிடை புரிவர். அதில் எந்த எதிர்பார்ப்பும் இருக்காது. ஸேவகனின் அன்பு சுயதேவை பூர்த்திக்கு அல்ல. மனேவியின் அன்பு காமநிறைவுக்கல்ல. அன்பை அன்பாக வெளிப்படுத்தவே. தொடர்ந்து எதிர்பார்ப்பின்றி பணிவிடை புரிவர். அதனுல் ஆர்தபக்தி, ஜிஜ்ஞாஸு பக்தி, அர்த்தார்த்தி பக்தி என்ற மூன்றிற்கும் அப்பாற்பட்ட நிலே இது. (ஸூ56.)

# पञ्चमोऽध्यायः-मुख्य भक्तमहिमा

## ஐந்தாம் அத்தியாயம்-முக்ய भक्तमहिमा

## முக்கிய பக்தனின்பெருமை

### 67. भक्ताः एकान्तिनो मुख्याः ।

**பக்தா: ஏகாந்திநோ முக்க்யா: ।**

**एकान्तिनः** ஒரு முனைநோக்குடன் பகவானிடம் அன்பு வைத்துள்ள **भक्ताः** பக்தர்கள் **मुख्याः** முன்னிலையிலுள்ளவர்.

பக்தி என்பது பகவானிடம் முதிர்ந்த அன்புடன் நெருங்குகிற தகுதியைத் தருகிறது. மற்றும் சிலவழிகள் உண்டு. ஆனால் பக்தி இவற்றுள் முதலிடம் பெறுகிறது. இந்த பக்தி பரமாத்மநிலையை நன்கு அனுபவத்திற்குக் கொணர்கிறது. முக்தி ஈடான பெருநிலையை அடையச் செய்கிறது. சிறந்த பக்தன் முக்தியையும் வேண்டேன் என்பான். முக்திபெற பக்தி ஒருஸாதனம் என்பதை அவன் ஏற்பதில்லை. பக்தியை விடச் சிறந்த நிலை ஒன்றில்லை என்பது அவனது திடமானகருத்து. பக்தியால் பக்தியை உணர்வதே அவனது பெரும் நோக்கம். கடலை நோக்கி ஓடும் ஆறுகளுக்குக் கடலில் கலப்பதைத் தவிர வேறு நோக்கமில்லை. கடலை அடைந்ததும் தன் பெயரையும் தனித்தன்மையையும் இழப்பதை உணர்வதில்லை. அது இது என்ற வேற்றுணர்வை இழக்கின்றனர்.

**ता माविदन् मय्यनुषङ्गबद्ध-**
**धियः स्वमात्मानं अदः तथेदम् ।**
**यथा समाधौ मुनयः अब्धितोये**
**नद्यः प्रविष्टा इव नामधेये ॥** (பாகவதம் 11.12.12)

வேறு எந்த நாட்டமுமின்றி ஆத்மானந்தக்கடலில் மூழ்கி ஸமாதியில் ஆத்மானுபவம் பெற்ற முனிவர் போல். பகவானுடன் ஒன்றிவிடுகின்றனர். பகவானைத் தவிர பகவானிடம் இணைவதைத் தவிரவேறு இலக்கு அவர்களுக்கு

இல்லை. அந்த முக்கிய பக்திநிலையில் இந்திர - பிரம்ஹபதவிகளைக் கூட அவர்கள் பொருட்படுத்தமாட்டார். அந்நிலை பெற்றவரைவிடப் பகவானுக்கும் வேறொருவர் அன்புக்குரியவராக மாட்டார்.

**न पारमेष्ठ्यं न महेन्द्रधिष्ण्यं**
**न सार्वभौमं न रसाधिपत्यम् ।**
**न योगसिद्धीरपुनर्भवं वा**
**मय्यर्पितात्मा इच्छति मद् विनान्यत् ॥** *(11.14.14)*

புழுவாகவோ பூண்டாகவோ பிறக்க நேரிடினும் பகவானின் இணக்கம் தான் தேவை. பகவானது ஸங்கமில்லாத பிறப்பிறப்பற்ற நிலை கூட அவரால் வேண்டப்படுவதில்லை. கல்வியாலும் குலத்தாலும் ஏனையதாலும் தாழ்ந்த ஆயர்ப்பெண்கள் தன் நிகரற்ற முக்கியபக்தியால் பகவானை விட்டுப்பிரிந்து வாழ நேர்ந்தபோதும் அவனிடமே மனம் நிலைத்திருந்ததால் எந்தக் குறைவுணர்வையும் கொள்ளவில்லை. ஏகாந்தபக்தி எனும் முக்கியபக்தியின் விளைவு அது.

68. **कण्ठावरोध रोमाञ्चाश्रुभिः परस्परं लपमानाः**
**पावयन्ति कुलानि पृथिवीञ्च ।**

கண்ட்டாவரோத-ரோமாஞ்ச-அச்ருபி: பரஸ்பரம் லபமாநா: பாவயந்தி குலாநி ப்ருதிவீம் ச।

**कण्ठावरोध-रोमाञ्च-अश्रुभिः** தொண்டை தழுதழுத்து பேச்சுத் தடைபடுதல், மயிர் கூச்செரிதல், கண்ணீர்பெருக்கு இவற்றுடன் **परस्परं लपन्तः** ஒருவருக்கொருவர் பகவானுடன் பெற்ற அனுபவத்தை விளக்குபவர்களாக. **कुलानि पृथिवीं च पावयन्ति** தான் பிறந்த குலத்தையும் உலகையுமே தூயதாக்குகின்றனர்.

அவர்களது கணத்திற்குக்கணம் நிகழ்கிற வாழ்க்கை அனுபவம் பகவானுடன் இணைந்ததாகவே அமைவதால்.

உள்ளத்தினுள் குமிழிட்டுப் பொங்குகிற ஆனந்தம் உள்ளத்தினுள் அடங்காமல் தன் அருகில் உள்ளவருடன் அதனைப்பங்கிட விரும்பிப்பேசத் தொடங்கியதும் குரல் தழதழக்கிறது. உணர்வலையின் வேகத்திற்கேற்பச் சொல் வெளியேவராமல் தடைபடுகிறது. உள்ளத்தில் நிறைந்த இனமறியாத ஆனந்தம் உடலின் ஒவ்வொரு ரோமத்தின் வழியே வெளியேற ரோமாஞ்சம் ஏற்படுகிறது. கண்களில் இடையறாத கண்ணீர் பெருகுகிறது. உணர்வைப்புலப்படுத்த இயலாமல் கண்முதலிய பொறிகள் திணறுகின்றன. அந்நிலையே அவர்களது முக்கிய பக்தியைக் காட்டும். அந்நிலை பெறாதவரும் கூட அதனைப்புரிந்து கொண்டு அவர்களுடன் இணைகின்றனர். காந்தம் போல் பக்தி மற்றவரைத் தன்பால் ஈர்க்கிறது. அவர்களது உள்ளம் தூய்மைபெறுகிறது. சூழ்நிலையே தூயதாகி விடுகின்றது.

இந்தக்குரல் தழதழத்தலும் ரோமாஞ்சமும் கண்ணீரும் உள்ளத்தில் நிரம்பியுள்ள இடையறாது பெருகுகின்ற பேரன்பு எனும் ஊற்றின் வெளிப்பாடு. தர்மம் ஸத்தியம் தயை முதலிய உத்தமகுணங்களும் தவமும் உள்ளத்தைத் தூயதாக்குபவையே. எனினும் அன்பின் இடத்தை நிரப்ப அவை போதாதவை. உள்ளத்தைத் தூயதாக்குவதில் பக்திக்கு ஈடு வேறெதுவுமில்லை. அப்பழுக்குகள் தொடர்ந்து ஒட்டவழியின்றி உள்ளத்தை நெகிழ்த்தி குரல் தழதழத்தலும் ஏனையதும் தூய்மைப்படுத்துகின்றன.

भक्त्याऽहमेकया ग्राह्यः श्रद्धया आत्मा प्रियः सताम्।
भक्तिः पुनाति मन्निष्ठा श्वपाकानपि संभवात् ॥
धर्मः सत्यदयोपेतः विद्या वा तपसान्विता।
मद्भक्त्या अपेतं आत्मानं न सम्यक् प्रपुनाति हि ॥
कथं विना रोमहर्षं द्रवता चेतसा विना।
विना आनन्दाश्रुकलया शुद्धचेत् भक्त्या विना आशयः ॥

(பாக 11.14.21.23)

69. तीर्थीकुर्वन्ति तीर्थानि ।, सुकर्मीकुर्वन्ति कर्माणि । सच्छास्त्री कुर्वन्ति शास्त्राणि ।

**தீர்த்தீகுர்வந்தி தீர்த்தானி । ஸுகர்மீ குர்வந்தி கர்மாணி । ஸச்ச்சாஸ்த்ரீகுர்வந்தி சாஸ்த்ராணி ।**

*(முக்கிய பக்தி உள்ளவர்)* **तीर्थानि तीर्थीकुर्वन्ति** *புண்யக்ஷேத்திரங்களை புனிதமாக்குகின்றனர்.* **कर्माणि सुकर्मी कुर्वन्ति** *பணிகளை நற்பணிகளாக்குகின்றனர்.* **शास्त्राणि सच्छास्त्री कुर्वन्ति** *சாஸ்திரங்களை நல்ல சாஸ்திரங்களாக்குகின்றனர்.*

*மனிதனைப் பாபமகற்றி வழிகாட்டிப் புனிதனுக்கிக் கரையேற்றுபவைகளைத் தீர்த்தம் என்பர். புண்யதீர்த்தம் புண்யக்ஷேத்திரம் எனப்படுகிற ஸ்தலங்கள் எண்ணற்றவை. ஆழமும் பரப்பும் வேகமும் மிக்க ஆறுகளில் எளிதில் இறங்கிப்பயமின்றி மூழ்கி எழ நல்லபடித்துறைகள் உண்டு. தூய்மைமிக்க க்ஷேத்திரங்களின் அருகே ஓடுகிற புனித நதியில் இந்தப்படித்துறையும் தீர்த்தமாகும். ஆற்றைக்கடப்பது எல்லா விடங்களிலும் எளிதல்ல. நீரின் வேகம் சுழல் சுறு முதலை போன்ற நீர் வாழினங்களின் பாதிப்பு முதலியவை ஆற்றைக் கடப்பதில் தடையாகும். பெரியோர்கள்முன் சென்றவர்களின் அனுபவத்தால் எளிதில் கடக்கக் கூடிய இடம் எனக்கொண்ட இடமும் தீர்த்தமே பல்வேறு புனிதர்களான பெரியோர்கள் நீராடுமிடம், பகவானின் எண்ணற்றலீலைகளில் பங்குபெற்ற இடம், புண்யக்ஷேத்திரங்களின் அருகில் உள்ள இடம் எனச் சிறப்புற்றதும் தீர்த்தமே. பேரறிவு, தயை, பொறுமை, புலனடக்கம், நேர்மை, தானம் முதலிய பண்புகளும் தீர்த்தத்தன்மை பெற்றவையே. நீராடுவதால் மட்டும் புனிதத்தன்மை வருவதில்லை. மீன் நீரிலேயே எப்போதும் மூழ்கியுள்ளது. தன்னைப்புனிதமாக்கிக் கொள்கிற பேரார்வமும் அந்த புனித தீர்த்தத்தில் புனிதப்படுத்துகிற தன்மை உள்ளதை உணர்ந்து, அதன் புனிதம் கெடாதவாறு பக்தியும் சிரத்தையும் கொண்டு, பகவன்நாம ஸ்மரணத்துடன்*

வெளித்தூய்மையுடன் புனித நீராடுபவனுக்கே அது தீர்த்தமாகிறது.

**गंगादितीर्थेषु वसन्ति मत्स्याः**
**देवालये वृक्षसङ्घाश्च नित्यम्।**
**भावोज्झितास्ते न फलं लभन्ते**
**तीर्थैश्च देवायतनैश्च पुण्यैः ॥** (ஸாத்வதஸம்ஹிதை)

அந்தப் புனித நதிகளும் தீர்த்தங்களும் புனிதத்தன்மை இழக்காதிருக்க பரமபாகவதர்கள் தம்மிடம் நீராட வருவதைப் பெரிதும் எதிர்பார்க்கின்றன.

**भवद्विधा भागवताः तीर्थीभूताः स्वयं विभो।**
**तीर्थीकुर्वन्ति तीर्थानि स्वान्तस्थेन गदाभृता ॥** (பாக1.13.10)

பகவான் தூய்மை தருபவர். அவரது பெயரும் புனிதம் தரும். அவரது நினைவும் புனிதமே. எப்போதும் உள்ளத்தினுள் பக்தியால் பகவானைப் பதித்துக் கொண்ட பரமபக்தர்கள் தீர்த்தர்கள். பாபிகளின் தொடர்பால் புனிதத் தன்மை இழந்த தீர்த்தங்கள் இந்தத் தீர்த்தர்களால் இழந்த தூய்மையை மீண்டும் பெறுகின்றன.

பக்தியுடன் செய்கிற எந்தப்பணியும் புனிதப்பணியாகிறது. பக்திக்கு உதவாத தத்துவஆராய்ச்சி வீணே. பக்திக்கு உதவுகிற சாஸ்திரங்களே நல்வழிகாட்டும். கட்டுப்பாட்டுடன் நல்வழிப்படுத்திக் காப்பதால் தான் அவை சாஸ்திரங்கள். பக்தியின் உயர் நிலையில் உண்மை நிலை தெள்ளெனத் துலங்கும். வாக்கும் தெளிந்த எளிய மொழி பேசும். கேட்கின்ற சீடனின் உள்ளமும் சூழ்நிலையால் தூய்மையும் தெளிவும் பெற்றிருக்கும். அந்நிலையில் உபதேசம் நல்லுபதேசமாகும்.

**70. तन्मयाः**

**தந்மயா:**

**तन्मयाः** (முக்கிய பக்தர்கள் அப்போது) பகவானுகவே உள்ளனர்.

முக்யபக்தர்களின் உள்ளத்தில் அருளேவடிவான பகவான் அந்தர்யாமியாக ஆத்மாவாகப் பேரன்பிற்கு உரியவராகத் துலங்குவதால் பக்தனின் உடலும் பொறிகளும் மனமும் உள்ளமும் அவரது வசத்தில் இயங்குவதால் பக்தர்களும் ராமர் கிருஷ்ணர் போன்று மனித உருவில் நடமாடுகிற தெய்வமாகின்றனர். அதனுல் அவர்களுடன் தொடர்பு கொண்டதனைத்தும் புனிதமும் பெருமையும் பெறுகின்றன.

**71. मोदन्ते पितरः, नृत्यन्ति देवताः सनाथा चेयं पृथिवी।**
**மோதந்தே பிதர:, ந்ருத்யந்தி தேவதா:,**
**ஸநாதா ச இயம் ப்ருதிவீ.**

*(அந்தபக்தரின் அருகாமையில்)* **पितरः मोदन्ते** பித்ருக்கள் மகிழ்கின்றனர். **देवताः नृत्यन्ति** தேவதைகள் கூத்தாடுகின்றனர், **इयं पृथिवी च सनाथा** இந்த பூமியும் பாதுகாப்பாளருடன் கூடியதாகிறது.

நல்ல பக்தனின் பெற்றோர் இவனது பக்தியால் குலமே கரையேறியதாக மகிழ்வர். பக்தனின் பெற்றோர் என உலகமும் பாராட்டும். மறைந்த முன்னோர்களும் நரகபயமின்றி நல்ல நிலை பெற உதவுகிற பக்தனின் செயலால் மேனிலை பெற்று மகிழ்கின்றனர். அக்னிஷ்வாத்தர் முதலிய பித்ருலோக வாஸிகளான நித்ய பித்ரு தேவதைகளும் மகிழ்வர். தன் பித்ருருணம் நீங்கிய பக்தன் தன்முன்னோர்களின் பித்ருருணத்தையும் நீக்குவதால் பித்ருக்கள் மறுபிறவிபயமின்றி மகிழ்வர். இந்திரன் ஸூரியன் யமன் வருணன் வாயு முதலான சிறப்பதிகாரம் பெற்ற தேவர்களும் மகிழ்ந்து கூத்தாடுகின்றனர். உலகம் தன்னைப்பாதுகாக்க தெய்வமே இந்த பக்தர் வடிவில் வந்துள்ளதாக உணரும். தர்மம் நலிந்து அதர்மம் வலிவு பெறும் போது, பூமிதேவி தன்னைப்பாதுகாக்க ஈசனை நாடுகிருள். பூமிதேவியின் எதிபார்ப்பை இந்த பக்தர்கள் நிறைவுறச் செய்வர். தர்மம் வலிவுபெறும். அதர்மம் நலிவுபெறும். பகவானின் பொறுப்பைப் பக்தரும் வகிப்பர்.

72. नास्ति तेषु जाति-विद्या- कुल - धन क्रियादिभेदः।

**ந அஸ்தி தேஷு ஜாதி-வித்யா-குல-தன-க்ரியாதி - பேத:।**

**तेषु** *அவர்களிடம்* **जाति - विद्या - कुल - धन - क्रियादि भेदः** *பிறப்பு, கல்வி, குலம், செல்வம், செயல் முறை முதலியவற்றால் நேர்கிற ஏற்றத்தாழ்வு இல்லை.*

*மனிதர்களிடையே ஏற்றத்தாழ்வுணர்விற்குப் பல காரணமாகின்றன. ஆனால் பக்தியாகிற பேரன்பு நிலைபெற்ற இடத்தில் வேற்றுமை மறைந்து விடும். பக்தனிடம் பிறப்பால் ஏற்றத்தாழ்வில்லை. கல்வியாலும் அறிவாலும் குலத்தாலும் செல்வத்தாலும் ஏற்றத்தாழ்வு இடம்பெறாது. ஆண்-பெண், ஏழை - பணக்காரன், அறிவாளி - அறிவிலி என்ற வேற்றுமை பலனற்றுவிடுகிறது. பக்தி இல்லாத அந்தணன் அறுகுணங்களை இரண்டு மடங்காகப் பெற்றிருந்தாலும் பக்தனை நாயாடியை விடத்தாழ்ந்தவனே.*

**विप्राद् द्विषड्गुण युताद् अरविन्दनाभ-**
**पादारविन्दविमुखात् श्वपचं वरिष्ठम्।**
**मन्ये तदर्पितमनोवचनेहितार्थ-**
**प्राणं पुनाति स कुलं न तु भूरिमानः ॥** (பாக 7.9.10)

73. **यतस्तदीयाः ।**

**யதஸ் ததீயா: ।**

**यतः** *ஏனெனில்* **तदीयाः** *அந்தபகவானைச் சார்ந்தவர்களல்லவா ?*

*பக்தர்கள் ஒரே இனத்தவர். பகவானைச் சார்ந்தது அந்த இனம். இறைவனைப் பற்றிய கேள்வியும் கல்வியும் செல்வமும் அவர்களிடம் செருக்கை ஏற்படுத்தாது. பகவானின் நோக்கில் பிரும்ஹாவும் புழுவும் ஒன்றே. எல்லாம் அவரது படைப்பானதால் அவரது குழந்தைகளே. பக்தி அனுபவ உணர்வால் பகவானனைவரும் கூட. அதனால் ஏற்றத்தாழ்வில்லை.*

74. वादो नावलम्ब्यः ।

வாத: ந அவலம்ப்ய: ।

वादः ஏற்றம் தாழ்வு என்ற விவாதம் न अवलंब्यः ஏற்கத்தக்கதல்ல.

75. बाहुल्यावकाशत्वात् अनियन्त्रितत्वात् च

பாஹுல்ய அவகாசத்வாத், அநியந்த்ரித த்வாத் ச

बाहुल्य अवकाशत्वात् விவாதத்திற்குரிய கோணங்கள் நிறைய இடம்பெறுமாதலாலும், अनियन्त्रितत्वात्च கட்டுப்பாட்டில் அடங்காதிருத்தலாலும் (விவாதம் நல்லதல்ல)

முக்கிய பக்தி நிலைக்கு வந்தவன் ஜாதியையும் மற்றதையும் ஆராய்ந்து ஏற்றத்தாழ்வுகாண முன்வரமாட்டான். தற்பெருமையும் பகட்டுமின்றி எளிய பேரன்புடன் பழகுபவன் தன் நிலையைப் பிறருடையதுடன் ஒப்பிடவோ சீர்தூக்கிப்பார்க்கவோ மாட்டான். அவனுக்கு பிறரது அனுமதியோ கருத்தோ தேவைப்படாது. அன்பால் ஆனந்த நிலைக்கு வந்தவன் எதனையும் எதிர்பார்ப்பதில்லை. அதனால் தன் நிலைபற்றிய வாதவிவாதங்களில் இறங்கமாட்டான். பிறரது வாதவிவாதங்களில் செவிசாய்க்க மாட்டான். மற்றொன்று-வாதவிவாதங்களுக்கு எல்லையில்லை. நம்பிக்கையின்மையும் வாயாடித்தனமும் விவாதத்தை வளர்க்கும். முடிவிற்கு வர இயலாது. குதர்கம் நிலையற்றது. பக்தன் அதில் ஈடுபடக் கூடாது.

76. भक्तिशास्त्राणि मननीयानि । तदुद्बोधककर्माणि करणीयानि

பக்தி சாஸ்த்ராணி மநநீயாநி । தத் - உத்ப்
போதக கர்மாணி கரணீயாநி ।

भक्तिशास्त्राणि பக்தி பற்றி உபதேசிக்கிற நூல்கள் मननीयानि கருத்தில் கொண்டு அடிக்கடி சிந்தித்து மனத்தில் பதிக்கத்தக்கவை. तद् उद्बोधकानि அந்த பக்தி நிலையை தூண்டக் கூடிய कर्माणि செயல்கள். करणीयानि தொடர்ந்து செய்யத்தக்கவை.

பக்தி மார்க்கத்தை விளக்குகின்ற மற்ற நூல்கள் பல. சாண்டில்யரின் பக்தி ஸூத்திரம், ஸ்ரீ ஆசார்ய சங்கர பகவத் பாதர் ஸ்ரீராமானுஜர் ஸ்ரீமத்வாசாரியர், ஸ்ரீ வல்லபாசாரியர், ஸ்ரீ கௌராங்கர், ஸ்ரீரூபகோஸ்வாமி, ஸ்ரீமது ஸூதனஸரஸ்வதீ ஸ்ரீ போதேந்திரஸரஸ்வதீ, ஸ்ரீ ஸதாசிவேந்த்ர ஸரஸ்வதீ, ஸ்ரீ மூகேந்திரஸரஸ்வதீ, ஸ்ரீ ஸ்ரீதர அய்யாவாள் துகாராமர் நாமதேவர் ராமதாஸர், துளஸீதாஸர், ஜ்ஞானேசுவரர், அப்பர் சுந்தரர் ஜ்ஞானஸம்பந்தர் மாணிக்கவாசகர் போன்ற எண்ணற்ற பக்தர்கள், நாயன்மார், ஆழ்வார்கள் என்ற பக்தர்களின் வரிசைமுடிவற்றது. அவர்களின் பாசுரங்கள் பக்தி போதனையில் இணையற்ற ரத்தினங்கள். ஸ்ரீமத் பாகவதம் பக்தியின் பல நிலைகளை பக்த சரித்திரங்களில் பொருத்திக் காட்டியும் பகவான் கிருஷ்ணனின் நேரடி உபதேசங்களைத் தொகுத்துத்தந்தும் மிக மிகச் சிறந்த வழிகாட்டியாகிறது. தாம் உணர்கிற பக்தி நிலைக்கு உரைகல்லாக விளங்குபவை அவை. முக்கிய பக்தி நிலை மனம் - வாக்கிற்கு எட்டாத தொன்று. அனுபவமிக்க அந்த மகான்களின் உபதேசம் வழியைத் தெளிவுபடுத்தப்பெரிதும் உதவும். அவற்றை மனனம் செய்வது சிறந்தது. இது வரை நடைமுறையில் பழகாத பலமுறைகள் அவற்றில் காணப்படலாம். அவற்றைப் பழகி மேலும் பக்தியைத் திடப்படுத்திக் கொள்ளலாம்.

77. सुख - दुःखेच्छा - लाभादित्यक्ते काले,
प्रतीक्ष्यमाणे क्षणार्धमपि व्यर्थं न नेयम् ।

**ஸுக-து:க்க - இச்சா - லாபாதித்யக்தே**
**காலே ப்ரதீக்ஷ்யமாணே க்ஷணார்த்தம் அபி**
**வ்யர்த்தம் ந நேயம்.**

सुख-दुःख-इच्छा-लाभ-आदित्यक्ते இன்பம் துன்பம் விருப்பம் லாபம் என்ற பல நாட்டங்கள் அற்ற काले நேரம் प्रतीक्ष्यमाणे எதிர் பார்க்கப்படுகிற போது, क्षणार्धमपि அரை நொடி கூட व्यर्थं வீணுக न नेयं கழிக்கப்படக்கூடாது.

பக்தன் தன் மனத்தில் இன்பம் துன்பம் ஆசை லாபம் என்ற வெளிப்பொருளாசையால் ஏற்படுகிற பலவற்றைப் பின்பற்ற நேரம் தராமல் நேரமனைத்தையும் பக்திஸாதனையில் செலவிடவேண்டும். பக்தியுணர்வு முற்றிவிட்ட நிலையில் கூட வெளிப்பொருள்நாட்டம் பக்தி உணர்வைத் தளரச் செய்ய வல்லது. சிறிதளவில் கூட அந்நாட்டம் இடம்பெறக் கூடாது. அந்த நாட்டத்திற்காகப் பயன்படுகிற கணப்பொழுதும் வீணே. தமோகுணம் இடம்பெற்றால் அவ்விடைவெளியில் ரஜோகுணமும் நுழைந்து விடும். பின் மீள்வது எளிதல்ல. பராபக்தி நிலைபெற்றாலன்றி அபாயநிலை தோன்றக்கூடும். மூவுலகமும் மதிக்கத்தக்க பெருமை நெருங்கும் போதும் பகவானின் நிலைத்த நினைவு மனத்தில் பதிந்திருக்கவேண்டும். கணநேரம் கூட திருவடித்தாமரைகளை விட்டு மனமகன்று நிற்கக்கூடாது. அவனே பக்தியின் உயர்நிலையை உணரமுடியும்.

त्रिभुवन विभवहेतवेऽप्यकुण्ठ-
स्मृतिः अजितात्मसुरादिभिर्विमृग्यात्।
न चलति भगवत्पदार विन्दात्
लवनिमिषार्धमपि यः स वैष्णवाग्रः ॥ பாக11.2.53

நொடிப்பொழுதும் அவன் தான் மறவாதிருக்க அவன் அருள்பெறவேண்டும்.

## 78. अहिंसा- सत्य - शौच- दया- आस्तिक्यादि चारित्र्याणि परिपालनीयानि ।

**அஹிம்ஸா-ஸத்ய-சௌச-தயா-ஆஸ்திக்யாதி சாரித்ர்யாணி பரிபால நீயாநி ।**

**अहिंसा - सत्य - शौच - दया - आस्तिक्यादि चारित्र्याणि** பிறரைத் துன்புறுத்தாமை, உண்மை பேசுதல், உள்வெளித் தூய்மை, தயை, பகவானிடமும் வேதத்திடமும் மறுமையிலும் நம்பிக்கை. முதலிய ஒழுக்கங்கள் **परिपालनीयानि** தொடர்ந்து பின்பற்றத்தக்கவை.

*ஸிரவணம் மனனம் நிதித்த்யாஸனம் என்ற மூன்றும் பகவானிடம் பக்தி வளரச் சிறந்த உபாயங்கள். (ஸூ 76) அந்த உபாயங்கள் மனமும் பொறிகளும் அடங்கியிருந்தால் தான் பலன் தரும். அஹிம்ஸை முதலியவை அதற்கான பயிற்சிகள். யம நியமங்கள் எனப்படுபவை. நல்லொழுக்கங்கள் பழகிப்பழகி இயல்பாகி உதவினால் தான் மேனிலை நிலைக்கும். அமாநித்வம் அதம்ப்பித்வம் என்று பகவத்கீதையில் கூறப்பட்டுள்ள தைவஸம்பத்து பெற இவை தான் உதவும்.*

**मा हिंस्यात् सर्वा भूतानि** *உயிரினம் அனைத்தையும் மென்மையுடன் அன்புடன் அணுகவேண்டும். ஹிம்ஸிக்காதிருத்தல் என்ற ஒழுக்கம் ஸர்வபூத தயையாக உருவாகும். ஸத்யம் என்பது உள்ளத்தில் பகவான் உள்ளதை உணர்ந்ததைக் காட்டும். வெளியிலுள்ளவரிடம் பொய் சொல்லித்தப்பிக்கலாம். இதயத்திலுள்ளவரை ஏமாற்ற இயலாது. விளையாட்டாகக்கூட பொய் சொல்ல நாக்கு கூசும்.*

*உள்ளும் புறமும் தூய்மையைக் கடைபிடிக்க வேதத்திலும் ஸ்மிருதிகளிலும் கூறப்பெற்ற ஆசார அனுஷ்டானத்தில் நிலைபெறலாம். பகவான் தூய்மையின் உருவம். அவனிடம் அணுக தூய்மை பெரிதும் உதவும். தயை எல்லா உயிரினமும் நம்மைச் சார்ந்தவர் என்ற எண்ணத்தை வலிவடையச் செய்யும். ஹிதமும் சுபமும் தனக்கு எவ்வாறு அமைவதை விரும்புகிறானோ, அவ்வாறே எல்லா உயிரினமும் ஹிதமும் சுபமும் பெறுவதை தயை விரும்பச் செய்யும். எதிரியிடமும் இந்த தயை பரவும். அவ்யாஜ கருணை அஹேதுக தயை என எந்த எதிர்பார்ப்பு மற்ற நற்பண்பு இது.*

*முன்னோர் சென்ற நல்வழியை ஐயமின்றிப் பின்பற்ற ஆஸ்திக்யம் நம்பிக்கை தரும். ஸ்ரீமத் பாகவதத்தில் பகவான் உத்தவருக்கு இவைபற்றி விளக்குகிறார். (11.19.33.38)*

**अहिंसा सत्यमस्तेयं असङ्गो ह्रीरसञ्चयः ।**
**आस्तिक्यं ब्रह्मचर्यं च मौनं स्थैर्यं क्षमाऽभयम् ॥**
**शौचं जपस्तपो होमः श्रद्धाऽऽतिथ्यं मदर्चनम् ।**

तीर्थाटनं परार्थेहा तुष्टिराचार्यसेवनम्।
एते यमाः सनियमाः उभयोर्द्वादश स्मृताः ॥

पुंसामुपासिता स्तात यथा कामं दुहन्ति हि।

அஹிம்ஸை ஸத்யம் பிறர்பொருள் பறிக்காமை, ஒட்டுதலின்றி செயல்படுதல், தவறுனதைச் செய்வதைத் தடுக்கிற நாணம், தேவைக்கு மீறிப்பொருள் சேமியாமை, ஆஸ்திக்யம், பிரும்ஹசர்யம், மௌனம், மன உறுதி, பொறுமை, எல்லோருக்கும் அபயம், என்ற 12 யமங்கள், தூய்மை, ஜபம், தவம், ஹோமம், சிரத்தை, அதிதியை உபசரித்தல், பகவானின் வழிபாடு, புனித நீராடுதல், பிறருக்கு உதவுகிற பண்பு, மனநிறைவு, குருவழிபாடு என்ற நியமங்கள். மேனிலைக்கு இட்டுச் செல்கிற நற்பண்புகள்.''

79. सर्वदा सर्वभावेन निश्चिन्तैर्भगवानेव भजनीयः ।

ஸர்வதா ஸர்வபாவேந நிச்சிந்தை: பகவானேவ பஜநீய:।

**सर्वदा** எப்போதும் **सर्वभावेन** முழுஈடுபாட்டுடன் **निश्चिन्तैः** வேறுவகை சிந்தனையின்றி **भगवानेव भजनीयः** பகவானே வழிபடத்தக்கவர்.

முக்கிய பக்தி வளர்வதில் எந்த வழி நல்லது ? என்ற சிந்தனைக்கு இடமில்லை. எப்போதும் பகவானைப்பற்றிய சிந்தனையும் அவரை வழிபடுதலுமாக உள்ளத்தை முழுவதுமாக பகவானிடம் ஒப்படைக்கவேண்டும். முழு கவனமும் போக்கும் செயலும் பகவானுக்கே என்ற பாவனை நிலைக்க வேண்டும்.

80. सः कीर्त्यमानः शीघ्रमेव आविर्भवति अनुभावयति च भक्तान् ।

ஸ: கீர்த்யமான: சீக்க்ரமேவ ஆவிர்ப்பவதி, அனுபாவயதி ச பக்தான்.

कीर्त्यमानः தொடர்ந்து பகவானின் புகழ்பாடப்பெற, सः அந்த பகவான் शीघ्रमेव आविर्भवति விரைவில் முன் தோன்றுகிறார். भक्तान् अनुभावयति च பக்தரைத்தன் நிலையை உணரச் செய்கிறார்.

மனம் ஒன்றி, வேறு சிந்தனையற்று பகவானைப் பாடுபவரின் முன் அவர் தோன்றுகிறார். பகவான் இருக்குமிடமே வைகுண்டமும் திருப்பாற்கடலும். ஸாலோக்யமும் ஸாமீப்யமும் கிட்டுகின்றன. அருகில் தோன்றித் தனது பரமாத்ம நிலையை பக்தன் உணரும்படி செய்வதால் ஸாயுஜ்யமும் கிட்டும். ஸகுணராகப்பகவானை வழிபட்டு வந்தவனும் அவரது நிர்க்குண நிலையை உணர்கிறான். பேரன்பு பற்றற்ற நிலைக்குக் கொண்டு செல்கிறது. கர்மயோகம் ஜ்ஞானயோகம் என்ற இருவழிகளால் பெறத்தக்க பெருநிலை பக்தியோகத்தால் கிட்டுகிறது. பக்தியோகத்தின் உயர் நிலை அவ்விருயோக நிலைகளாகவே மாறி விடுகின்றது. அந்நிலையில் ஜ்ஞானமா பக்தியா என்ற பாகுபாடும் மறைகிறது.

81. त्रिसत्यस्य भक्तिरेव गरीयसी, भक्तिरेव गरीयसी ।

**த்ரிஸத்யஸ்ய பக்திரேவ கரீயஸீ, பக்திரேவ கரீயஸீ.**

त्रिसत्यस्य மூன்று நிலைகளிலும் உண்மைப் பொருளானவரின் भक्तिरेव பக்தியே गरीयसी உயர்ந்தது. भक्तिरेव பக்தியே உயர்ந்தது.

பக்தி தொடங்கும்போது பகவான் என்பவர் தோற்ற அளவில் மெய்யானவர், நடைமுறையில் உணரமுடியாதவர் எனக் கண்டு வழிபடுவர். இந்தப் பிராதிபாஸிக ஸத்ய நிலை தொடரப்பகவானின் வழிபாடும் தொடர, நடைமுறையிலும் பகவானை உணர முடிந்ததும் நம்பிக்கை வலுத்தது. வியவஹாரதசையில் பகவானின் தொடர்பு ஆழம் காணமுற்பட்டதும் பகவானிடம் பெற்றோர் நண்பன் ஆசாரியன் பாதுகாப்பாளன் என்றெல்லாம் பாவனை வலுத்து

அவரது அருகாமை பெரிதும் விரும்பப்பெற்று நெருக்கம் உணர்வளவில் வலுத்தது. சிறிது சிறிதாக அவரது பரமார்த்த நிலை உணரப்பெற, உலகைப் படைத்துக்காத்து மறையச்செய்பவரே நம் வழிபாட்டிற்கு இணங்கி ராமராக கிருஷ்ணராக நம்முடன் உறவாடுகிறார் என்ற உணர்வு வலுத்தது. உலகைப் படைப்பவரே என்னையும் தன்னிடமிருந்தே படைத்துள்ளார் என்ற பேருண்மை துலங்கியது. நான் அவரைச் சார்ந்தவன். கடலின் அலைபோல் அவரின்றி என்தனி இருக்கை மெய்யல்ல. ஆத்மாவாக எல்லா உயிரினத்தினுள்ளும் நுழைந்து அததனை அததாகச் செயல்படச் செய்பவரிடமே நான் சரண்புகுந்துள்ளேன் என்றெல்லாம் பலகோணங்களில் கண்டு அவரை நான் இவ்வாறு வழிபடப்பக்தியே சிறந்த ஸாதனமாகியது; பிறகு அந்தபக்தியே ஸாதித்துப்பெற வேண்டிய பேறு எனப் பக்தியையே பேணி வளர்க்க முனைவு ஏற்பட்டது பின் பக்தியால் கடலில் கலந்த ஆறுபோல் தன் தனி இருக்கை தானே விலக, பேரிருக்கையில் கலந்து "ஒன்றுனோம்" என்ற எண்ணத்தையும் இழந்து பரமார்த்த நிலையை ஸமாதியில் உணர்ந்தாலும், ஸமாதி கலைந்ததும் அந்த உணர்வு தொடர வாயிலிட்ட கற்கண்டைச் சுவைப்பது போல பக்தியின் உயர்வை உணர்கிறோம். இந்த பக்திக்குப் படிகள் பதினொன்று அவையாவன—

82. गुणमाहात्म्यासक्ति - रूपासक्ति - पूजासक्ति - स्मरणासक्ति - दास्यासक्ति-सख्यासक्ति वात्सल्यासक्ति-कान्तासक्ति आत्मनिवेदनासक्ति- तन्मयतासक्ति- परमविरहासक्ति-रूपा एकधापि एकादशधाभवति ।

குணமாஹாத்ம்யாஸக்தி - ரூபாஸக்தி - பூஜாஸக்தி-ஸ்மரணாஸக்தி - தாஸ்யாஸக்தி - ஸக்க்யா ஸக்தி - வாத்ஸல்யாஸக்தி -காந்தாஸக்தி- ஆத்மநிவேதநா ஸக்தி - தந்மயதாஸக்தி - பரமவிரஹாஸக்திரூபா ஏகதாஅபி ஏகாதசதா பவதி ।

*(பக்தியானது)* **एकधा अपि** *ஒரேவிதம் தான் எனினும்* **गुणमाहात्म्यासक्ति** - *(பகவானின்) தெய்வத்தன்மையின் சிறப்பில் ஈடுபாடு,* **रूपासक्ति** - *அழகில் ஈடுபாடு,* **पूजासक्ति** - *வழிபாட்டில் ஈடுபாடு,* **स्मरणासक्ति** *நினைப்பதில் ஈடுபாடு,* **दास्यासक्ति** - *அடிமைபூண்டு பணிவிடையில் ஈடுபாடு,* **सख्यासक्ति** - *நட்பில் ஈடுபாடு,* **वात्सल्यासक्ति**- *தாயன்பு கொள்வதால் ஈடுபாடு,* **कान्तासक्ति** *மனைவியின் அன்பு கொள்வதால் ஈடுபாடு,* **आत्मनिवेदनासक्ति** *தன்னை ஒப்படைப்பதில் ஈடுபாடு,* **तन्मयतासक्ति** *அவராகவே ஆவதில் ஈடுபாடு,* **परमविरहासक्तिरूपा** *அவரது பிரிவாற்றாமையால் துன்புறுவதில் ஈடுபாடு, என்றவாறு* **एकादशधा भवति** *பதினொருவிதமாகிறது.*

*பக்திஎனும் பேரன்பு பகவானுடன் பிணைத்தது. அதனால் பெறுகிற ஆனந்த நிலை வேறுபாடற்றது. ஆனந்தக்கடலில் அமிழ்ந்த நிலை. எனினும் அந்த இணைப்பை - பிணைப்பைப்பெற பல வழிகளைக் கையாளலாம். அன்புணர்வு உறுதிபெற இவை பயன்படும். பகவானுடன் ஒன்றிப் போவதே மேலான நோக்கம் எனினும் மனம் ஒன்றி நிற்கச் சாதனங்கள் பல. தான் இதுகாறும் பலவற்றில் ஈடுபாட்டை உணர்ந்தவன், பகவானிடம் பக்தி உணர்ந்ததும் மற்றவற்றில் ஈடுபாடு காண்பதில்லை. பகவானிடம் ஈடுபாடு கொள்ளவும் அந்த ஈடுபாடுவலுக்கவும் பல ஸாதனங்கள் உள்ளன.*

*1. பகவானின் லீலைகள், அருஞ்செயல்கள் வியக்கத்தக்கவை. அவை மனத்தில் பதிகின்றன. மேன்மேலும் அவரது குணச்சிறப்பைக் கேட்பதிலும் சொல்வதிலும் புகழ்ந்து பாடுவதிலும் ஆர்வம் கூடுகிறது. இது குணமாஹாத்ம்ய ஆஸக்தி.*

*2. லீலையாகப் பகவான் எடுத்துக் கொண்ட பல மூர்த்திகளின் அழகு மனத்தைக் கவர்கிறது. தோள் கண்டார்*

தோளே கண்டார் என்பது அனுபவம். புல்லாங்குழலே ஊதுபவஞக கால் மாற்றி மரத்தினடியில் நிற்பவஞக பசுக்களும் கன்றுகளும் காதுகள் குவித்து அந்தப்பாட்டைக் கேட்பதாக ஒருகாட்சி அது மனத்தைவிட்டகல்வதில்லே. இது ரூபாஸக்தி.

3. அவரை வழிபடத் தொடங்கியவன் புற உலகையே மறக்கிருன். இது பூஜாஸக்தி.

4. ஏகாந்தத்தில் அமர்ந்தவன் பகவானின் லீலேகளே இனிக்க இனிக்க மனத்தினுள் நிஜனவலேயாகக் கண்களே மூடிச்சுவைக்கிருன். இது ஸ்மரணாஸக்தி.

5. பகவானேயே சேதனஞகத் தன்னுடன் உலாவருவதாகக் கண்டு அவனது அடிமையாகிக் குற்றேவல் புரிகிருன். இது தாஸ்யாஸக்தி.

6. பகவானிடம் நட்புணர்வு கூடி அவருடன் ஸமநிலேயில் பழகுவது ஸக்க் யாஸக்தி.

7. பகவானேப் பேதைச் சிறுவனாக்கித் தாயன்பைக் காட்டுவது வாத்ஸல்யாஸக்தி.

8. கணவஞக மதித்து அன்புமனேவியாகப் பணிவிடைபுரிவது காந்தாஸக்தி.

9. தன் வாழ்வின் முழுப்பொறுப்பையும் அவரிடம் ஒப்படைத்துச் சுமை நீங்கி அவரது திருவடிகளில் இளேப்பாறுவது ஆத்மநிவேதனாஸக்தி.

10. உலகின் கண்களில்பித்தஞகத் தோன்றினுலும் தானே பகவாஞகி விட்டதாக உணர்வதால் தன்னிச்சையாலன்றி பகவானின் செயல்கள் அவனிடமிருந்து வெளிப்படுவது தன்மயதாஸக்தி.

11. பகவான் தன்னே விட்டகன்று விட்டதாகக் கருதி அந்த பிரிவாற்ருமை தாளாமல் கதறி அழுது அலேந்து பகவானேத் தேடுதல் பரம விரஹாஸக்தி

பகவானிடம் அன்பை இன்னம் பல வழிகளில் உணர்ந்தவருண்டு. ஒருவரிடமே மாறி மாறி இந்த ஆர்வம் வெளிப்படலாம். இதற்கு அளவீடும் ஒப்பீடும் இல்லை.

நாரதர், கோபிகள், அம்பரீஷர், ப்ரஹ்லாதர், உத்தவர், அர்ஜுனன், பலி, விபீஷணர். ருக்மிணி, ஸத்யபாமை, சபரீ, ஸனத்குமாரர், ஹனுமான் முதலிய புராண புருஷர்களும், நாமதேவர், தியாகையர், போதேந்திரர், ஸதாசிவப் பிரம்ஹம்முதலிய பல பக்தர்களும் விதவிதமான பக்தி உணர்வைச்சுவைத்தவர்கள். ஆழ்வார்களும் நாயன்மார்களும் தாம் பெற்ற பக்தி அனுபவத்தை நாமும் பெற. பாசுரங்களாக வடிவமைத்துள்ளனர். நாரதர் இவர்களில் பலருடன் நேரில் பழகியவர். அவர்களின் பக்தி உணர்விற்கு வழிகாட்டியவரும் கூட. பக்தியுணர்வு என்பது ஒன்றேயாயினும் அதனை அனுபவிக்கிற பாங்கு அவர்களிடம் பலவாறு காணப்பட்டதை இந்த பதினொரு ஆஸக்திகளாகத் தொகுத்துத் தந்துள்ளார். தானே பக்திக்கு வழிகாட்டி என்ற இறுமாப்பிற்கு இடம் கொடுக்காத நாரதர், பக்திக்கு வழிகாட்டிகளாகத் திகழ்ந்த பலரை அறிமுகப்படுத்துகிறார்.

83. इत्येवं वदन्ति जनजल्पनिर्भयाः एकमताः कुमार-
व्यास - शुक - शाण्डिल्य - गर्ग - विष्णु -
कौण्डिन्य- शेष - उद्धव - आरुणि - बलि -
हनुमद्- विभीषणा - दयः भक्त्याचार्याः ।

**இதி ஏவம் வதந்தி ஜந ஜல்ப நிர்ப்பயா:
ஏகமதா: குமார - வ்யாஸ - சுக - சாண்டில்ய-
கர்க - விஷ்ணு - கௌண்டின்ய - சேஷ -
உத்த்தவ - ஆருணி - பலி - ஹனுமத்-
விபீஷணா தய: பக்த்யாசார்யா: ।**

एवं இவ்வாறு कुमार........विभीषणादयः ஸனத்குமாரர் வியாஸர், சுகர், சாண்டில்யர், கர்கர், விஷ்ணு, கௌண்டின்யர். ஆதிசேஷர், உத்தவர், ஆருணி, பலி, ஹனுமான், விபீஷணர்

முதலானோர். भक्त्याचार्याः பக்தியின் ஆசார்யர்களாக, जनजल्पनिर्भयाः மக்கள் பேசுவதில் அஞ்சாதவர்களாக, एकमताः ஒரேநோக்குள்ளவராக, इत्येवं वदन्ति இவ்வாறு கூறுவர்.

பக்தியை மேலானதென அறிந்து நடைமுறையில் பழகி இயல்பாக்கிக் கருணையால் பிறருக்கும் உணர்த்தி அவ்வப்போது வழிகாட்டிப் பக்தி உணர்வைப் புகட்டியவர் பலர். அதில் முதலிடம் பெறுவது நாரதரின் குருவான ஸனத்குமாரர். அவரே ஸ்கந்தன் எனப்படும் குமாரன் என உபநிடதம் கூறும். நாரதர் பதினெட்டு வித்யாஸ்தானங்களின் கரைகண்ட பின்னும் உண்மைப்பொருளை உணர முடியாமல் ஸனத்குமாரரை அணுகிப் பரம்பொருளைப் பற்றித் தெளிவுபெற்றார். பன்னூலறிவு பயன்படாத நிலையில் நாரதருக்கு ஸநத்குமாரர் நாமம், வாக்கு மனம், ஸங்கல்பம், சித்தம், தியானம், விஜ்ஞானம், பலம், அன்னம், நீர், தேஜஸ், ஆகாசம், நினைவாற்றல், ஆசை, ப்ராணன், பூமவித்யை என்று வரிசையாகப் பல ஆத்மதத்துவத்தின் அருகே அழைத்துச் செல்வதை உணர்த்துகிறார். (சாந்தோக்யம்) ஸனத்குமாரரே சிவனும் பார்வதியும் வேண்ட அவர்களுக்குக் குமாரராக குமரக்கடவுளாகப் பிறக்கிறார் எனத் திரிபுராரஹஸ்யம் கூறும். வியாஸரும் சுகரும் உத்தவரும் ஸ்ரீமத் பாகவதத்தில் பக்தி நிலைபற்றி உணர உதவியவர். சாண்டில்யர் பக்திஸூத்ரத்தை தர்சன வழியில் விளக்கியவர். சாண்டில்ய வித்யை என்றொரு தத்துவ விளக்கமுறை சாந்தோக்ய உபநிஷத்தில் உள்ளது. கர்கருஷி சிவனிடமிருந்து 64 வித்யைகளைப் பெற்றார். கண்ணனுக்குக் கோகுலத்தில் பெயரிட்டவர். கர்கரின் மகள் வாசக்னவீ உபநிஷத்துகளில் புகழ் பெற்றவள். விஷ்ணு என்ற ருஷிஸ்மிருதி எழுதியவர். விஷ்ணுவின் அவதாரமான கிருஷ்ணன் உத்தவர் அர்ஜுனன் முதலானோருக்குப் பக்தி பற்றி உபதேசித்தவர். பாரதம் சாந்தி பர்வத்தில் நாராயணீயம் என்ற பகுதி பக்தியைப் பெரிதும் விளக்குகிறது. சாண்டில்யரின் குமாரரான கௌண்டின்யர் சிறந்த பக்தர். ஆதிசேஷன் பகவானின் பணிவிடையில் முதலிடம் பெற்றவர். விபீஷணரும் ஹனுமாரும் சிறந்த ராமபக்தர்கள்.

பலியின் வாயிற் காப்பாளுக இருப்பதில் ஹரி பெருமை அடைகிருர் (ராமா - உத்தர) ஆருணி சிறந்த பிரும்ஹஜ்ஞானி (சாந்தோக்யம்) இவ்வாறு பக்தியில் திளைத்த சிறந்த ஜ்ஞானிகள் அனைவரும் நாரதரின் பக்தி பற்றி இந்நூலில் தந்துள்ள விளக்கங்களை முழுதும் ஏற்பர்.

பக்தனை மூடநம்பிக்கை கொண்டவன், பித்தன், அசடு என்று பொதுமக்களிடையே கருத்து நிலவும். ஏதேனும் அதிசயம் நிகழ்ந்தால் தாற்காலிகமாக நம்புவர். அதனுல் பொதுமக்களின் பழிப்பு பற்றிச் சிந்தியாதவரே பக்தியில் உறுதிபெறுவர். வழியிலும் நடை முறையிலும் வேறுபாடு காணப்பெறினும் பக்தியுணர்வின் உச்சநிலையில் பெறும் ஆனந்தத்தில் வேறுபாடில்லை.

**84. य इदं नारदप्रोक्तं शिवानुशासनं विश्वसिति, श्रद्धत्ते, स भक्तिमान् भवति, सः प्रेष्ठं लभते, सः प्रेष्ठं लभते । ओं तत्सत् ।**

**ய: இதம் நாரதப்ரோக்தம் சிவானு சாஸனம் விச்வஸிதி, ச்ரத்த்தத்தே, ஸ: பக்திமான் பவதி, ஸ: ப்ரேஷ்ட்டம் லபதே ஸ: ப்ரேஷ்ட்டம் லபதே ஓம் தத்ஸத்**

**यः** எவர் **इदं नारदप्रोक्तं शिवानुशासनं** நாரதரால் கூறப்பட்ட மங்களமான பக்திவிளக்கத்தை **विश्वसिति श्रद्धत्ते** நம்புகிருனே ஆர்வத்துடன் பின்பற்றுகிருனே, **सः भक्तिमान् भवति** அவன் பக்தியுள்ளவனுகிருன். **सः प्रेष्ठं लभते सः प्रेष्ठं लभते** அவன் மிக மிக இனிய மேனிலையைப் பெறுகிருன். அவன் மிக மிக இனிய மேனிலையைப் பெறுகிருன்.

பக்தி ஸூத்திர நூலின் முடிவுரை. பக்திமுறை பற்றி அறியவிரும்புபவன் பக்தி மூலம் ஈசனை அணுகுவதில் ஆர்வத்துடன் முன்வரவேண்டும். நாரதர் முற்பிறவியிலும் இப்பிறவியிலும் தான் பெற்ற அனுபவத்தின் அடிப்படையில்

எளிதில் பின்பற்றக்கூடிய முறைகளை உபதேசித்துள்ளார். அனுபவத்தை ஆதாரமாகக் கொண்ட உபதேசமானதால் நம்பி ஆர்வத்துடன் நடைமுறைக்குக் கொணரக்கூடியதே. சிவமெனப்பரம்பொருளைக் கூறுவர். शान्तं शिवं अद्वैतम् । (மாண்டூக்யம்). அதனைப் பற்றிய உபதேசமிது. ब्रह्म तन्मङ्गलं परम् அந்தப் பரம்பொருள் மேலான சிறந்த மங்களமானது. அதனைப் பற்றி அறிந்து ஈடுபட்டு ஆர்வத்துடன் பயின்று பக்தியால் இயல்பாக்கிக் கொள்வது பரபக்திநிலை பெற உதவும். பரபக்திநிலைபெறுவதே மிகமிக விரும்பத்தக்கதும் கூட விச்வாசமும் சிரத்தையும் அதில் உதவும். சிறந்த பக்தனுவதே வாழ்வின் உச்சநோக்கு. அதனை இதனுல் பெற முடியுமென்பதே நாரதரின் அருள்வாக்கு. பகவானின் அருளால் அந்நிலை பெறுவோமாக.

पदे पदे यथा भक्तिः पादयोस्तव जायते।
तथा कुरुष्व देवेश नाथस्त्वं नो यतः प्रभो ॥
तन्मे सततयुक्तस्य भजतः प्रीतिपूर्वकम्
प्रदेहि बुद्धियोगं तं येन त्वामुपयाम्यहम् ॥

''இறைவ ! உம் திருவடிகளில் மனம் அன்புடன் பதியும்படி ஒவ்வொருநொடியிலும் உதவுவீர். நீர்தான் எனக்கு நாதன். அப்படி எப்போதும் உம்முடன் அன்புடன் மனத்தால் இணைந்த எனது அறிவு உம்மைச் சென்றடைகிற வழியில் செல்லும்படி அருள்வீர்.''

